# ஸ்ரீ க்ருஷ்ண கர்ணாமிர்தம் மற்றும் ஞானப்பான



மலையாளத்தில் :
"பக்தகவி" பூந்தானம்

தமிழில் :
கீதா கல்யாண்



தமிழகப் பக்தகோடிகளுக்கு
இந்நூல் அர்ப்பணம்!



# ஸ்ரீ க்ருஷ்ண கர்ணாமிர்தம்

மற்றும்

# ஞானப்பான

தமிழாக்கம் செய்யப்பட்ட மலையாளப் பாசுரங்கள், அவற்றிற்கான
பதவுரை, பொழிப்புரை, முழுவிளக்கம் கொண்ட நூல்

மலையாளத்தில் இயற்றியவர் :

**பக்தகவி பூந்தானம்**

தமிழில் விளக்க உரை :

**கீதா கல்யாண்**




4/50, நான்காவது தெரு, சபாபதி நகர்,
மூவரசன்பேட்டை, சென்னை – 600 091.
☎ : 22474041 / 9952913872

முதல் பதிப்பு : டிசம்பர் 2011

உரிமை : ஆசிரியருக்கு

**ISBN** : **978-81-86690-09-3**
**(International Standard Book No.)**

**விலை :**
**ரூ.80/-**

நூல் தலைப்பு : **க்ருஷ்ண கர்ணாம்ருதம்** மற்றும் **ஞானப்பான**

நூல் வகை : பக்தி இலக்கியம் (மொழிமாற்றம் செய்யப்பட்ட நூல்)

பக்கங்கள் : 192

எழுத்து அளவு : 12 புள்ளி

நூல் அளவு : 18 x 12.5 cms.

தாள் தரம் : 14.4

ஒளி அச்சு : ஹடெக் கிராப்பிக்ஸ்
சென்னை –91. ☎ :42305115

அச்சிட்டோர் : நடராஜ் ஆப்செட் பிரிண்டர்ஸ்,
சென்னை – 600 005.

நூல் கிடைக்குமிடங்கள் : P.S. கல்யாண்
12/1, ஆதித்யா அடுக்கம்,
மூன்றாவது கிராஸ், டிரஸ்ட் புரம்,
கோடம்பாக்கம், சென்னை – 24.
தொலைபேசி : 044 – 23725084
மற்றும்
**பாற்கடல் பதிப்பகம்**
4/50, நான்காவது தெரு,
சபாபதி நகர், மூவரசன்பேட்டை,
சென்னை–91. ☎ : **2247 4041**



# மொழி பெயர்ப்பாளரின் உரை

இயற்கை எழில் கொஞ்சும், பச்சைப்பசேல் என்று நீர்வளம் நிலவளம் செழிக்கும், பரசுராமக்ஷேத்ரமாம் கேரளத்தின் பாலக்காடு ஜில்லா சிற்றூர் என்னும் சிறு கிராமத்தில் சுமார் அறுபத்து மூன்று ஆண்டுகளுக்கு முன்பு, பேராசிரியர் திரு. பி.ஆர். க்ருஷ்ணய்யர், திருமதி பி.வி. தங்கம் தம்பதியினரின் ஒன்பது குழந்தைகளில் ஒருத்தியாகப் பிறந்தேன். சுபாவமாகவே க்ருஷ்ண பக்தியில் ஊறிய குடும்பம். சிறுவயதிலிருந்தே **பக்தகவி ஸ்ரீ பூந்தானம் திருமேனியின் "ஞானப்பான", "ஸ்ரீக்ருஷ்ண கர்ணாம்ருதம்"** என்னும் பாடல்களைக் கோயில்களிலும், பஜனை மடங்களிலும் சாஸ்தா பூஜைகளிலும் நிறைய பேர் பாடிக் கேட்டிருக்கின்றேன். ஸ்ரீபூந்தானத்தின் ஆழ்ந்த க்ருஷ்ண பக்தியைக் குறித்தோ, அவரது வாழ்க்கையில் குருவாயூரப்பன் செய்த லீலைகள் குறித்தோ ஏதும் அறிந்து கொள்ளும் வாய்ப்போ, திறமையோ, தகுதியோ இல்லாத வயது. தாய்மொழி தமிழாக இருந்தும் கல்வி கற்றது மலையாளத்திலாகையால் தமிழ் பேச மட்டுமே தெரியும். எழுதவோ படிக்கவோ தெரியாத நிலை. தந்தையின் அரசுக் கல்லூரிப் பணி நிமித்தமாக சிற்றூர், தலச்சேரி, திருப்பூணித்துறா, திருச்சூர் என்று பல ஊர்களில் வாசம்.

1971ஆம் ஆண்டு திருமணம் ஆகி சென்னை வந்ததிலிருந்து இன்றுவரை சென்னைவாசி. முதன்முதலாக வெளியே சென்ற இடம் மயிலாப்பூர் கபாலீச்வரர் கற்பகாம்பாள் திருக்கோயில். கணவர் திரு. பி.எஸ். கல்யாண் வாங்கிக் கொடுத்த முதல் பரிசு, 'கல்கி' வார இதழ் தொகுத்து வழங்கிய, காஞ்சி மகாபெரியவாளின் "அருள்வாக்கு". தமிழ் தெரிந்தவர்கள் உதவியுடன் ஸ்ரீசரணர்களின் அருள்வாக்கினை எழுத்து கூட்டிப் படிக்கவும் எழுதவும் பழகிக்கொண்டேன். அன்றைக்கு எனக்குத் தெரியவில்லை, அது எத்தனை பெரிய பாக்கியம் என்பது. சந்தர்ப்பம் கிடைத்த போதெல்லாம் கணவர் மற்றும் மகள் ஸ்ரீவித்யாவுடன் காஞ்சிபுரம் சென்று ஜகன்மாதா காமாக்ஷியையும் ஜகத்பிதாவாம்

ஏகாம்பரேச்வரரையும், ஜகத்ரக்ஷகனாம் வரதராஜப்பெருமாளையும், ஜகத்குரு ஸ்ரீகாமகோடி பீடாதிபதி பூஜ்யஸ்ரீ மஹாபெரியவாளையும் பூஜ்யஸ்ரீ புதுப்பெரியவாளையும், பூஜ்யஸ்ரீ பாலப்பெரியவாளையும் தரிசித்து ஆசிபெறும் பெரும்பேறும் கிடைத்து வந்தது. கூடவே "தெய்வத்தின் குரல்" நூலின் ஏழு பதிப்புகளையும் படிக்கும் பொன்னான வாய்ப்பையும் குருநாதர் அருளினார்.

தற்போது முதுமையை எட்டிப்பிடிக்கும் தறுவாயில் சற்றே திரும்பிப் பார்க்கிறேன். வாழ்க்கையில்தான் எத்தனை எத்தனை சோதனைகள், வேதனைகள்! "இவை அனைத்தையும் நாம் எப்படித் தாங்கினோம், தாண்டினோம் என்று நினைத்துப் பார்க்கையில் பெரும் பிரமிப்பாகவுள்ளது. நாமா தாண்டினோம் என்றால், "இல்லையில்லை, குருவின் அருள் கடாட்சம்தான் தாண்ட வைத்தது" என்று உள்மனம் உறுதியாகச் சொல்கின்றது. பரமேச்வரன் நடமாடும் தெய்வமாக, எத்தனை எத்தனை லட்சோபலட்சம், கோடானு கோடி பக்தர்களின் கண்ணீரைத் துடைத்து, அவர்களது வாழ்க்கையில் விளக்கேற்றி வைத்திருக்கின்றார் என்பது அனைவரும் அறிந்த உண்மை. அப்படி அவரால் ஆசி வழங்கப்பட்ட அந்தக் கோடானுகோடியில், கடைசி வரிசையில், கடைசி ஆளாக நாமும் இருக்கின்றோம்; நம்மையும் காமகோடிக் குடும்பத்தில் ஒரு அங்கமாக அவர் ஏற்றுக்கொண்டிருக்கின்றார் என்று என் வாழ்க்கை அனுபவங்களிலிருந்து நிதர்சனமாகத் தெரிகின்றது.

சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்னர் படப்பை 'ஜயதுர்காபீடம்' ஸ்தாபகர், உபாசனாகுலபதி ஸ்ரீதுர்க்கை சித்தர் ஸ்வாமிகளிடம் ஆசிபெறும் பெரும் பேறு கிடைத்தது. தனது சொந்த மகளைப் போலவே பாவித்து அவர் வழங்கிய ஆசிகளும் உபதேசங்களும் கணக்கிலடங்காதவை. எங்கள் குடும்பத்தை நல்வழிப்படுத்துவதில் அவருக்கும் பெரும் பங்குண்டு.

சமீபத்தில் ஒருநாள், எனக்கு நாராயணீயம் கற்றுக் கொடுத்த **'குருமாமி' ஸ்ரீமதி ஜானகி வைத்யநாதன்** அவர்கள் தொலைபேசியில் அழைத்து, **'ப்ரவசனதிலகம்' திரு. தாமல் ராமக்ருஷ்ணன்** அவர்கள், **"குருவாயூருக்கு வாருங்கள்"** என்று ஒரு நிகழ்ச்சி நடத்த இருப்ப தாகவும், அதில் சேர்த்துக் கொள்ள பக்தகவி பூந்தானம் திருமேனியைக் குறித்தும் அவரது க்ருதிகள் குறித்தும் தகவல்கள் தேவைப்படுவதாகவும் தெரிவித்தார். 'உனக்குத் தமிழும் மலையாளமும் தெரியுமே, நீ பூந்தானம் க்ருதிகளில் முக்கியமானவையான **"ஞானப்பான"** மற்றும் **"ஸ்ரீக்ருஷ்ண கர்ணாம்ருதம்"** ஆகியவற்றைத் தமிழாக்கம் செய்துகொடு" என்று

பணித்தார்கள். இருமொழிகளிலும் சொல்லிக்கொள்ளும்படியான சிறப்பான பாண்டித்யம் இல்லையாகிலும், நம்மால் இப்பணியினைச் செய்யமுடியுமா என்று உள்ளூற பயமாக இருப்பினும், குருமாமி கொடுத்த ஊக்கம், அவரது அனுக்ரஹ விசேஷம், தமிழாக்கம் செய்யும் பணியினை ஆரம்பித்து குறித்த காலத்தில் முடிக்க முடிந்தது.

**வைகுண்டவாஸியாம் ஸ்ரீகுருவாயூரப்பன், பூந்தானத்தின் ஆத்மார்த்தமான, களங்கமற்ற பக்தியை மெச்சி, பாலகோபாலனாக, வெண்ணை திருடும் கண்ணனாக, உண்ணிக்ருஷ்ணனாக, குழந்தை ரூபத்தில் அவரது மடியில் தவழ்ந்து, அவர் இயற்றும் க்ருதிகளை ஆமோதித்து அவருக்கு ஜன்மஸாபல்யம் வழங்கிய சரித்திரம் கேரளத்திலுள்ள மலையாள மொழியறிந்த அனைவரும் நன்கு அறிவர். அவர்களுக்குக் கிடைத்த பேரானந்தம் நம் தமிழ்நாட்டு பக்தர்களுக்கும் கிடைக்கவேண்டும், பூந்தானத்தின் 'ஸ்ரீக்ருஷ்ண கர்ணாம்ருதமும்', 'ஞானப்பான'யும், கேரள மக்களோடு நின்றுவிடாமல் தமிழ் அறிந்தோருக்கும் பயன்பட வேண்டும் என்பது திரு. தாமல் ராமகிருஷ்ணன் ஸ்வாமி அவர்களின் தீவிரமான விருப்பம்.**

அவரது விருப்பம் சீக்கிரமாக நிறைவேறவேண்டும், தமிழ் அறிந்தோர் யாவரும் இந்த பீயூஷதாரையைப் பருகி குருவாயூரப்பனின் திரு அருளுக்குப் பாத்திரமாக வேண்டும் என்று அந்த உண்ணிக்கண்ணனிடமே யாசகம் செய்கின்றேன்.

இப்புத்தகம் வெளிவருவதில் திரு. தாமல் ஸ்வாமி அவர்கள் எடுத்துக்கொண்ட அக்கறையைப் பற்றிக் கூறியே ஆகவேண்டும். ஓர் 'அட்சயத்ரிதீயை' நன்னாளில் இப்புத்தகத்தின் முதல் ப்ரதியினை ஸ்ரீகுருவாயூரப்பனின் பாதாரவிந்தங்களில் வைத்து, அர்ச்சனை செய்து, பகவத் ப்ரஸாதமாக அபிஷேக எண்ணை, துளஸீதளங்கள், புஷ்பங்கள், கைநிறைய களபம், சர்க்கரை, பூவன்பழங்கள் எல்லாம் கொண்டுவந்து கொடுத்தார், மேலும் இப்பணி சிறப்பாக நிறைவேறும் என்று உளமாற வாழ்த்தியதையும் என் வாழ்நாள் முழுதும் நினைவில் வைத்திருப்பேன். அவருடன் சேர்ந்து அவரது தங்கை **திருமதி. தாமல் பெருந்தேவி** அவர்கள் அவருக்கே உரித்தான இனிய குரலில் **"ஸ்ரீக்ருஷ்ணகர்ணாம்ருதம்"** சுலோகங்களைப் பாடிக் கேட்டபோது மனம் நிறைந்து அவர்கள் இருவரையும் சிரம் தாழ்த்தி வணங்க மட்டுமே என்னால் இயலும் என்பதை நன்கு உணர்கின்றேன்.

குருவாயூர் தேவஸ்வம் பதிப்பான **"பூந்தான ஸர்வஸ்வம்"** என்ற புத்தகத்தில், பூந்தானம் இயற்றிய அனைத்து க்ருதிகளுமே, எனது இந்த எளிய மொழிபெயர்ப்புக்குப் பேருதவியாக இருந்தது. பூந்தானம் இயற்றியது என்று தீர்மானமாக அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட 46 க்ருதிகளும், பூந்தானத்தின் ரசனாசைலியிலேயே இருந்தாலும் அவருடைய க்ருதி தான் என்று தீர்மானமாக வரையறுக்கப்படாத மேலும் 11 க்ருதிகளும் இப்புத்தகத்தில் கொடுக்கப்பட்டுள்ளன. திருப்பதி லட்டுவில் எந்தப் பக்கம் விசேஷமானது என்று கேட்டால் எப்படி நாம் பதில் கூற முடியாதோ அதேபோன்று பூந்தானம் க்ருதிகள் அனைத்துமே பூந்தேன் சொரிபவை, குருவாயூரப்பனால் ஏற்றுக்கொள்ளப்பட்டவை.

உயர்ந்த ராஜகோபுரத்தின் உச்சியிலிருக்கும் தங்கக் கலசம் பூந்தானம் திருமேனி. எங்கோ அதலபாதாளத்தில் கிடக்கும் ஸாதாரண சராசரிப் பெண் நான். என்னையும் ஒரு பொருட்டாக்கி அந்த பக்தகவியின் இருபெரும் படைப்புகளை தமிழில் மொழிபெயர்க்க வைத்தது ஸ்ரீகுருவாயூரப்பன் நடத்திய மற்றுமொரு லீலாவிலாஸம், அனுக்கிரஹ விசேஷம்.

**"பூந்தானஸர்வஸ்வம"** புத்தகத்தில் விரிவான அர்த்தபுஷ்டியுள்ள வியாக்யானங்கள் எழுதிய திரு. டி. அச்சுதமேனோன், "பூந்தானத்தின் வாழ்க்கைச் சரிதை, அவரது க்ருதிகள் குறித்த அனைத்துத் தகவல்களையும் சிறப்பான முறையில் எழுதியுள்ள பேராசிரியர் **டாக்டர் வி.எஸ். சர்மா,** மற்றும் **குருவாயூர் தேவஸ்வம் பரணஸமிதி** அங்கத்தினர்கள் ஆகியோருக்கும், *ஆசியுரை வழங்கியுள்ள ஆசார்யாள் மற்றும் ஆன்மிக உலகச் சான்றோர்களுக்கும்* இப்புத்தகம் எழுத உதவிகள் புரிந்த அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் *இந்நூலினைச் சிறப்புறப் பதிப்பித்துத் தந்துள்ள பாற்கடல் பதிப்பகத்தாருக்கும்* எனது மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். வாசக அன்பர்கள் அனைவரையும் சிரம் தாழ்த்தி வணங்கி,

பூந்தானத்தின் வரிகளிலேயே சொல்வதானால்,

**"பிழயாகிலும் பிழகேடென்னாகிலும்**
**திருவுள்ளம் அருள்க பகவானே"** –

என வேண்டுகிறேன்.

**ஹரி ஓம்**

**கீதா கல்யாண்**
*உரை ஆசிரியர்*

# பதிப்பாளர் உரை

ஒளிமயமான வாழ்வியலிற்கு அச்சாணியாகத் திகழ்வது ஆன்மீக ஞானம். எனவேதான் நமது பாரதத்தின் மிகப்பெரிய பொக்கிஷமாக இது இன்றளவும் பாதுகாக்கப்பட்டுவருகிறது. பாரத நாட்டின் அனைத்து மாநிலங்களிலும் வாழ்ந்து வந்த தெய்வீக அருள்பெற்ற பல ஆன்மீகச் சிங்கங்கள், அந்தந்த மாநிலத்தின் மொழியில், மக்களின் ஆன்மீக உணர்வுகளைக் கிளர்ந்தெழச் செய்யும் வகையில் மிக அற்புதமான புனித நூல்களை நமக்காக, நம் பரம்பைரக்காக விட்டுச் சென்றுள்ளனர்.

வைணவம், சைவம் என அறுவகைப்பட்ட சமயநெறி சார்ந்த தெய்வங்களின் மகிமைகளை, வரலாற்றினை உபதேசங்களைப் பறைசாற்றும் நூல்கள் பாரதத்தின் அனைத்து மொழிகளிலும் நிறைந்திருப்பது நமக்குக் கிடைத்திருக்கும் பேறு. பாரதம் பெற்றுள்ள ஆன்மீக ஒருமைப்பாடு இது!

ஒரு மாநில மொழி நூலை பிறமாநிலத்து மொழியிலும் மொழி பெயர்த்துத் தருவது என்பது பாராட்டப்படவேண்டிய ஒரு புனிதப்பணி. இவ்வகையில் நாராயணீயம் அருளிச் செய்த நாராயண பட்டத்திரி வாழ்ந்த காலத்திலேயே வாழ்ந்து தெய்வ அருள் வாய்க்கப்பெற்று பூந்தானம் எனும் நாமம் பெற்ற பக்தகவியால் மலையாள மொழியில் இயற்றப்பட்ட "**க்ருஷ்ண கர்ணாம்ருதம்**" மற்றும் "**ஞானபான**" எனும் புனித நூலின் இனிய அமுதரசம் தமிழாக்கம் செய்யப்பட்ட நிலையில் உங்கள் கரங்களில் தவழ்ந்துகொண்டிருப்பது மகிழ்ச்சிக்குரிய ஒன்று!

இந்த மொழியாக்கப் பணியைத் தமிழ்மக்களுக்காகச் சிறப்புறச் செய்துள்ளவர் திருமதி கீதா கல்யாண் அவர்கள்! இந்நூல் எழுத இவருக்குத் தூண்டுகோலாக இருந்தவர் **"ப்ரவசனத் திலகம்" தாமல் திரு. இராமகிருஷ்ணன்** அவர்கள்.

கேரள மாநிலத்தில் சித்தூரில் 1949ஆம் ஆண்டு ஜூன் மாதம் 5ஆம் நாள் பிறந்த இந்நூலாசிரியரான திருமதி கீதா கல்யாண், மலையாளம், தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம் எனப் பல மொழி ஞானம் பெற்றுள்ளவர். சென்னையிலுள்ள "அகதிகளுக்கான ஐக்கிய நாட்டுத் தூதரகத்தில் பதினான்கு ஆண்டுகள் சிறப்புறப் பணியாற்றியவர். மகளிருக்கான எஸ்.சி.எஸ். கோதாரி அகாதமியில் ஆறுவருடம் பணியாற்றியவர்." மலையாளம், தமிழ், சமஸ்க்ருதம் எனப் பல மொழி ஞானம் பெற்ற கீதா கல்யாண் காஞ்சி மகாப் பெரியவாளிடம் பக்தி பூண்டவர். அன்னாரது "தெய்வத்தின் குரல்" உபசேங்களில் திளைத்தவர். சுயமுயற்சியாலேயே தமிழ்மொழியறிவைப் பெருக்கிக் கொண்டவர். ஆன்மிக ஈடுபாடுமிக்கவர். நல்ல சமூகச் சிந்தனையாளர். இவரது முயற்சியால் மலர்ந்துள்ள **"க்ருஷ்ண கர்ணாம்ருதம்"** மற்றும் **"ஞானபான"**நூல் எமது பாற்கடல் பதிப்பகம் மூலமாக பதிக்கப் பெறுவது குறித்துப் பெருமையடைகிறோம்.

பக்திரசம் சொட்டும் இந்நூலினை தமிழுலகம் வரவேற்கும் என்பதில் ஐயமில்லை.

**–பாற்கடல் பதிப்பகத்தார்**

# ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரியார் ஸ்வாமிகளின் ஆசியுரை

Website www.kamakoti.org

☎. 044-27222115
044-27224305

|| Sri Chandramouleeswaraya Namaha ||
Sri Sankara Bhaghavadpadacharya Paramparagatha Moolamnaya Sarvajnapeeta

His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi

**JAGADGURU SRI SANKARACHARYA SWAMIGAL**
**Srimatam Samsthanam**
**No. 1, Salai Street, KANCHEEPURAM - 631 502.**

15.11.2011



[illegible] कृतिद्वयं श्रीकृष्णकर्णामृत ज्ञानपानसमाख्यञ्च [illegible] मुदा।
[illegible] भक्त्या रामातन्वती श्रीमच्चन्द्रमौलीश्वर[illegible]।।

ஸர்வவ்யாப்தமான பர ப்ரஹ்மமே தன்னை உபாஸிப்பதற்காக அனந்த கல்யாணகுணபூர்ணமாய் பல வடிவங்களில் அருள்கிறது. அப்படியுள்ள ஸகுணரூபங்களில் ஸ்ரீ க்ருஷ்ண பரமாத்மாவின் அம்ருத மயமான ரூபந்திற்கும் லீலாவிசேஷங்களுக்கும் பக்திமார்க்கத்தில் இருப்போருக்குத் தனி ஈர்ப்புண்டு. இந்த ஆனந்தமய ரூபத்தில் ஈடுபட்டு சித்தசுத்தியையும் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையும் அடைந்தவர்கள் எண்ணற்ற மஹான்களாவர். இவர்களுள் பரசுராமக்ஷேத்ரம் எனப்படும் கேரளதேசத்தில் தோன்றிய பக்தாக்ரேஸரரான **பூந்தானம்** கவிக்கு மிக முக்கியமான இடம் உண்டு. அவர் இயற்றிய **ஞானப்பான மற்றும் ஸ்ரீக்ருஷ்ண கர்ணாம்ருதம்** ஆகிய நூல்கள் பக்திரஸத்தைப் பிழிந்து தருபவை. அந்த இருநூல்களையும் பாராயணம் செய்பவர்கள் கூட பக்தியிலேயே திளைத்திருப்பர். அத்தகைய உயர்ந்த பக்திஸாகரம் போன்ற இரு நூல்களையும் நமது மடத்தின் சிஷ்யையான **கீதா கல்யாண்** அவர்கள் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட இருப்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறோம். இந்த நூலில் வெறும் பாஷானுவாதம் மட்டும் செய்து தன் நிபுணத்வத்தைக் காண்பிக்காமல் பக்தி பாவத்தையும் அப்படியே கொடுத்திருக்கும் பாங்கு பாராட்டுதற்குரியது. இத்தகைய உயர்ந்த க்ரந்த ரத்னத்தை வெளியிட இருக்கும் அவர் ஸ்ரீ மஹாத்ரிபுரஸுந்தர்யம்பா ஸமேத ஸ்ரீ சந்த்ரமௌளீச்வரஸ்வாமியின் அருளால் மேன்மேலும் பல க்ரந்த ரத்னங்களை வெளியிட்டு ஸனாதன தர்மத்திற்கும் பக்தி ஸம்ப்ரதாயத்திற்கும் ஸேவை செய்யட்டும் என்றும் இந்த நூல் எல்லா பக்தர்களுக்கும் பக்திரஸத்தை வாரி வழங்கட்டும் என்றும் ஆசீர்வதிக்கிறோம்.

திருமதி கீதா கல்யாண்
சென்னை-24.

நாராயணஸ்ம்ருதி:

“பிரவசன திலகம்”

## ஸ்ரீ.உ.வே. தாமல் ராமகிருஷ்ணன் அவர்களின்

### ஆசியுரை

நிர்குண பரப்பிரம்மமான பரமாத்மா ஸகுண ரூபத்தை எடுத்துக் கொண்டு பலப்பல அம்சாவதாரங்களாகப் பூவுலகிற்கு வந்து அற்புத லீலைகளைச் செய்ததையும் பூர்வ புண்யாவதாரங்களாக அவதரித்து ஸ்ரீராமசந்திர மூர்த்தியாகவும்; ஸ்ரீ கிருஷ்ணனாகவும் வந்து, துஷ்ட நிக்ரஹ, சிஷ்ட பரிபாலனம் செய்த சரிதங்களை நாமெல்லாம் அறிவோம். **ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம், ஸ்ரீமத் பாகவதம்** ஆகியவற்றில் இவை விரிவாக வர்ணிக்கப்பட்டுள்ளன.

ஸ்ரீமத் பாகவதத்தின் ஸாரமாக ஸமஸ்கிருதத்தில் இயற்றப்பட்ட **நாராயணீயம்** புகழ்பெற்ற நூல். இதனை இயற்றிய மேல்புத்தூர் **நாராயண பட்டத்ரியின்** ஸமகாலத்தவராக வாழ்ந்தவர்தான் **'பக்தகவி ஸ்ரீபூந்தானம்'** எனும் நம்பூதிரி. **ஸ்ரீ பூந்தானம் திருமேனி**, ஸ்ரீ குருவாயூரப்பனின் பரிபூர்ண கிருபாகடாஷத்திற்குப் பாத்திரமானவர். 1547-ஆம் ஆண்டு கீழாற்றூர் எனும் ஊரில் பிறந்தவர். **ஸ்ரீபூந்தானம்** இயற்றியருளிய **“ஞானப்பான”** எனும் நூலும் **'நாராயணீய'**த்திற்கு ஈடான நூல்.

ஆயினும், மலையாளிகளல்லாதோர் ஸ்ரீபூந்தானம் திருமேனியையும், அவர் இயற்றிய நூல்களையும் அறிந்திருக்க வழியில்லை. காரணம் துரதிர்ஷ்டவசமாக இதுவரை ஸ்ரீ பூந்தானம் இயற்றிய கிருதிகள் தமிழாக்கம் செய்யப்படவில்லை. இது நம் துரதிர்ஷடமே.

**'ஜந்தூனாம் நரஜன்மம் துர்லபம்'** என்பதற்கேற்ப, 'பூவுலகில் மானுடனாகப் பிறப்பது அரிது. அதனினும் அரிது புண்யபூமியாம் பாரதத்தில் பிறப்பது. அதனினும் அரிது பகவானை நினைக்கவேண்டும் என்கின்ற எண்ணம் வருவது' என்பதையும் பிறவிப் பெரும் கடலைத் தாண்ட மிகமிகச் சுலபமான வழி திருநாம சங்கீர்த்தனம்தான் என்பதையும் எளிமையான வார்த்தைகளால், எல்லோரும் சுலபமாகப் புரிந்துகொள்ளும் வகையில் எடுத்துக் கூறுவதுதான் **“ஞானப்பான”**.

இந்நூலின் தமிழாக்கப் பதிப்பினைப் பலவிடங்களில் தேடியும் கிடைக்கவில்லை. இவ்வளவு சிறப்பான நூல் தமிழாக்கமாக வரவில்லையே என்ற ஏக்கம் என் மனதில் கடந்த நாற்பத்திரெண்டு வருஷங்களாக இருந்துவந்தது! குருவாயூர் செல்ல நேரிட்டபோதெல்லாம் அங்கு **உன்னிகிருஷ்ணன்** தைலாபிஷேகம் முடிந்து சந்தனக்காப்பும், துளஸிமாலைகளும், மயில்தோகையும், திருவாய் நிறைய புன்சிரிப்புமாகக் கையில் வெண்ணை வைத்துக் கொண்டு, சிகப்புக் கௌபீனம் தரித்துக் கொண்டு, சர்வாலங்காரபூஷிதனனாகக் காட்சியளித்துக் கொண்டிருக்கும். திவ்ய கோலத்தைத் தரிசித்து "**ஞானப்பானயை நீ ஏன் தமிழில் மொழியாக்கமாக்க, அனுக்ரஹிக்கவில்லை?** என நானும் என் தங்கை பெருந்தேவியும் பிரார்த்தித்துக் கொள்வோம்.

சில மாதங்களுக்கு முன்பு 'ஸ்டார் விஜய்' (STAR VIJAY) தொலைக்காட்சியில் என்னைக் "**குருவாயூருக்கு வாருங்கள்**" எனும் தலைப்பில் ஒரு நிகழ்ச்சி வழங்குமாறு கேட்டுக் கொண்டிருந்தார்கள். இந்நிகழ்ச்சியில் "**நாராயணீயம்**" மட்டுமில்லாமல் ஸ்ரீ **பூந்தானத்தின்** "**ஞானப்பான**" பற்றியும் அனைவரும் அறியவேண்டும் என்ற அவா என்னுள் எழுந்தது.

நாராயணீய தினத்தைப் பிரதிவருடம் கொண்டாடிவரும் சென்னை தியாகராய நகரிலிருக்கும் திருவிஸ்வேஸ்வரன் உதவியுடன் குருமாமி திருமதி ஜானகிவைத்தியநாதன் அவர்களைத் தொடர்பு கொண்டு, என் எண்ணத்தைக் கூறினேன். அவர்கள் தமிழும் மலையாளமும் நன்கு கற்ற ஸ்ரீமதி கீதாகல்யாண் என்பவர்களைப்பற்றிக் கூறினார். **ஸ்ரீமதி கீதாகல்யாண்** அவர்களிடமும் என் உளப்பாட்டினைத் தெரிவிக்க சிலமணி நேரங்களில் நான் 'ஞானப்பான'த்தில் தேர்ந்தெடுத்த ஐந்து கிருதிகளைத் தமிழாக்கம் செய்து ஸாராம்சமும் எழுதிக்கொடுத்து என்னை அதிர்ச்சியில் ஆழ்த்தினார்.

"**ஞானப்பான**"த்து ஐந்து பாடல்களுக்கானத் தமிழாக்க விரிவுரை மேற்படி நிகழ்ச்சியில் அரங்கேற்றமாக அமைந்ததின் எதிரொலியாக, பல பக்தர்கள் அடியேனிடம் ஸ்ரீபூந்தானத்தின் "ஞானப்பான" கிருதிகளுக்கான தமிழாக்கம் பற்றி மேலும் அறிய ஆர்வமுடன்

கேட்டனர்! அடியேனும் திருமதி. கீதா கல்யாண் அவர்களிடம் இதையறிவித்து, "ஞானப்பான" முழுவதையும் தமிழாக்கம் செய்து நூலாக்க வேண்டியதன் அவசியத்தைத் தெரிவித்து, அவ்விதமே செய்துதருமாறு வேண்டுகோள் வைத்தேன்! எனது நாற்பத்திரெண்டு வருடக் கனவை நனவாக்கும் வகையில் திருமதி கீதா கல்யாண் இரண்டே நாட்களில், மலையாள மொழியிலிருந்த கிருதிகளை அப்படியே தமிழ்வடிவாக்கி அவற்றிற்கான அர்த்தங்களையும் தமிழில் தந்து என்னைப் பிரமிக்க வைத்தார்கள்!

அதுமட்டுமின்றி, ஸ்ரீமத் பாகவதத்தின் தசமஸ்கந்தத்தை அடிப்படையாகக் கொண்டு, ஸ்ரீகிருஷ்ணா பரமாத்மாவின் பாலலீலைகளைத் தனது அகக்கண்களால் பருகிக் கொண்டு ஸ்ரீ பூந்தானம் இயற்றியதும் படிப்பவர் மனங்களைக் கொள்ளை கொள்ளும் வகையில் அமைந்ததுமான **"ஸ்ரீ க்ருஷ்ண கர்ணாமிர்தம்"** எனும் மணிப்ரவாளமான மலையாள சமஸ்க்ருத ஸ்லோகங்கள் கொண்ட நூலினையும் தமிழாக்கம் செய்து வியாக்யானத்துடன் எழுதி முடித்தார்.

இப்படியாகக் காணக்கிடைக்காத மலையாளப் பொக்கிஷங்களாக விளங்கிவரும் இரண்டு நூல்களும் இப்பொழுது தமிழுலகத்துப் பக்தர்களுக்குக் கிடைத்துள்ளன. இவை அனைத்தும் ஸ்ரீ பூந்தானத்தின் பீயூஷதாரையை எல்லோரும் பருகி அனுபவிக்கவேண்டும் என்ற எங்களது பிராத்தனைக்குச் செவி சாய்த்துவிட்ட ஸ்ரீ குருவாயூரப்பனின் அனுக்ரஹமே தவிர வேறில்லை. ஸ்ரீ குருவாயூரப்பனின் இவ்வருளை நினைக்கும்போது எங்களுக்கேற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவேயில்லை!

மிகக் குறுகிய கால அவகாசத்தில் இந்நூல்களைத் தமிழில் மொழிபெயர்ப்பு செய்த **திருமதி கீதா கல்யாண், உறுதுணையாக** இருந்துவரும் இவரது **கணவர் ஸ்ரீ கல்யாண், வழிகாட்டிய குருமாமி குடும்பத்தினர், திருவிச்வேச்வரன் தம்பதியர்** ஆகிய அனைவரும் பகவானின் பரிபூர்ண கிருபையைப் பெறவேண்டுகிறேன்.

மகிழ்ச்சிக்குரிய மற்றொரு செய்தியாக, இவ்விஷயம் பற்றிக்கேள்விபட்ட காஞ்சிமடத்து பூஜ்யஸ்ரீ விஜயேந்திர ஸ்வாமிகளின் அருளாணைப்படி, ஸ்ரீமஹாஸ்வாமிகள் மற்றும் ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் நூல்களையும் தமிழிலிருந்து மலையாள மொழிக்கு மொழிபெயர்க்கும் பணியையும் மேற்கொண்டுள்ளார்.

எனவே, ஸ்ரீமதி கீதா கல்யாண தம்பதிகள் பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு ஆயுர், ஆரோக்கியம், சௌக்கியத்துடன் வாழ்ந்திருந்து தமிழகத்திற்கும், கேரளாவிற்கும், இடையே ஓர் ஆன்மிகப் பாலமாகத் திகழ்ந்து மொழிபெயர்ப்புப் பணியாற்றவேண்டும் என எல்லாம்வல்ல **குருவாயூரப்பனை** நமஸ்கரித்துப் பிரார்த்திக்கிறோம்!

203, 23–வது குறுக்குத்தெரு,
இந்திரா நகர்,
அடையார், ப்சென்னை – 6000 20

C. DANAL RAMAKRISHNAN

DANAL (C. PERUNDEVI)

16/03/2012



**S. GANESA SARMA**
**Mobile : 99403 44719**



Residence : 188-B, Nakeeran Street, Alwarthirunagar. Chennai - 600 087.

# எஸ். கணேச சர்மா அவர்களின் ஆசியுரை

ஓணம், விஷு, பிறந்தநாள் போன்ற விசேஷ தினங்கள் வருடா வருடம் வரும் பொழுதெல்லாம் சுகமாக விருந்துண்டு, குதூகலமாகக் கொண்டாடி மகிழ்வது மனித இயல்பு. எனினும் இதன் பின்னால் காலம் சொல்லும் ஒரு முக்கிய செய்தியும் உள்ளது. அது என்ன ?

**'மனிதனே நீ உண்ட விருந்து போல் உன் ஆயுளில் ஒரு வருடத்தை நானும் சாப்பிட்டு விட்டேன்'** என்பது தான் அது ! அப்படியானால் உயர்ந்ததான மற்றும் அரிதான மானிடப் பிறவி எடுத்தது இதற்குத்தானா ? விசேஷமான செயல்திறனுடன் கூடிய சரீரம், மனம், சிந்திக்கும் ஆற்றலுடன் கூடிய புத்தி, அதற்கும் மேல் பேசும் திறன் இவையனைத்தையும் பெற்றது இதற்குத்தானா ?

இப்படி ஒரு நாளாவது சிந்தித்துப் பார்த்திருப்போமா ? அல்லது காலம் மறைமுகமாக சொல்லும் அந்த செய்தியைத்தான் உணர்ந்திருப்போமா ?

நிச்சயமாக பதில் சொல்ல இயலவில்லையே ! ஒன்று மட்டும் நிச்சயம். பாடம் படித்து அறிந்து கொள்ளக் கூடாது என்ற எண்ணம் இல்லை. பிறகு உணராததற்கு வேறு என்ன காரணம் இருக்கும்.

நாம் மாயை என்ற காரிருளில் அகப்பட்டுக் கொண்டதுதான். இந்த அஞ்ஞான இருளைப் போக்க ஞான ஒளிதந்து படிப்பினை சொல்லித்தரவே கருணைக்கடலான பகவான் பல **மகான்களைத் குருவாக** அவ்வப்பொழுது அனுப்பி வைக்கிறார்.

அந்த வகையில் சுமார் 460 வருடங்களுக்கு முன்பு கேரள தேசத்தில் **பூந்தானம்** நம்பூதிரியை அனுப்பினார் போலும் வாமபுராதீசனான **குருவாயூரப்பன்**.

பாடம் படிப்பது என்றாலே அலுப்பாகிவிடுமல்லவா ? அதை மாற்றி ருசி கூட்டவே பாட்டுப் பாடி, கதை சொல்வது வழக்கம். அந்த நடைமுறை சாத்தியமான யுக்திகளுடன் பக்தகவியான **பூந்தானம்** திருமேனி, பலஞானப் பாடல்களையும் அதிலேயே பகவானின் லீலாவினோதங்களையும் சொல்லிச் சொல்லி இடையில் தடைகளாக இருப்பவைகளையும் சொல்லி முடிவில் பரம லக்ஷ்யமான பரமானந்த நிலையை அடையும் வழியையும் சொல்கிறார்.

ஒன்றேயான ஆனந்தமயமான நிர்குணப் பிரம்மமே நம்மையும் அந்தப் பேரானந்தத்தில் கரைக்கப் பலவித நாமரூபங்களில் ஸகுணப் பிரம்மமாக வந்து அருள் புரிவதையும் தெளிவுபடுத்துகிறார். பரம அத்வைதானுபூதியில் இருந்து **பூந்தானம்** அருளிய அமுதவாக்கு இவை என்பதை ஆழ்ந்து படிக்கும் பொழுது உணரலாம். அப்படிப் **பூந்தானம்** கவி அருளியவைகளில் **'ஸ்ரீ க்ருஷ்ண கர்ணாமிர்தமும்'**, **'ஞானப் பான'**யும் முக்கியமானவை.

கர்ணாமிர்தத்தில் முதல் 119 பாடல்கள் வரை க்ருஷ்ணாவதார லீலைகளை வர்ணிக்கிறார். பிறகு படிப்படியாக மனித வாழ்வு, பொருள் சுற்றம் அனைத்தும் நிலையற்றது என்பதையும், அடையவேண்டிய **லக்ஷ்யம் பரமானந்த நிலையான மோக்ஷமே** என்றும், அதை அடையும் வழியே பக்தி என்றும் விளக்குகிறார்.

வாயும் அதில் வாக்கும் இருப்பது பகவானின் குணங்களைப் பாடவும், அவன் திருநாமம் சொல்லவுமே என்பதை வலியுறுத்துகிறார். 'இதைச் செய்ய ஊமையைத்தவிர வேறெவருக்கும் தடை இல்லையே' என்பார்.

'ஞானப்பான'த்திலும் இன்னும் ஆழமாகவே வேதாந்த விசாரத்தையும், நாம கீர்த்தனத்தையும் வலியுறுத்துகிறார். இவைகளைக் கேட்டு நடந்தால் அடைய வேண்டிய லக்ஷ்யத்தை அடைவது உறுதி. ஆனால் அவைகளைப் படித்து

அறிந்து கொண்டு நடக்கவேண்டுமானால் முதல் தேவை மலையாள பாஷை ஞானம். அது இல்லாதவர்கள் என்ன செய்யலாம் ?

அந்தக் குறையைப் போக்கத்தான் இந்த மொழிபெயர்ப்பு நூல்.

மொழிபெயர்த்துள்ள திருமதி **கீதா கல்யாண்** அவர்கள் மிகவும் சாமர்த்தியசாலி. பூந்தானம் சொல்கிறார் 'எதற்கும் மூலம் குரு க்ருபைதான்' என்று. இதை உணர்ந்த மொழிபெயர்ப்பாளர் பல்லாண்டுகளுக்கு முன்பே ஜகத்குருவான காஞ்சி ஸ்ரீ மகா பெரியவாளின் அருளை அமோகமாக சம்பாதித்துக் கொண்டுவிட்டார். பிறகு என்ன ? மூலதனம் கிடைத்துவிட்டால் லாபம் தானே வராதா ! மகாபெரியவாளின் அருளே திருமதி கீதா அவர்களை இவ்வளவு சிறப்பாக இந்த உயர்ந்த நூல்களை மொழிபெயர்க்கச் செய்துள்ளது. அவர் பெற்ற குருவருளால் தமிழகமே பயன் பெற்றுள்ளது. எனவே அனைவரும் அவருக்கு நன்றிக் கடன் பட்டுள்ளோம் எனலாம்.

இப்படியாக இவ்விரு நூல்களும் புத்தகமாக வெளிவர முயற்சி செய்தும், ஒத்துழைத்தும் உதவிய அனைவருக்கும் தமிழகத்தின் சார்பிலும், ஆஸ்தீகர்கள் சார்பிலும் நன்றி தெரிவித்து வாழ்த்தி வணங்குகிறேன்.

மேன்மேலும் இதுபோன்ற திருப்பணிகள் தொடர எல்லாம் வல்ல பரம்பொருளான குருநாதனை வேண்டுகிறேன்.

**(S. கணேச சர்மா)**

சென்னை
23-02-2012

# சேங்காலிபுரம்
# பிரம்மஸ்ரீ தாமோதர தீக்ஷிதர் அவர்களின்

## ஆசியுரை

SRI RAMAJAYAM

Cell : 0-90031 32145
0-92831 44255

SENGALIPURAM BRAMHASRI
**B. Damodhara Deekshithar**
Old No. 40, New No. 7, IInd Cross Street,
Gajalakshmi Nagar, Chromepet CHENNAI - 600 044

Date 11.3.2012

ஸ்ரீய : பதியான பகவானுடைய அவதாரங்களில் கருணையைப் பிரதான வடிவமாகக் கொண்டது ஸ்ரீ கிருஷ்ணாவதாரம். மஹாகவி ஜெயதேவரும் 'காருண்ய மாதன்வதே' என்று கிருஷ்ணாவதாரத்தின் பெருமையைக் கூறியுள்ளார். அவ்வவதாரம் மதுரா, கோகுலம், பிருந்தாவன், துவாரகா, ஹஸ்தினாபுரங்களில் நிகழ்ந்தது. நாம் கேட்டு மகிழ்ந்து அவன் கருணையையடைந்து உய்வதற்காகவே, பிரம்ஹநிஷ்டரான ஸ்ரீசுகரால் கானம் செய்யப்பட்ட அவதாரம். அவரை அனுசரித்து ஸ்ரீ கிருஷ்ணலீலைகளின் மகிமையை அனேகம் பேர் பல மொழிகளில் பாடியுள்ளார்கள். அவற்றில் சில இடங்கள் ரசமாக இருக்கும். ஆனால், ஆரம்பம் முதல் கடைசிவரை மிகவும் ரசமாக, பகவத் ஸ்வரூப குணானுபவத்துடன் உள்ள கீர்த்தனங்கள் அஷ்டபதி, பில்வமங்களத்தின் கிருஷ்ணகர்ணாமிர்தம், ஸ்ரீ நாராயணியம் ஆகிய சிலவே. அவ்வரிசையில் கேரள தேசத்தில் பிறந்து வளர்ந்த, மிகவும் உயர்ந்த பக்தன் என்று **ஸ்ரீகுருவாயூரப்பனாலேயே** அடையாளம் காண்பிக்கப்பட்ட (விபக்தியை விடப் பூந்தானத்தின் பக்தியே மேல்) பக்தர்தான் **ஸ்ரீபூந்தானம்**. அவரால் இயற்றப்பட்ட **ஞானப்பான** மற்றும் **ஸ்ரீகிருஷ்ண கர்ணாமிர்தம்** ஆகியவற்றின் தமிழ் மொழி பெயர்ப்பு நெடுநாட்களாக நமக்குக் கிடைக்காமல் இருந்த குறையை ஸ்ரீமதி கீதாகல்யாண் அவர்கள் நிவர்த்தி செய்துள்ளார்கள்.

ஸ்ரீமதி கீதா கல்யாண் குருபக்தி, ஸ்ரீகிருஷ்ணபக்தி இரண்டிலும் பூரணத்வத்தை அடைந்துள்ளார் என்பது அவரது மொழிபெயர்ப்பிலிருந்தே தெளிவாகின்றது. உண்மையில் கிரந்த விளக்கம் கொடுப்பவர்களே மொழியெர்ப்பாளராவார். மூலத்தில் பிரகாசிக்கும் கவிஹ்ருதயத்திற்கு விருத்தம் (விரோதம்) இல்லாமல் ஒரு மொழிபெயர்ப்பு அமைய வேண்டும். இவர் விரோதமில்லாமல் சொல்லியிருப்பதோடு, ரசம் சொட்டச் சொட்ட மொழி பெயர்த்துள்ளார். சிறப்புமிக்க இம்மொழிபெயர்ப்புப் பணியைச்

செய்துள்ள ஸ்ரீமதி சீதாகல்யாண் நீண்ட ஆயுளும், ஆரோக்கியமும், ஸ்ரீ பகவானுடைய சரணத்தில் பூர்ணபக்தியுடன் எல்லாம பெற்று உய்யவேண்டும் என ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவிடம் வேண்டுகிறேன்.

சேங்காலிபுரம்
B. தாமோதரதீட்சிதர்
11.3.2012

## நன்றி!

**'பக்தகவி ஸ்ரீ பூந்தான'**த்தின் மலையாள மொழியிலிருந்த இந்நூலினைத் தமிழாக்கம் செய்து நூல்வடிவாக்கும் எனது பணியில் வழிகாட்டிய **எழுத்தாளர் சு.ரா.** எனும். திரு. சுந்தரராஜன், ஒளியச்சு செய்த **திருமதி பேபி ராஜேந்திரன்** மற்றும் **'ஹைடெக்' திரு மாதவன்** ஆகியோருக்கும், தொடர்பான அனைத்துப் பணிகளையும் ஒருங்கிணைத்துக் குறித்த காலத்திற்குள் நூலினை அச்சிட்டுக் கொடுத்த **பாற்கடல் பதிப்பகத்தா**ருக்கும் எனது இதயமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.



மூலநூல்களாம் "ஸ்ரீ க்ருஷ்ண கர்ணாமிர்தம்"

"ஞானப்பான" ஆகியவற்றை அருளிய

## பக்தகவி பூந்தானம் அவர்களது வாழ்க்கை வரலாறு

பூந்தானம் திருமேனியின் ஜீவிதத்தில் நடந்த அனேகம் சம்பவங்கள் எவரும் அறிந்தவை. அறியாதார் அறிந்து கொள்வதும் அவசியம். அவற்றிலிருந்து சிலவற்றைப் பார்ப்போம்.

பரசுராமக்ஷேத்ரம் என்று புகழப்படும் புண்ணிய பூமியாம் கேரள தேசத்தில் மலப்புறம் ஜில்லாவில் பெரிந்தல்மண்ணா என்னும் இடத்திலிருந்து சுமார் எட்டு கிலோ மீட்டர் வடக்கிலுள்ள கீழாற்றூர் என்னும் பிரதேசத்தில் இருக்கின்றது "பூந்தானம்" என்ற பெயருடைய நம்பூதிரி இல்லம். ஸ்ரீ குருவாயூரப்பனின் பக்தர்களில் முக்கியமானவராகக் கருதப்படும் பக்தகவி ஸ்ரீ பூந்தானம் நம்பூதிரி 1547ஆம் ஆண்டு கும்பமாதத்தில் (மாசி) அசுவதி நட்சத்திரத்தன்று பிறந்தார். இவரது இயற்பெயர் ப்ரம்மதத்தன் என்றும் சங்கரநாராயணன் என்றும் சங்கரன் என்றும் அபிப்பிராயபேதங்கள் இருந்தாலும், பொதுவாக பூந்தானம் நம்பூதிரி என்றுதான் அவரது இல்லத்தின் (நம்பூதிரி க்ருஹங்கள் இல்லம் என்றுதான் அறியப்படும்) பெயரை வைத்தே கேரளதேசம் முழுதும் அறியப்பட்டார். ஸ்ரீ நீலகண்டன் என்பவர் இவரது குருநாதராவார்.

சிறுவயதிலிருந்தே ஸ்ரீ க்ருஷ்ண பக்தனாக இருந்த **ஸ்ரீ பூந்தானம் நம்பூதிரி** ஸ்ரீகுருவாயூரப்பனின் மஹிமைகளை **"ஸந்தான கோபாலம்"** என்னும் க்ருதி எழுதி அம்பாடிக் கண்ணனின் பாதகமலங்களில் சமர்ப்பித்து பக்தியுடன் மனமுருகி பிரார்த்தனை செய்தாரென்றும், அதன் பலனாக பல வருடங்கள் க்ருஹஸ்தாஸ்ரமத்திற்குப் பிறகு ஓர் ஆண் குழந்தை பிறந்ததென்றும் துரதிர்ஷ்டவசமாக அக்குழந்தை அன்னப்ராசன தினத்தில், யாருடைய அஜாக்கிரதையினாலோ மரணமடைய நேர்ந்ததாகவும் வரலாறு. குழந்தை உறங்கிக் கொண்டிருந்த தொட்டிலில் யாரோ விழுப்பு வஸ்த்திர மூட்டையை வைத்துவிட்டதால் மூச்சுமுட்டி இறந்தது என்றும்,

கொதித்துக் கொண்டிருந்த பாயச பாத்திரத்தில் குழந்தை விழுந்து விட்டதால் மரணம் சம்பவித்தது என்றும் இருவித அபிப்ராயங்கள் உள்ளன. எது எப்படியிருப்பினும், தவமிருந்து பெற்ற ஏகபுதல்வன் இறந்துபோனதில் நிலைகுலைந்து போன பூந்தானம் கவி ஸ்ரீகுருவாயூரப்பனிடம் மனசாந்தி வேண்டி பிரார்த்தனை செய்ய, பகவான் ஸ்ரீகுருவாயூரப்பனே ஓர் சிறிய குழந்தை வடிவில் பாலகோபாலனாக அவர் மடியில் தவழ்ந்து **"என்னையே குழந்தையாக பாவித்துக்கொள்"** என்று அருளிச் செய்ததையடுத்து, கவியின் மனம் அமைதியடைந்து, "ஞானப்பான" என்னும் ஓர் அரிய பாடல்தொகுப்பை இயற்றினார். அதில் வரும் "**உண்ணிக்ருஷ்ணன் மனஸ்ஸிலைக் களிக்கும்போள் உண்ணிகள் மற்று வேணமோ மக்களாய்**" என்ற வரிகள் மேற்குறிப்பிட்ட சம்பவத்துக்கு ஓர் எடுத்துக்காட்டு. வேதசாரங்கள், ஸ்ரீமத் பாகவதம், பகவத்கீதை, பஜகோவிந்தம், விவேக சூடாமணி, நாராயணீயம் என்று எல்லா திவ்யக் கிரந்தங்களிலுமுள்ள அரிய கருத்துகளை உட்கொண்டு, சாறு பிழிந்து, அனைவரும் எளிதில் புரிந்துகொள்ளும்படி, எளிமையான மலையாள மொழியில் இயற்றப்பட்டது 'ஞானப்பான'.

நீண்ட நாட்கள் குருவாயூரிலேயே தங்கி ஸ்ரீமத் பாகவதம் பாராயணம் தொடர்ந்து நடத்திக்கொண்டு கண்ணனின்பால் பக்தியில் தோய்ந்து நாட்களை நகர்த்திய பக்தகவி, கேரள தேசத்திலுள்ள முக்கியமான எல்லாக் கோயில்களுக்கும் சென்று பகவத் தரிசனம், பாகவதபாராயணம், பலபல தெய்வங்களைக் குறித்த தோத்திரப்பாடல்கள் இயற்றுவது என்று காலம் கழித்தார். இப்படியாகத்தான் தனது குலதெய்வமாம் திருமாந்தாம்குன்னு பகவதி கோயிலில் எழுந்தருளியிருக்கும் அம்பிகையின்மீது **"கனஸங்கம் (அம்பாஸ்தவம்)"** வைக்கம் மஹாதேவர் பற்றிய **"நரனாயிங்ஙினே ஜனிச்சுபூமியில்"** என்று ஆரம்பிக்கும் வைக்கத்தப்பன் ஸ்துதி, இரண்டு **"குசேலவ்ருத்தங்கள்", குமாராஹரணம் (ஸந்தான கோபாலம் பான), ஸ்ரீக்ருஷ்ண கர்ணாம்ருதம், ஹரிஸ்தோத்ரம் மாதங்கீஸ்துதி, மஹாலக்ஷ்மி விகல்பம் வினா** போன்று சுமார் ஐம்பத்து இரண்டு க்ருதிகள் அவர் இயற்ற **"பூந்தானஸர்வ ஸ்வம்"** என்ற தலைப்பில் புத்தகமாக குருவாயூர் தேவஸ்வம் வெளியிட்டுள்ளது.

'கனஸங்கம்' என்று ஆரம்பிக்கும் 'அம்பாஸ்துதியானது பூந்தானம் திருமேனியின் குலதெய்வமாம் திருமாந்தாம்குன்னு பகவதி கோயிலில் எழுந்தருளியிருக்கும் அம்பிகையின் கேசாதிபாத வர்ணனையாகும். கார்மேகக் கூட்டங்கள் ஒன்று சேர்ந்தாற்போல் விளங்குகின்ற

கேசபாரத்தில் ஆரம்பித்து, பிரம்மா, விஷ்ணு, சிவன், தேவர்கள், மஹர்ஷிகள் என்று அனைவராலும் வணங்கப்படும் அம்பிகையின் திவ்ய சரணாரவிந்தங்கள் வரை வர்ணிப்பதாக 122 ஈரடிகளில் இந்தக் க்ருதி அமைந்துள்ளது. ஒவ்வொரு ஈரடியின் முடிவிலும் அம்பிகையின் அங்கங்களை 'கைதொழுன்னேன்' என்னும் வரிகள் இதற்கு மேலும் அழகு சேர்க்கின்றது.

**'வைக்கத்தப்பன் ஸ்துதி'**யோ, ஸம்ஸார ஸாகரத்திலிருந்து கரையேற பரமசிவனின் அருளை வேண்டும் க்ருதியாகும். ஐந்து, நான்குவரிச் செய்யுட்களாக, முதல் எழுத்து பஞ்சாக்ஷரமாக அமைக்கப்பட்டது. ஒவ்வொரு செய்யுளின் நான்காவது வரி 'திருவைக்கம் வாழும் சிவ சம்போ' என்று முடிகின்றது.

**'குசேலவ்ருத்தம் பான'** என்பது 360 ஈரடிகளில் குசேலரின் சரித்திரம் உட்கொண்டது. கணநாதன், வாணி, க்ருஷ்ணன், குருவாயூரப்பன், குரு, வியாசர் மற்றும் திருமாந்தாம்குன்னு பகவதி ஆகியோரைப் பிரார்த்தனை செய்து, கவியின் வாக்காக அமைந்தது. **'குசேலவ்ருத்தம் காத'** என்பது குசேலரின் வாக்காக, தன் சரிதத்தைத் தானே சொல்லும்படியாக, 464 ஈரடிகளில் அமைந்தது. கண்ணன் ஒருபிடி அவல் சாப்பிட்ட உடனேயே குசேலரின் இல்லத்தில் சகல ஸௌபாக்கியங்களும் நிரம்பியது. அதனால் இரண்டாவது கைப்பிடி அவலை எடுத்தபோது ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மியேயான ருக்மிணிப்பிராட்டி, கண்ணனின் கைகளைப் பிடித்து தடுத்துவிட்டதாகக் கூறும் இவ்விரண்டு க்ருதிகளுமே கேரளதேசத்தில் மிகவும் பிரபலமானவையாகும்.

**'ஸந்தான கோபாலம் பான'** என்பது **'ஸர்ப்பிணி'** என்ற விருத்தத்தில், **'அர்ஜுன சபதம்' 'தசமபுத்ர அந்தர்தானம்' 'பார்த்த சபத பாலநோத்யமம்' 'வைகுண்ட வர்ணனயும் மோஹ நிவ்ருத்தியும்'** என்று நான்கு பாகங்களாக, மொத்தம் 1210 ஈரடிகள் கொண்டது. கண்ணன் அர்ஜுனனையும் உடன் அழைத்துக்கொண்டு, ஆகாயமார்க்கமாக விஷ்ணுலோகம் சென்று, அங்குள்ள பாற்கடலில் பள்ளிகொள்ளும் பரந்தாமனின் வர்ணனை, வைகுண்ட வர்ணனை என்று படிக்கப் படிக்கத் திகட்டாத படைப்பாகும். இதைப் படிப்பவரும் கேட்பவரும் புத்திர ஸம்பத்து, தனம், மித்ரம், களத்திரம், ஸௌக்கியம் ஆகிய அனைத்தும்

கிடைக்கப்பெற்று, அந்திமத்தில் முக்தியும் அடைவார்கள் என்ற ஃபலஸ்ருதியுடன் நிறைவடைகின்றது.

'**ஹரிஸ்தோத்ரம்**' என்பது 'காகளி' விருத்தத்தில் 144 ஈரடிகளைக் கொண்டது. ஒவ்வொரு ஈரடியும் 'க்ருஷ்ணா ஹரி' என்று முடியும். ஸ்ரீமத் பாகவதத்தை அடிப்படையாகக் கொண்ட இக்கிருதி, பூமி பாரம் குறைக்க மஹாவிஷ்ணு க்ருஷ்ணனாக அவதாரம் செய்ததிலிருந்து, ஸந்தான கோபாலம் சரித்திரம் வரையில் உள்ள க்ருஷ்ண லீலைகளை விவரிக்கின்றது.

ஜகன்மாதாவான ஸ்ரீபார்வதியை மாதங்கி என்ற பெயரால் துதிக்கும் '**மாதங்கிஸ்துதி**' என்பது, நான்கு வரிகள் கொண்ட எட்டு சுலோகங்கள் உடையது. ஒவ்வொரு சுலோக ஆரம்ப வரியும் ஸப்தஸ்வரங்களான '**ஸ ரி க ம ப த நி**' என்ற எழுத்துகளில் தொடங்கி, நான்காவது வரிகள் 'மாதங்கி ஜய பகவதி ஜய ஜய என்று முடியும். எட்டாவது சுலோகமாக 'இதைப் பக்தியுடன் சொல்வோரையும் பாடுவோரையும் நேரில் பார்த்து அருள் செய்யம்மா என்று கவி பிரார்த்தனை செய்வதாக அமைந்துள்ளது.

'**மஹாலக்ஷ்மி விகல்பம் வினா**' என்பது, எட்டு வரிகள் உடைய பத்து சுலோகங்களைக் கொண்டது. ஒவ்வொரு சுலோகத்தின் முடிவிலும் திருமகளின் கடைக்கண் பார்வை தாமதமின்றிக் கிடைக்க வேண்டுமே என்ற கோரிக்கையைக் கொண்டது.

இவை தவிர, 46 ஈரடிகளில் 'அம்பாடி தன்னில் ஒருண்ணியுண் டங்ஙனே' என்ற '**ஆனந்த ந்ருத்தம்**', 15 ஈரடிகளில் '**கோவிந்த ஸ்துதி**', 35 வரிகளில் '**வாமபுரேச ஹரே**', '**சௌரிஸ்துதி**', '**அஷ்டாக்ஷர கீர்த்தனம்**', '**துவாதச நாம கீர்த்தனம்**', '**நாராயண ஜய**', '**அஞ்ஜன ஸ்ரீதரா**', '**கணிகாணேணம் பகவானே**', '**தசாவதாரம்**', 104 ஈரடிகளில் '**கேசாதிபாதவும் பாதாதிகேசவும்**', '**பார்தஸாரதி ஸ்தவம்**' என்று உண்ணிக்கண்ணனை வர்ணிக்கும் க்ருதிகளையும் பூந்தானம் திருமேனி இயற்றியுள்ளார். அவரது அனைத்து படைப்புகளுமே சிறு குழந்தைகள் கூட மிக எளிதாக புரிந்துகொண்டு பாடக்கூடிய பக்திப் பாடல்கள் ஆகும். பூந்தானம் திருமேனியின் ஒவ்வொரு க்ருதியும் குருவாயூரப்பனின் பக்தர்களுக்குப் படிக்கப் படிக்கத் திகட்டாத பொக்கிஷங்களாகும்.

ஒரு சமயம் தனது தீர்த்தயாத்திரையின்போது கொட்டியூர் சிவன் கோயிலுக்கு வந்த பூந்தானம் கவி வழக்கம்போல் பாகவதபாராயணம்

நடத்தினார். தசமஸ்கந்தத்தில் ருக்மிணீ க்ருஷ்ண ப்ரணயகலஹம் குறித்த "கர்ஹிசிதத்யாயம்" பாராயணம் செய்தவர் அன்றைய பாராயணத்தைப் பூர்த்திசெய்துவிட்டு, புத்தகத்தில் அடையாளம் வைத்து உறங்கச் சென்றார். மறுநாள் நித்ய கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு மீண்டும் ஸ்ரீமத்பாகவதம் பாராயணம் செய்ய புத்தகத்தை எடுத்தபோது முதல் நாள் அவர் வைத்திருந்த பக்கத்திலிருந்த அத்தியாய ஆரம்பத்தில் அடையாளம் இருப்பதைக் கண்டவர் அவ்வாறே ஆரம்பித்து படித்து மீண்டும் அன்று முடிவடைந்த இடத்தில் அடையாளக்குறி வைத்தார். மீண்டும் மீண்டும் தொடர்ச்சியாக இவர் அடையாளம் வைப்பதும், யாரோ அதை மாற்றி வைப்பதால் 'கர்ஹிசிதத்யாம்' என்ற பகுதியையே திரும்பத் திரும்பப் படிப்பதுமாக பலநாட்கள் தொடர்ந்தது. தன்னை யாரோ ஏமாற்றுகிறார்கள் என்று நினைத்த கவி அடையாளம் வைத்த இடத்திலிருந்தல்லாமல், தொடர்ச்சியாக அடுத்த அத்தியாயத்திலிருந்து படிக்க ஆரம்பித்தார். அன்று இரவு அவர் கனவில் தோன்றிய ஸாக்ஷாத் ஸர்வேச்வரனான சிவபெருமான் "**அந்த அத்தியாயம் நீ வாசித்துக் கேட்டு போதுமென்று தோன்றவில்லை. அதனால் நான்தான் அடையாளத்தை மாற்றி வைத்தேன்**" என்று உரைத்தாராம். தனது பாகவதபாராயணத்தை சிவபெருமானே செவி சாய்த்திருக்கிறார் என்பதில் ஆனந்த பரவசனான பக்தகவி பூந்தானம் முறையாக பாராயணம் பூர்த்தி செய்து அங்கிருந்து அடுத்த ஊருக்குப்போக ஆயத்தமானார். கிளம்புவதற்கு முன்பு மீண்டுமொருமுறை பகவானைத் தரிசித்துவிட்டு தனது புத்தகங்களையும் உடைமைகளையும் எடுக்க வந்தபோது அங்கு அவர் கண்ட காட்சி அவரை வியப்பிலாழ்த்தியது. சிவபெருமானே "ஸ்ரீமத் பாகவதம்" தசமஸ்கந்தம் "கர்ஹிசித்அத்தியாயம்" வாசிக்க உன்னிப்பாக கேட்டுக் கொண்டிருந்த ஜகன்மாதாவான ஸ்ரீபார்வதிதேவி. பரமேச்வரனிடத்தில் சொல்கிறாளாம் - "**வாயன நன்னாவுன்னுண்டு பக்ஷே பக்திவிஷயத்தில் பூந்தானம் தன்னேயாணு மேலே**" (பாராயணம் நன்றாகத்தான் இருக்கின்றது ஆயினும் பக்தி விஷயத்தில் பூந்தானம் தான் உத்தமம்) என்று இப்படி அம்பாளின் திருவாக்கால் புகழப்பட்ட பக்தகவிக்கு "**கர்ஹிசித் பட்டத்ரி**" என்று மற்றுமொரு பேர் வந்தாகக் கூறப்படுகின்றது.

பல பல திவ்ய தேசயாத்திரையில் இருந்தவர் ஒவ்வொரு மாதத்தின் ஆரம்பத்திலும் குருவாயூருக்கு **"திங்ஙள் பஜனம்"** செய்ய தவறாமல் வந்து விடுவார். இடையே தனது இல்லத்திற்கும் வந்து சிலநாட்கள் தங்கிவிட்டுச் செல்வார். அப்படியொருமுறை தனது இல்லத்திலிருந்து குருவாயூர் செல்லும் வழியில் ஒரு கொள்ளைக் கூட்டத்தினர் அவரை வழிமறித்தனர். கொள்ளைக் கூட்டத்தினர் அவரை உபத்திரவம் செய்தபோது – **"யா த்வரா திரௌபதீ த்ராணே, யா த்வரா கஜரக்ஷணே, மய்யார்த்தே கருணா மூர்த்தே, ஸா த்வரா க்வ கதா ஹரே?"** என்று குருவாயூரப்பனிடத்தில் உள்ளமுருகப் ப்ரார்த்தனை செய்தார். அந்த நொடியிலேயே நாடுவாழி (அரசன்) மந்திரியான 'மங்ஙாட்டச்சன்' என்பவர் எங்கிருந்தோ திடீர் என்று அங்கு வந்து பூந்தானத்தை கொள்ளையரிடமிருந்து காப்பாற்றினார். தக்க சமயத்தில் தனக்கு உதவிய மந்திரிக்கு தனது விரலில் கிடந்த மோதிரத்தைப் பரிசாக அளித்துவிட்டு, கவி பத்திரமாக குருவாயூர் சென்றடைந்தார். திருக்குளத்தில் ஸ்நானம் செய்து பகவானைத் தரிசனம் செய்யச் சென்றவருக்கு பெரிய அதிசயம் காத்திருந்தது. முதல் நாள் இரவு கோயில் மேல்சாந்தியின் கனவில் வந்த குருவாயூரப்பன் **"பிம்பத்தில் காணுன்ன பவித்ரமோதிரம் பூந்தானத்தின்டேதாணு; அத்தேஹத்தினு மடக்கிக் கொடுத்தேக்கு"** (விக்ரஹத்தில் காணும் பவித்ரமோதிரம் பூந்தானத்திற்குச் சொந்தமானது; அதை அவருக்குத் திருப்பிக் கொடுத்துவிடு) என்று அருளிச் செய்தாராம். இப்படி பக்தரக்ஷகனாம் குருவாயூரப்பன் 'மங்ஙாட்டச்சன்' என்ற ரூபத்தில் வந்து பூந்தானத்தைக் காத்தருளின சரிதத்தை, **'வள்ளத்தோள்'** என்னும் கவி **'ஆ மோதிரம்'** என்ற பெயரில் ஒரு கவிதை எழுதியுள்ளார்.

பூந்தானம் குருவாயூர் வரும்போதெல்லாம் அவர் அருகே அமர்ந்து பாகவதக் கதாஸ்ரவணம் செய்தும் கண்ணனின் கதைகளை அவர் கூறக் கேட்டும் ஆனந்தமடைந்து வந்த மஞ்சுளா என்ற ஒரு 'வாரஸ்யார்ச் சிறுமி' (கோயில்களில் பகவானுக்குச் சாற்றும் மாலைகளைக் கட்டும் கைங்கரியம் செய்யும் வாரியர் என்னும் வகுப்பைச் சேர்ந்தவர்) பூந்தானம் கவியை 'பாட்டுமுத்தச்சா' (முத்தச்சன் என்றால் தாத்தா என்று பொருள்) என்று அன்புடன் அழைத்து அவரை தனது தாத்தாவாகவே பாவித்து வந்தாள். குருவாயூரப்பனிடத்தில் அளவுகடந்த பக்தியுடைய அச்சிறுமி ஒவ்வொரு நாளும் கண்ணனுக்குத் தவறாமல் மாலை கட்டிக்கொண்டு வந்து

சமர்ப்பிப்பது வழக்கம். ஒருநாள் மஞ்சுளா மாலையுடன் வந்தபோது சற்றே தாமதமானதால் கோயில் நடை அடைத்து விட்டு அனைவரும் சென்று விட்டிருந்தனர். கண்ணனுக்கு வழக்கம்போல் மாலை அணிவிக்க முடியாமல் போய்விட்டதே என்ற தாபத்தில் கேவிக்கேவி அழுது கொண்டிருந்த குழந்தையைப் பார்த்த பூந்தானம் அவளைச் சமாதானம் செய்து, அவள் கண்ணீரைத் துடைத்துக் கோயிலின் அருகில் கிழக்குத் திக்கிலுள்ள ஆலமரத்தின் சுவட்டில் ('ஆல்த்தறா' என்று சொல்வார்கள்) மாலையை வைத்துவிடும்படியும் அதனால் அவளது சேவை குறையில்லாமலிருக்கும் என்றும் எடுத்துச் சொன்னார். அவளும் அவ்வாறே செய்தாள். மறுநாள் அதிகாலை நடை திறந்து பார்த்த மேல்சாந்தி முதல் நாள் இரவு தான் சார்த்தியிராத புதிய மாலை ஒன்று குருவாயூரப்பன் திருவுடலில் கிடப்பதைப் பார்த்து மிகுந்த ஆச்சரியத்திற்குள்ளானார். அது மஞ்சுளா என்ற பக்தை குருவாயூரப்பனுக்குச் சார்த்திக் கொணர்ந்த மாலைதான் என்பதைப் பூந்தானம் ஊர்ஜிதம் செய்தார். மஞ்சுளா மாலை வைத்து வழிபட்ட ஆலமரம் "மஞ்சுளால்" என்ற பெயரில் மஞ்சுளாவின் தீவிர க்ருஷ்ண பக்தியையும் "உண்மையான பக்தியுடன் எதை எப்போது எங்கு சமர்ப்பணம் செய்தாலும் பகவான் நிச்சயமாக அதை ஏற்றுக் கொள்வான்" என்று அச்சிறுமிக்கு எடுத்துக்கூறிய பூந்தானத்தின் வார்த்தைகளைச் சத்தியமாக்கிய குருவாயூரப்பனின் கருணையையும் பறைசாற்றும் வண்ணம், இன்றைக்கும் அந்த மஞ்சுளால் குருவாயூர் கிழக்கு நடையில் நின்று கொண்டிருக்கின்றது.

தனது குருவின் வாதரோகத்தைத் தான் பெற்றுக்கொண்டு அவருக்கு ரோகசாந்தி என்னும் குருதக்ஷிணையைக் கொடுத்து, அவரருளாலே குருவாயூர் சென்று பஜனம் இருந்து, பக்தியுடன் குருவாயூரப்பனை வேண்ட, கர்பக்ருஹத்திலிருந்து "**ஸான்த்ர ஸான்த்ர**" என்று பகவான் முதல் அடியெடுத்துக் கொடுக்க, அதையே ஆரம்ப சுலோகமாக '**ஸாந்த்ரா நந்தாவபோதாத்மக – மமநுபமிதம்**" என்று 'நாராயணீயம்" என்னும் ஸ்ரீமத் பாகவதத்தை அடிப்படையாகக் கொண்ட காவியத்தைப் படைத்து, வாதரோக நிவ்ருத்தி பெற்று குருவாயூரப்பனை ப்ரத்யட்சமாகக் காணக்கிடைத்த பக்தகவி மேல்பத்தூர் நாராயணபட்டத்ரியை நாமெல்லாம் அறிவோம். அவர் வாழ்ந்த காலம் (கி.பி.1560–1646) பூந்தானம் திருமேனியின் ஸமகாலத்தவர். குருவாயூரில் அடிக்கடி இருவரும் சந்தித்துக் கொள்வது வழக்கம். தான் இயற்றிய "ஸந்தானகோபாலம் பான"

என்னும் க்ருதியை பிழைதிருத்தம் செய்து தருமாறு பூந்தானம் வேண்டிக் கொள்ள, ஸம்ஸ்க்ருத மொழியில் மிகுந்த பாண்டித்தியம் உள்ள பட்டத்திரி மலையாள பாஷையில் அமைந்த க்ருதியைப் படிக்க விருப்பமில்லாததால் அவரின் கோரிக்கையை நிராகரித்து விட்டாராம். மிகுந்த மனவேதனை யடைந்தார் பூந்தானம். அன்றிரவு பட்டத்திரியின் வாதரோகம் முற்றிப்போய் அவர் கடுமையாக அவதிப்பட நேரிட்டது. ஓர் உத்தம பக்தனின் உண்மையான கோரிக்கையை நிறைவேற்ற மறுத்ததால்தான் தனக்கு இந்த தண்டனை என்பதையுணர்ந்த மேல்பத்தூர் குருவாயூரப் பனின் சரணாரவிந்தங்களில் கண்ணீர் மல்க அபராதக்ஷமாபணம் வேண்டி நிற்க, கர்பக்ருஹத்திலிருந்து அசரீரியாக "**மேல்ப்பத்தூரின்டே விபக்தியேக்காள் பூந்தானத்தின்டே பக்தியாணெனிக்கிஷ்டம்**" (மேல்பத்தூரின் விபக்தியை விட பூந்தானத்தின் பக்தி தான் எனக்குப் பிரியம்) என்று பகவான் சொல்ல, பூந்தானத்தின் க்ருதியை ஏற்றுக் கொண்டு அங்கீகாரம் கொடுத்தார் மேல்பத்தூர் என்று கூறப்படுகின்றது. மஹாகவி வள்ளத்தோள் இந்நிகழ்ச்சியை நினைவு கூறும் வகையில் 'பக்தியும் விபக்தியும்' என்று ஒரு கவிதை இயற்றியுள்ளது குறிப்பிடத்தக்கது. இப்படி பட்டத்ரி பிழை தீர்த்து அங்கீகாரம் கொடுத்த க்ருதி 'ஸந்தான கோபாலம் பான"யா அல்லது 'ஸ்ரீக்ருஷ்ண கர்ணாம்ருதமா' அல்லது 'ஞானப்பானயா' என்று அபிப்பிராய பேதங்கள் உள்ளது. ஸ்ரீக்ருஷ்ண கர்ணாம்ருதம் பூந்தானம் தனது தொண்ணூறாவது வயதில் இயற்றியதாகையால் "ஸந்தான கோபாலம் பான" தான் என்று மலையாள பாஷையின் கவிஸ்ரேஷ்டர்களில் முதன்மை வகிக்கும் 'உள்ளூர் எஸ். பரமேச்வரய்யா' எடுத்துக் கூறியிருக்கின்றார். ஞானப்பான என்னும் க்ருதி தான் பட்டத்ரி திருத்தம் செய்தார் என்றும் சிலர் கூறுகின்றனர்.

ஒருநாள் பூந்தானம் விஷ்ணுஸஹஸ்ரநாமம் சொல்லிக் கொண்டிருக்கும்பொழுது 'பத்மநாபோ மரப்ரபு' என்று தவறாக சொன்னதை அவ்வழியே வந்த பட்டத்ரி '**பத்மநாபன் மரப்ரபுவல்ல; அமரப்ரபுவாணு**" என்று திருத்தம் செய்தாராம. '**ஞான் மரப்ரபுவுமாணு அமரப்ரபுவுமாணு**' என்று குருவாயூரப்பன் அசரீரி வாக்காக பட்டத்ரியைத் தெளிவுபடுத்தியதாகவும் சொல்லப்படுகின்றது. இவ்வாறு பூந்தானம் திருமேனியின் சுத்தபக்தியை பகவான் அங்கீகாரம் செய்ததன் நினைவாக இன்றைக்கும் குருவாயூர் கோயிலின் அருகில் பாஞ்ச ஸன்யம் விடுதியின் சமீபம் மரப்ரபு என்ற ரூபம் நாம் பார்க்கலாம்.

மற்றொருமுறை, 'ஸந்தான கோபாலம் பான' இயற்றிக்கொண்டிருந்த பூந்தானம் "வைகுண்ட வர்ணனம்" என்னும் பகுதியை எழுதி, திருப்தியடையாமல், "**வைகுண்டத்தின்டெ யதார்த்த அவஸ்த மனஸ்ஸிலாக்கித்தரேணே**" (வைகுண்டலோகத்தின் நிஜரூபத்தை எனக்கு உணர்த்த வேண்டுமே) என்று பகவானிடம் வேண்டினாராம். அன்றிரவு ஓர் அதிசயம் நடந்தது. உறங்கிக் கொண்டிருந்த பூந்தானத்தை இரண்டு துவாரபாலகர்கள் வைகுண்ட லோகத்திற்கு அழைத்துப் போய் அங்குள்ள அற்புதங்களையெல்லாம் காண்பித்தார்கள். அவர்கள் பூந்தானத்தின் பாகவதம் பாராயணம் கேட்டு முக்திநிலையையடைந்த இரண்டு பலாமரங்கள் (பிலாவு என்று மலையாளத்தில் சொல்வார்கள்) ஆவர்! இச்சம்பவம் நடப்பதற்கு முதல் நாள் பூந்தானம் ஸ்ரீமத் பாகவதம் பாராயணம் செய்து கொண்டிருந்த போது, அவரது இல்லத்தின் வடக்குத்திசையில் நின்றிருந்த இரண்டு பலாமரங்கள் காற்றில் வீழ்ந்து விட்டதாகவும், பாகவத கதாஸ்ரவணத்தின் பயனாக அவை வைகுண்டம் சென்று அங்குள்ள வைகுண்டவாசிகளிடம் பூந்தானத்தைக் குறித்துச் சொல்ல, அவர்கள் கேட்டுக் கொண்டபடியால் பூந்தானம் வைகுண்டலோகம் சென்று அவர்களுக்குப் பாகவதம் படித்துக் காட்டினார் என்றும் ஐதீகங்கள் உள்ளன.

இப்படி வாழ்நாள் முழுவதும் திவ்யதேசப் பயணங்கள், ஸ்ரீமத் பாகவதம் பாராயணம், பக்திரசம் சொட்டும் கவிதைகள் புனைதல், பகவன் நாமஸங்கீர்த்தனம் செய்தல் என்று ஸதாஸர்வகாலமும் அம்பாடிக் கண்ணனையே நினைந்துருகிக் கொண்டிருந்த பக்தகவி பூந்தானம் வயோதிக நிலையை அடைந்தார். மூப்பிற்கே உரித்தான சரீர உபாதைகள் அவரை வாட்டத் துவங்க, முன்புபோல் அடிக்கடி குருவாயூர் பிரயாணம் செய்ய இயலாமல், உண்ணிக் கண்ணனை நேரில் காண முடியாமல் அவர் தவித்தார். அவரது கனவில் தோன்றிய பகவான் "**இனி பூந்தானம் இவிடெ இருன்னு பஜிச்சு கொள்க**" என்று அருளிச் செய்ய, பகவானை பிரத்யக்ஷமாகக் கண்ட இடத்தில், திருமாந்தாம்குன்னு பகவதீக்ஷேத்திரத்தின் இடதுபாகத்தில் பூந்தானம் பணிசெய்வித்த கோயில்தான் "இடத்துப்புறத்தம்பலம்" என்னும் கோயில். வாமபுரம் என்று அறியப்படும் இக்கோயிலில் உறையும் சாக்ஷாத் குருவாயூரப்பனேயான வாமபுராதிவாஸன் (இடத்துபுறத்தப்பன்) என்னும் உண்ணிக்கண்ணனைக் குறித்து, கண்ணனைப் பச்சிளம் பாலகனாகப் பாவித்து, தன்னை யசோதை, நந்தகோபர் என்கின்ற பாவனையில், ஸ்ரீமத்பாகவதம் தசமஸ்கந்தத்தில் உள்ள கிருஷ்ண லீலைகள் அனைத்தையும் 90ஆவது வயதில் அகக்கண்களால் பருகிக்

கொண்டே பூந்தானம் இயற்றிய தோத்திரத் தொகுப்புதான் "**ஸ்ரீக்ருஷ்ண கர்ணாம்ருதம்**".

பக்தகவி பூந்தானத்தின் வாழ்நாள் முழுதும் பலவிதமான அற்புதங்களைச் செய்த அவரது உண்ணிக்ருஷ்ணன், அவரது அந்திமகாலத்திலும் ஓர் அதிசயத்தை நிகழ்த்திக் காட்டினார். ஸ்ரீக்ருஷ்ண கர்ணாம்ருதம் 163ஆம் சுலோகத்தில், பகவத் சாக்ஷாத்காரம் கிடைக்க மிக மிக எளிதான உபாயமான நாமஸங்கீர்த்தனத்தின் மஹிமைகளை எடுத்துச் சொன்னவர், பகவானிடத்தில் ஒரு விண்ணப்பமாக, நாமஸங்கீர்த்தனம் செய்யாமல் இருக்கும் ஓர் அவஸ்தை என் நாவிற்கு வருவதற்கு முன்பாக நான் மரிக்க வேண்டுமே என்பதுதான் அந்தக் கோரிக்கை! அதை நிறைவேற்றத்தானோ என்னவோ, ஓர் இரவு கனவில் தோன்றிய கண்ணன், மறுநாளே பூந்தானத்தை வைகுண்டத்திற்குக் கூட்டிப்போக வருவதாக முன்னறிவிப்புக் கொடுக்கின்றார். மறுநாள் காலை பூந்தானம் ஊர்மக்களிடம், வைகுண்டவாஸன் வர இருப்பதைக் கூறி அவரை வரவேற்க எல்லா ஏற்பாடுகளையும் செய்கின்றார். பார்த்துக் கொண்டிருந்தவர் எல்லோரும் முதுமையின் காரணமாக அவரது புத்தி பேதலித்து விட்டது என்று நினைக்கின்றனர். ஆனால் பூந்தானமோ அவர்களைப் பார்த்து "**ஞானிதா வைகுண்டத்திலேக்கு போகுன்னு; என்னோடொப்பம் ஆரெங்கிலும் போருன்னோ?**" என்று (நான் இப்போது வைகுண்டம் செல்லவுள்ளேன். என்னுடன் யாரேனும் வருகின்றீர்களா?) கேட்டபோது, பரம க்ருஷ்ண பக்தையும், அவரது இல்லத்தில் பலபல வருடங்கள் வீட்டு வேலைகள் செய்தும், அவரது மனைவியைக் கவனித்துக் கொண்டும், பூந்தானத்தின் ஸ்ரீமத் பாகவதம் பாராயணத்தை விடாமல் ஸ்வரணம் செய்துவந்தவருமான ஓர் தாஸிப்பெண் மட்டும் "**அடியேன் வருன்னுண்டு**" (அடியேன் வருகின்றேன்) என்று பதில் கூறினாளாம். அந்த க்ஷணமே அவளது பூதவுடல் நிலத்தில் பதிக்க அவளது ஜீவாத்மாவானது வைகுண்டம் சென்றது. பூந்தானம் தனது பூதஉடலுடனேயே விஷ்ணுலோகம் சென்றார் என்று ஐதீகம். இச்சம்பவம் நடந்தது 1640ஆம் வருடம் ஆகும்.

நிஷ்களங்கமான க்ருஷ்ணபக்தி என்னும் பீயூஷதாரையில் மூழ்கி பூந்தேனாகப் பூந்தானம் திருமேனி இயற்றிய அனைத்துப் படைப்புகளும் ஸூர்ய சந்திரர்கள் உள்ளளவும் நிலைத்து நின்று, குருவாயூரப்பனின் திருஅருளை அனைவருக்கும் எட்டிப் பிடிப்பதற்கு உகந்த படிக்கட்டுகளாக அமையும் என்பது ஸர்வ நிச்சயம்.

**பூந்தானம் திருவடிகள் சரணம்!**

## உள்ளடக்கம்





# ஸ்ரீ க்ருஷ்ண கர்ணாமிர்தம்

## பாகம் 1

## லீலாம்ருதம்

1. கர்ணாம்ருதம் வாமபுராதிவாஸின்
நின்னால்" மதம் கிஞ்சன பாஷயாய் ஞான்
என்னால் வரும் வண்ணமுதார கீர்த்தே!
சொன்னாலதும் ப்ரீணனமாய் வரேணம்.

கர்ணாம்ருதம் = காதுக்கு அமிர்தமானது; வாமபுராதிவாஸின் = இடது பாகத்தில் உள்ள கோயிலில் வசிக்கின்றவனே (இடத்துபுறத்தப்பன் என்றும் சொல்வதுண்டு); நின்னால் மதம் = உனது இச்சை; கிஞ்சன = கொஞ்சம்; பாஷயாய் ஞான் = நான் எனது மொழியில் (மலையாளத்தில்); என்னால் வரும் வண்ணம் = எனக்குத் தெரிந்த மட்டில்; உதாரகீர்த்தே = விசாலமான கீர்த்தியை உடையவனே; சொன்னாலதும் = சொன்னால் அதுகூட; ப்ரீணனமாய் வரேணம் = உனது சந்தோஷத்திற்காக / ப்ரீதிக்காக அமைய வேண்டுமே.

ஹே! இடத்துபுறத்தப்பா, உன்னுடைய ப்ரீதியைக் கருதி என்னால் இயன்ற அளவு இந்த கர்ணாம்ருதம் சில வரிகளில் சொன்னால் அது உன்னுடைய சந்தோஷத்திற்காக ஆகவேண்டுமே. [அங்காடிப் புறத்தின் சமீபம் திருமாந்தாம்குன்று க்ஷேத்ரத்திலிருந்து வடக்கு கிழக்காக அரை நாழிகை தூரத்திலுள்ள (இடத்துபுறம்) ஸ்ரீக்ருஷ்ணன் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இடத்துபுறத்தப்பன் ஸாக்ஷாத் குருவாயூரப்பனாகவே பூந்தானத்திற்குக் காட்சி கொடுத்து, "இனி வயதான காலத்தில் குருவாயூர் வரை வர இயலாததால் என்னை இங்கேயே பஜித்துக்கொள்" என்று திருவாய் மலர்ந்தருளியதாக ஐதீகம். அந்த இடத்திற்கு "வாமபுரம்" என்று பேர்.]

2. ஆக்கம் பூண்டஷ்டமீரோஹிணி யொருமகலர்ன்
னோரு நாள் அர்த்தராத்ரெள
சொல்க்கொள்ளும் சிங்ஙமாஸே முழுமதியுமுதிக்
குன்ன முக்யே முஹூர்த்தே

**த்ருக்கய்யில் சங்கசக்ராம்புஜ கதகள் தரிச்**
**சோரு பாலஸ்வரூபம்**
**தக்கத்தில் தேவகிக்கும் கணவனுமணயேத்**
**தர்சிதம் கைதொழுன்னேன்.**

ஆக்கம் = பெருமை, ஐஸ்வர்யம்; ஒருமகலர்ன்னோரு = ஒன்றாகச் சேர்ந்த ஒரு; அர்த்தராத்ரெள = நடுநிசியில்; சொல்க்கொள்ளும் = ப்ரசித்தமான; முழுமதி = பூர்ணசந்திரன்; முக்யே முஹூர்த்தே = முக்கியமான முஹூர்த்த நேரத்திலே; த்ருக்கய்யில் = திருக்கையில்; சங்க சக்ராம்புஜகதகள் தரிச்ச = சங்கம், சக்கரம், தாமரை, கதை ஆகியவை தரித்த; பாலஸ்வரூபம் = குழந்தை ரூபம்; தக்கத்தில் = சாமர்த்தியமாக; தேவகிக்கும் கணவனுமணயெ = தேவகிக்கும் அவள் கணவனான வசுதேவருக்கும் ஒரே சமயத்தில்; தர்சிதம் = தரிசனம் கொடுத்து; கைதொழுன்னேன் = கைதொழுது வணங்குகின்றேன்.

ஐஸ்வர்யம் நிறைந்த அஷ்டமியும் ரோஹிணியும் ஒன்றாக இணைந்த ஒரு நடுநிசியில் பூர்ணசந்திரன் உதித்து நின்ற சிங்கமாசத்தில், (ஆவணி) தேவகிக்கும் அவளது கணவனுக்கும், திருக்கைகளில் சங்கு, சக்கரம், கதை, பத்மம் ஆகியவையை தரித்துக்கொண்டு தரிசனம் அளித்த அந்த பாலஸ்வரூபத்தை நான் கைதொழுகின்றேன்.

**3. அச்சன்டே ஹஸ்த பத்மத்தினு மதுகரமாய்த்**
**தீர்ன்னு போவான் முதிர்ன்னு**
**தல்க்காலே முஷ்கு தேடீடின கனக**
**கவாடங்ஙள் தானே துறன்னு**
**சக்ரீசன் ச்சத்ரமார்ன்னு நிறபுழயுமுழற்**
**றோடு நீர் வாங்ஙி நின்னு**
**சிக்கென்னு அம்பாடி சேர்னு ஜனகனவிடெயக்**
**கன்யயேக் கொண்டு போன்னு.**

*அச்சன்டே* = அப்பாவினுடைய; ஹஸ்தபத்மம் = கைத்தாமரை (தாமரைபோன்ற கைகள்); மதுகரமாய்த்தீர்ன்னு = வண்டாக மாறி; முஷ்க் = அஹங்காரம்; கனககவாடங்ஙள் = தங்கத்தாலான கதவுகள்; சக்ரீசன் = ஸர்ப்பேச்வரன், ஆதிசேஷன்; தானே துறன்னு = தானாகவே திறந்து கொண்டன; ச்சத்ரம் = குடை; ஆர்ன்னு = பிடித்தான்; நிறபுழயுமுழற்றோடு

= நிறைந்த நதி வேக வேகமாக; நீர்வாங்ஙிநின்னு = வழிவிட்டு நின்றது; சிக்கென்னு = சிக்கென்று; அம்பாடி = ஆயர்பாடி, கோகுலம்; சேர்ன்னு = அடைந்து; ஜனகனவிடெயக்கன்யயே = பிதாவானவர் அங்கிருந்து அந்த கன்யகையை; கொண்டுபோன்னு = கொண்டுவந்தார்.

தாங்கள் பிதாவின் கைத்தாமரையில் ஒரு வண்டாக இருக்க, அஹங்காரம் பூண்ட தங்கக் கதவுகள் தானே திறந்து கொண்டன; ஸர்ப்பராஜன் குடையாக மாறினான்; நிறைந்து வழிந்து ஒழுகிக் கொண்டிருந்த யமுனை நதி பக்தியோடு பின்வாங்கி வழிவிட்டது; தங்களது பிதாவானவர் தாமதம் செய்யாமல் உங்களை அம்பாடியில் (ஆயர்பாடியில்) சேர்ப்பித்து அங்கிருந்து ஒரு பெண்குழந்தையைக் கொண்டு வந்தார்.

**4. அற்றம் கூடாதே கௌதூஹலபரவசனாய்**
**நந்தகோபன் ததானீம்**
**ஏற்றம் தானங்ஙளும் செய்துடனதி மஹிதம்**
**ஜாதகர்மம் கழிச்சான்**
**சுற்றிக்கண்டிச்ச பொக்கிள்க்கொடி திருவுதரக்**
**தாண்டு பங்க்யா கிடன்னோ**
**ரீற்றில்லத்துண்ணியே கண்டவரவரமிர்தா**
**நந்தமாறாடினார் போல்.**

அற்றம் கூடாதே = அளவிடமுடியாத; கௌதூஹல பரவசனாய் = சந்தோஷத்தில் பூரித்தவனாய்; ததானீம் = அப்போதே; ஏற்றம் தானங்ஙளும் செய்துடனதி மஹிதம் = உடனடியாக நிறைய தானங்கள் கொடுத்து விசேஷமாக; ஜாதகர்மம் கழிச்சான் = ஜாதகர்மம் செய்வித்தான்; சுற்றிக்கண்டிச்ச = சுற்றியிருந்த தொப்புள்கொடியை கட்டியபின் முறிப்பது; திருவுதரம் = திருவயிறு; பங்க்யா = அழகாக; கிடன்னோர் = கிடக்கின்ற (படுத்துக் கொண்டிருக்கின்ற) ஈற்றில்லம் = பிரஸவ அறை; உண்ணியே = சிறுகுழந்தையை; (நவஜாதசிசு); கண்டவரவர் = பார்த்தவர்களெல்லாம்; அம்ருதானந்தமாறாடினார் போல் = ஆனந்த சாகரத்தில் அம்ருததாரையில் நீராடினார்களாமே.

அளவுகடந்த சந்தோஷத்தால் நந்தகோபன் பரவசனாக நிறைய தானங்கள் கொடுத்து குழந்தையின் ஜாதகர்மாவும் செய்வித்தான். உனது

மனோஹாமான உதரத்தில் தொப்புள்கொடியுமாக கிடந்த நவஜாத சிசுவைப் பார்த்தவர் ஆனந்த சாகரத்தில் நீராடினார்களாமே.

5. **துஷ்டயப்பூதனய்க்கும் சுழில் வலிய கொ**
**டுங்காற்றினும் சாட்டினும் நீ**
**குட்டிக்காவாய்க்கிடக்கும் பொழுது கதிவருத்**
**தீடினான் அஸ்ரமேண**
**துஷ்ட்யா போய்ச்சென்னு கர்கன் திருவடி திரு**
**நாமங்ஙள் இட்டொருசேஷம்**
**புஷ்ட்யா மேவீடும் அம்பாடியில் அனுதிவஸம்**
**ஜேஷ்டனோடே வளர்ன்னான்.**

துஷ்டயப்பூதனய்க்கும் = துஷ்டையான பூதனைக்கும்; சுழில் வலிய கொடுங்காற்றினும் = சுழன்று வீசிய கொடுங்காற்றிற்கும்; குட்டிக்காவாய்க் கிடக்கும்பொழுது = பிஞ்சுபைதலாக உள்ளபோது; அஸ்ரமேண = சிரமம் இல்லாமல்; கதிவருத்தீடினான் = மோட்சம் கொடுத்தான்; துஷ்ட்யா = மகிழ்ச்சியுடன்; திருநாமங்ஙளிட்டோரு சேஷம் = திருநாமங்கள் இட்டபிறகு; புஷ்ட்யா = அபிவ்ருத்தியுடன், புஷ்டியுடன்; ஜேஷ்டன் = அண்ணா.

துஷ்டயான பூதனைக்கும் கொடுங்காற்றாக வந்த சகடாசுரனுக்கும் சிறுபாலகனாக இருந்த போதே தாங்கள் மோக்ஷத்தைக் கொடுத்தீர்கள். மிகவும் ஸந்தோஷத்துடன் வந்த கர்கமுனி நாமகரணவைபவம் செய்தபின் நீங்கள் அம்பாடியில் அண்ணனுடன் சேர்ந்து நன்றாக வளர்ந்து வந்தீர்கள்.

6. **ஏந்துன்ன காரணஜலத்திலொருண்ணியாய் போய்**
**நீந்தீடுவான் கழிவராதவனன்னுபோலும்**
**நந்தன்டெ கொட்டில் நடுமுற்ற மிவற்றிலெல்லாம்**
**நீந்தித்துடங்ஙிய கிடாவினு கைதொழுன்னேன்.**

ஏந்துன்ன = உயர்ந்த; காரணஜலம் = ஸ்ருஷ்யின் ஆரம்பத்திலுள்ள ப்ரளயஜலம்; நீந்தீடுவான் = நீச்சலடிக்க; கழிவராதவன் = இயலாதவன்; நந்தன்டே கொட்டில் = நந்தகோபரின் மாட்டுத் தொழுவம், பூமுகம்; நடுமுற்றம் = நாலுகெட்டு வீடுகளில் சாதாரணமாக இருக்கும்

திறந்தவெளிப்பகுதி; கிடாவினு = பாலகனுக்கு; கைதொழுன்னேன் = கைதொழுகின்றேன்.

ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் உண்டான ஜலப்ரளயத்தில் நீந்தமுடியாதிருந்த தாங்கள், நந்தகோபனின் வீட்டின் தோட்டத்திலும், நடுமுற்றத்திலும் நீந்த ஆரம்பித்து விட்டீர்கள். அப்படிப்பட்ட சிசுவை நான் கைதொழுகின்றேன்.

7. **அச்சன் சென்னச்சுதன்டெ திருமுககமலம்**
**கண்டு கொண்டாடுமப்போள்**
**அச்சன்டே ஹஸ்த பத்மத்திலொரதிசய**
**ஸம்மானம் இச்சானுகூலம்**
**வச்சாலும் வாணி விச்வேச்வர ஜனனிமுதா**
**கைவளர்த்தாளெசோதா**
**ஆச்வாஸத்தோடு நல்கி வரம் அதிலுமொரம்**
**மானமம்மய்க்கு வய்யா.**

அச்சன் சென்னச்சுதன்டெ = பிதாவானவர் வந்து அச்சுதனின்; கண்டுகொண்டாடுமப்போள் = பார்த்து மகிழ்ந்திருக்கும் வேளையில்; ஹஸ்தபத்மம் = தாமரைப்பூபோன்ற கரம்; அதிசய சம்மானம் = ஆச்சரியமான பரிசு; இச்சானுகூலம்வெச்சு = இச்சை (மனஸ்) அறிந்து வைத்து; ஏலும்வாணி = களமொழியால் கொஞ்சிக்கொண்டு; விச்வேச்வர ஜனனி = ஜகத்பதியானவனின் தாய்; முதா கைபகர்ன்னாளெசோதா = ஸந்தோஷத்துடன் தன் கையிலிருந்து (நந்தகோபன் கைகளுக்கும்) பகர்ந்தாள் யசோதை; நல்கி = கொடுத்தான்; வரம் ஓரம்மானம் அம்மய்க்கும் நல்கி = அதைவிட ஸ்ரேஷ்டமான ஓர் அபிமானத்தை அம்மாவிற்கும் கொடுத்தாய்.

அப்பாவானவர் அச்சுதனின் முகத்தாமரையைக் கண்டு கொஞ்சித் துதித்தபோது அவரது இச்சை போலவே ஓர் உகந்த சம்மானம் போல படுத்திருந்தீர். மதுர மதுரமான வார்த்தைகளைச் சொல்லி உங்களது தாயாரான யசோதை உங்களைக் கொஞ்சிக் கொஞ்சி வளர்த்தாள். அப்போது மிகுந்த நம்பிக்கையுடன் கொடுத்த வரங்களை விடப் பெரிய சந்தோஷம் அந்தம்மாவிற்கு ஏது?

8. சாஞ்சேறீடுன்ன பிச்சக்களி கவிணுகிடன்
னோமனக் கையுயர்த்திட்டு
அஞ்சும் வெவ்வேறே த்ருக்கை விரலுகள் மலரெத்
தொட்டு கிட்டாஞ்ஞும்போள்
குஞ்சிப்பூமெய் மறிஞ்ஞும்மலருமளவிலும்
புஞ்சிரித் தேன் சொரிஞ்ஞும்
குஞ்சிக்கை ரண்டுமாய் காட்டின புவனபதே!
நின்னே ஞான் கைதொழுன்னேன்.

சாஞ்சேறீடின பிச்சக்களி = சாய்ந்தும் சரிந்தும் அழகாக உள்ள நடையழகு; கவிணுகிடன்னு = கமிழ்ந்துகிடந்து; ஓமனக்கையுயர்த்தி = பிஞ்சுபோன்ற அழகான கைகளையுயர்த்தி; அஞ்சும் வெவ்வேறெ த்ருக்கை விரலுகள் = திருக்கைகளின் விரல்கள் ஐந்தையும் வேறுவேறாக ஒவ்வொன்றாக; மலருகள் = மலர்கள்; தொட்டுகிட்டாஞ்ஞும்போள் = பரஸ்பரம் தொட முடியாதிருந்தபோது; குஞ்சிப்பூமெய் = மிருதுவான பூப்போன்ற திருவுடல்; மறிஞ்ஞு = கவிழ்ந்து; புஞ்சிரித்தேன் = தேன் போன்று இனிமையான புன்சிரிப்பு; சொரிஞ்ஞும் = சொரிந்துகொண்டு; குஞ்சிக்கை = சிறியகரம்; ரண்டுமாய் காட்டின = இரண்டுமாகக் காட்டிய; புவனபதே = லோகநாதா; நின்னே ஞான் கைதொழுன்னேன் = உன்னை நான் கை வணங்குகின்றேன்.

உனது அழகார்ந்த திருவிளையாட்டுகளுக்கு இடையில் கவிழ்ந்து படுத்துக்கொண்டு கைகளின் ஐந்து விரல்களையும் தொடமுடியாமல் உனது பூமேனி மலர்ந்து, அழகான புன்சிரிப்பாகிய தேன் சொரிந்து கொண்டு, உன் குட்டிக்கைகள் உயர்த்திக்காட்டும் (அம்மாவை தூக்கிக்கச் சொல்லி) லோகநாதா! உன்னை நான் கை தொழுகின்றேன்.

9. மைக்கண்ணிமார் பலருமுண்ணி யினிக்கினிக்கென்னு
உல்க்கண்டயா களிகள் காட்டி விளிக்கும்ப்போள்
ஒக்கத்திருன்னு மறியுன்ன தயாம்புராசே
த்ருக்கால் தொழானருளு நீ கருணாகடாக்ஷம்.

*மைக்கண்ணிமார்* = மைதீட்டின அழகிய கண்களை உடையவர்கள்; *உண்ணியினிக்கினிக்கு* = குழந்தையை என்னிடம் கொடு என்னிடம் கொடு என்று; *உல்க்கண்டயா* = உத்ஸாஹத்துடன்; களிகள்காட்டி = ஓரோரு

விளையாட்டுகள் காட்டி; விளிக்குமப்போள் = கூப்பிடும்போது; ஒக்கத்திருன்னு = தாயின் இடுப்பில் அமர்ந்துகொண்டு; மறியுன்ன = மாறிமாறி திரும்பிக்கொண்டு; தயாம்புராசே = கருணைக்கடலே; த்ருக்கால் = திருப்பாதம்; தொழானருளு = தொழுவதற்கு அருள்செய்; கருணாகடாக்ஷம் = அருள்பொழிகின்ற கடைக்கண் பார்வை.

சுந்தரிமார்கள் பலரும் "குழந்தை எனக்கு எனக்கு" என்று போட்டி போட்டுக்கொண்டு பொறுமையில்லாமல் உனக்கு ஒவ்வொரு விதமான விளையாட்டுகள் காட்டி அழைக்கும்போது தாயின் இடுப்பில் அமர்ந்து உருண்டு,வளைந்து, விளையாடின கருணாசமுத்ரமே, உனது திருவடியை தொழும் பாக்கியத்தைத் தந்து என்னைக் கருணையுடன் பார்ப்பாயாக.

10. **மானத்தம்மாமனேக் கண்டம்ருது பொழியுமக்**
**கண்ணனுண்ணிக்கு சித்தே**
**மானத்தே கைவளர்த்தானம்ருத கிரணனும்**
**மெல்லே மேலேன்னிறங்ஙி**
**மானிச்சம்மய்க்கு காட்டி ப்ரமத பரவசால்**
**ரண்டு கை கொண்டு மந்தம்**
**மானத்தேக்கங்ஙயச்சீடின தொழிலொரு நாளாஸ்**
**தயா காண்மனோ ஞான்.**

மானத்து = ஆகாயத்தில்; அம்மாமனேக்கண்டு = மாமனைப் பார்த்து (அம்பிளிஅம்மாமன் என்று குழந்தைகளுக்கு நிலவை மாமனாகச் சொல்வதுண்டு); அம்ருது பொழியுமக்கண்ணனுண்ணிக்கு = அமுதுபொழியும் உண்ணிக்கண்ணனுக்கு; சித்தே = சித்தத்தில் (மனதில்); மானத்தே கைவளர்த்தான் = ஆகாயத்தை நோக்கி கை நீட்டினான்; அம்ருதகிரணன் = முழுநிலவு; மெல்லெ = மெதுவாக, மேலேன்னிறங்ஙி = மேலிருந்து இறங்கினான்; மானிச்சு = மானித்து; ப்ரமதபரவசால் = மகிழ்ச்சி பொங்க; மந்தம் = மெதுவாக; மானத்தேக்கங்ஙயச்சீடின = ஆகாத்துக்கே திரும்ப அனுப்பின; தொழில் = க்ரீடை (லீலை), ஆஸ்தயா = ஆதரவோடுகூட; காண்மனோ ஞான் = நான் பார்ப்பேனா.

வானத்தில் முழுநிலவைப் பார்த்த குழந்தைக்கு மிகவும் சந்தோஷம் ஆயிற்று. உண்ணியின் கீர்த்தியை வளர்க்கும் பொருட்டு அந்த நிலவும் மெதுவாக கீழே இறங்கி வந்தது. இரண்டு பிஞ்சுக்கைகளாலும் நிலவை

எடுத்து உன் அம்மாவிற்கு சம்மானமாக கொடுத்து விட்டு மீண்டும் ஆகாயத்திற்கே அனுப்பிவைத்த லீலையை நான் காண்பேனா?

11. குஞ்சிக்காலும் கரத்தார் குளூர் மதிமுகவும்
கண்ணிலே கண்ணெழுத்தும்
கிஞ்சில் போன்னங்குரிக்கும் தசனமுகுளவும்
க்ருஷ்ணா! செஞ்சோரி வாயும்
பஞ்சத்வம் வன்னடுக்கும்போழுது மதிமறன்
னங்நு வீணீடுமப்போள்
என்சித்தே போன்னுதிச்சீடுக தவதிருமெய்க்
குள்ள கோப்பும் முராரே.

குஞ்ஞிக்காலும் = பிஞ்சுபாதங்களும்; கரத்தார் = பூப்போன்ற கைகள்; குளூர்மதிமுகம் = குளுமையான சந்திரன் போன்ற முகம்; கண்ணிலெக் கண்ணெழுத்தும் = கண்களின் கண்மையும்; கிஞ்சில்ப்போன்னங்குரிக்கும் தசன முகுளவும் = கொஞ்சமாக அரும்பு போன்று முளைக்கத் துவங்கியிருக்கும் பல்வரிசைகளும்; செஞ்சோரிவாயும் = செக்கச் சிவந்த வாயின் உட்புறம்; பஞ்சத்வம் வன்னடுக்கும்போழுது = பஞ்சபூதங்கள் பிரிந்து மரணம் வந்து அடுக்கும்பொழுது; மதிமறன்னங்நு = புத்தி தடுமாறி; வீணீடுமப்போள் = வீழும்பொழுது; என்சித்தே = எனது சித்தத்தில்; போன்னுத்திச்சீடுக = வந்து உதிக்க வேண்டுமே; தவதிருமேனிக்குள்ள கோப்பும் = ஸர்வாலங்காரபூஷிதனாக உனது திருமேனி.

ஹே க்ருஷ்ணா! மரணம் அருகில் வந்து பற்றும் பொழுது எனது மனதில் உன்னுடைய பிஞ்சுக் கால்களும், பூபோன்ற கைகளும், அழகான திங்கள் முகமும் உனது சிவந்த வாயில் முளைக்கும் மொட்டுப்போன்ற பல்வரிசையும் உனது திருமேனியின் சர்வ அலங்காரங்களும் வந்து உதிக்க வேண்டுமே.

12. மஞ்சாடிக்குரு குன்னிமாலகள் முருக்கின்
பூக்களித்யாதியும்
செஞ்சோரிக்கு விரோதியாம் அதரவும்
த்ருக்கைகள் த்ருக்கால்களும்

**சாஞ்சாடிக் களியும் சமஞ்ஞுவடிவும்**
**பூஞ்சாயலில் பூழியும்**
**செஞ்சோடே திருமேனி ரண்டுமணயத்**
**தாம்மாறு கண்டாவு ஞான்.**

மஞ்சாடிக்குரு = குந்துமணி; குன்னிமாலகள் = மணிகள் கோர்த்த மாலைகள்; இத்யாதி = ஆகியவை; செஞ்சோரி = சிகப்பு ரத்தம் – (தர்பூசணிப்பழம் என்றும் பொருள்); விரோதியாம் அதரமும் = வெல்கின்ற உதடுகளும்; சாஞ்சாடிக்களியும் = அசைந்தாடுகின்ற விளையாட்டும்; வடிவும் சமஞ்ஞு = அழகேறின; செஞ்சோடெ = நல்லவிதமாக; த்ருக்கைகளும் த்ருக்கால்களும் = திருக்கைகளும் திருப்பாதங்களும்; பூஞ்சாயலில் பூழியும் = திருமுடியில் கோதூளியும், திருமேனி ரண்டும் = பலராம க்ருஷ்ணன்மார் இருவரது திருமேனிகளையும்.

மஞ்சாடிக்குரு, பவழமாலை, முருக்கம்பூ செக்கச்செவேல் என்ற தர்ப்பூசணிப்பழம் போன்றவை பார்த்து கோபித்துக்கொள்ளும் படியான (பொறாமைப்படும்படியான) சிவந்த அதரம், உனது திருக்கைகள், திருப்பாதங்கள் ஆகியவை அசைந்தாடும் திருவிளையாடல்கள், அலங்கரிக்கப்பட்ட உடல், அழகான திருமுடியிலுள்ள கோதூளி ஆகியவை கொண்ட இரண்டு திருமேனிகளும் (க்ருஷ்ணன், பலராமன்) காண நான் ஆவல் கொள்ளுகின்றேன்.

**13. நாளீக லோசனனுறக்கு வராஞ்ஞெசோதா**
**நாராயணன்டே சரிதம் கதசொல்லுமப்போள்**
**ஸீதாம் ஹரிச்சு தசகந்தரனென்னு கேட்டிட்**
**டாலோகநாதன் அயி 'லக்ஷ்மணா' என்னுரச்சு.**

நாளீகலோசனன் = தாமரைக்கண்ணன்; உறக்கு = உறக்கம்; வராஞ்ஞெசோதா = வராமல் யசோதை; நாராயணன்டெ = நாராயணனுடைய, சரிதம் கத சொல்லுமப்போள் = சரித்திரத்தை கதையாகச் சொல்லிக் கொண்டிருக்கும் போது; ஸீதாம் ஹரிச்சு = ஸீதையை அபஹரிச்சான்; தசகந்தரன் = தசமுகன் (ராவணன்;) கேட்டிட்டு = கேட்டுவிட்டு; என்னுரச்சு = என்று உரைத்தான்.

க்ருஷ்ணன் உறக்கம் வராமல் இருக்கும்போது, யசோதை நாராயணனின் கதைகளைச் சொன்னாள். "ராவணன் சீதையை

அபஹரித்தான்" என்று யசோதை சொன்ன தருணம் த்ரைலோக்ய நாதனான நீர் திடீர் என்று 'ஹே லக்ஷ்மணா' என்று உரத்தகுரலில் சொன்னீர்கள்.

14. **பச்சக்கல்லொத்த பூமெய் நிறவுமணிகழல்ப்**
**பல்லவம் மெல்லே மெல்லே**
**வெச்சீடும்போள் வியச்சீடின மதுரிமயும்**
**பிச்சயும் விச்வமூர்த்தே**
**மச்சித்தே போன்னுதிச்சீடிணமதினு விசேஷிச்சு**
**விஞ்ஞாபயேஹம்**
**ஸச்சில் கல்லோலமே! நீ க்ருப தரிக ஸதா**
**க்ருஷ்ணா காருண்யசிந்தோ!**

பச்சக்கலொத்த = பச்சைக்கல் போன்ற; அணிகழல் பல்லவம் = பூப்போன்ற மிருதுவான பாதங்கள்; மெல்லெமெல்லெ = மெதுவாக; வெச்சீடும்போள் = வைக்கும்பொழுது; வியச்சீடின = அதிகரிக்கின்ற; மச்சித்தே = எனது சித்தத்தில்; போன்னுதிச்சீடெணம் = வந்து உதிக்க வேண்டும்; விசேஷிச்சு விஞ்ஞாபயேஹம் = விசேஷமாக விஞ்ஞாபனம் செய்து கொள்கின்றேன்; ஸச்சில்க்கல்லோலமே = ஸச்சிதானந்தமாகின்ற பரம் பொருளே; நீ க்ருப தரிக ஸதா = நீ எப்போதும் க்ருபை செய்யவேண்டுமே.

மரகதக்கல்லின் நிறம் ஒத்த நின் பூமேனியும், அழகிய பிஞ்சுக் கால்களை வைத்து நீ மெதுவாக நடக்கும்போது அதிகரிக்கின்ற (வளர்கிற) உனது மதுரமான அழகும், ஹே விச்வமூர்த்தே! எனது மனதில் உதிக்கவேண்டுமே. நன்மைகள், காருண்யம் ஆகியவற்றின் சாரமான கருணைக்கடலே, எனக்கு அந்த பாக்கியம் கிடைக்க தயை செய்ய வேண்டுமே பிரபு, நான் தாழ்மையாக விஞ்ஞாபனம் செய்கின்றேன்.

15. **உண்ணிக்காலும் தளக்கோப்புகளுமரயிலெப்**
**பொன்னரஞ்ஞாள் கிழிஞ்ஞசிட்**
**டுண்ணிக்கை கொண்டொருண்ணிப் பலகயுட**
**னெடுத்தோட்டு வீணும் நடன்னும்**
**உண்ணிக்ருஷ்ணன் வரும்போள் திருவயர்நிறயெ**
**பாலுமுண்டா ப்ரஸாதம்**

**கண்ணில்க்காணாய் வரேணம் ரஹஸி மம**
**கினாவெங்கிலும் பங்கஜாக்ஷா!**

உண்ணிக்காலும் = பிஞ்சுபாதங்களும்; தளக்கோப்புகளும் = தளை, நூபுரம், மெட்டிகள் ஆகியவை; அரயில் = இடுப்பில்; பொன்னரஞ்ஞாள் = தங்கத்தாலான அரைஞாணம் (மேகலை); கிழிஞ்ஞிட்டு = கீழிறங்கி அவிழ்ந்து விடுமோ என்று தோன்றுகின்ற; உண்ணிப்பலக = சிறுபலகை; எடுத்தொட்டு = எடுத்துக்கொண்டு; பாலுமுண்டா ப்ரஸாதம் = திருவயர் நிறைய பால்குடித்த த்ருப்தியில் உள்ள ப்ரஸாதமாம் திருக்காட்சி; கண்ணில்க்காணாய் வரேணம் = கண்களுக்குக் காணக்கூடிய வகையில்; ரஹஸி = ரகசியமாக; மமகினாவெங்கிலும் = எனது கனவிலாகிலும்.

பிஞ்சுக்கால்களில் கால்தளைகள் அணிந்து, அரையிலுள்ள பொன்னரைஞானம் (தங்கத்திலான ஒட்டியாணம் – மேகலை) சற்றே கீழிறங்கி, உண்ணிக்கையில் (பிஞ்சுகரத்தில்) ஒரு சிறு பலகையை வைத்துக் கொண்டு, கொஞ்சம் நடப்பதும் பிறகு விழுவதும் மீண்டும் நடப்பதுமாக உண்ணிக்ருஷ்ணன், வயிறுமுட்ட பால் சாப்பிட்டதன் அடையாளமாக ப்ரசன்ன வதனனாக, ஹே! தாமரைக்கண்ணா, கனவிலாகிலும் எனக்கு இந்தக் காட்சியைக் காட்ட வருவாயாக.

**16. உண்ணிக்கால் கொண்டு ந்ருத்தங்ஙளுமரநிறயே**
**கிங்ஙிணிப் பொன்னரஞ்ஞாண்**
**உண்ணிக்கை கொண்டு தாளங்ஙளுமடிமுடியில்**
**பிஞ்சவும் கொஞ்சல் வாய்ப்பும்**
**உண்ணிக் கண்ணன்டே பூமெய், குழல்விளியு**
**மடுத்துள்ள சில்பிள்ளரும் மே**
**கண்ணில்காணுன்ன போலே மனதளிரிலு**
**திக்கேணம் ஓர்க்கும்போளெல்லாம்.**

ந்ருத்தங்ஙள் = நாட்டியங்கள் ஆடல்கள்; அரநிறயே இடுப்பைச் சுற்றியுள்ள; கிங்ஙிணிப்பொன்னரஞ்ஞாண் = கிலுகிலுவென்று / கிணிகிணியென்று சப்தம் செய்கின்ற தங்க ஒட்டியாணம்; முடியில் பிஞ்சவும் = திருமுடியில் மயில்தோகையும்; கொஞ்சல் வாய்ப்பும் = கொஞ்சிக் கொஞ்சிப் பேசுவதும்; குழல்விளியும் = புல்லாங்குழல் ஊதலும்; அடுத்துள்ள சில்பிள்ளரும் = அருகிலுள்ள சிறுபிள்ளைகளும்; மே =

எனக்கு; கண்ணில் காணுன்னபோலெ = கண்களால் காண்பது போன்றே; மனதளிரிலுதிக்கேணம் = மனத்தாமரையில் உதிக்கவேண்டும்; ஓர்க்கும்போளெல்லாம் = நினைத்தபோதெல்லாம்.

உனது பிஞ்சு பாதங்களாலான நாட்டியங்களும், இடுப்பில் நிறைந்து கிடக்கின்ற பொன் அரைஞாண்கயிறும், பிஞ்சுக்கைகளாலான தாளங்களும், அழகான திருமுடியில் மயில்பீலியும், உனது ஐஸ்வர்யமான கொஞ்சல் களும், பூப்போன்ற உனது திருமேனியும், குழல் ஊதலும், உனது அருகில் நிற்கின்ற சின்னஞ்சிறு பாலகர்களும் என் கண்களுக்குத் தெரிவதுபோலவே நான் நினைத்த போதெல்லாம் என் மனதிலும் விளங்கவேண்டுமே.

17. **ஏலஸ்சு பொன்மணி சிலம்புகள் பொன்னரஞ்ஞாண்**
**மேளிச்ச கைவளகள் மோதிரவும் களாந்தே,**
**மௌளிக்கணிஞ்ஞு மலர்மாலகள் பீலியும் தே**
**பாலத்வவும் வதனபங்கஜவும் தொழுன்னேன்.**

ஏலஸ்சு = ரக்ஷை (தாயத்து); பொன்மணி சிலம்புகள் = கனகமணிகள் கோர்த்த சிலம்புகள்; மேளிச்ச கைவளகள் = பந்திச்ச (கால்சிலம்பல்லாமல் வளைகளுடன் சேர்த்து பின்னிய கைச்சிலம்பை குறிக்கின்றது); களாந்தே = கழுத்திலிருந்து சற்று தள்ளி (கழுத்தில் தங்கநகைகளும் சற்றுதள்ளி மலர்மாலைகளும் என்று ஸாரம்); மௌளிக்கணிஞ்ஞுபீலியும் = திருமுடியில் அணிந்த மயில் பீலியும்; தே பாலத்வவும் = உனது பாலஸ்வருபவும்; வதனபங்கஜம் = முககமலம்.

உனது திருமேனியை அலங்கரிக்கின்ற ஏலஸ்சும், (ரக்ஷை – தாயத்து) தங்கமணிகள் கோர்த்த சிலம்புகளும், சிலங்கைகளும், உனக்கு நன்றாக சேருகின்ற கைவளையல்களும், மோதிரமும், கழுத்துக்கான ஆபரணங்களும், திருமுடியில் அணிந்திருக்கும் பூமாலைகளும் மயில்பீலியும், குழந்தை பாவமும் தாமரை போன்ற திருமுகமும் கண்டு கைதொழுகின்றேன்.

18. **ஒன்னிச்சிரிக்கும்போழுடுத்து கண்ணன்**
**பின்னூடே கேசங்ஙள் அழிச்சுகொண்டான்**
**வன்னிட்டு முற்றத்திற வெள்ளமேற்றான்**
**அம்மய்க்குமச்சன்னு மொராவதில்லே**

ஒன்னிச்சிரிக்கும்போள் = அருகருகே ஒன்றாக அமர்ந்து கொண்டிருக்கும்போது; அடுத்து = அருகே வந்தான்; பின்னூடே = பின்னாலிருந்து; கேசங்ஙளழிச்சு கொண்டான் = கேசபாரத்தை (கொண்டையை) அவிழ்த்துவிட்டான்; வன்னிட்டு முற்றத்து = முற்றத்திற்கு வந்துவிட்டு; இறவெள்ளம் = தேங்கிய மழைநீர்; ஏற்றான் = தனது உடம்பிலும் தாய் தந்தையர் உடலிலும் வாரி இறைத்தான்; ஓராவதில்லே = ஒரு பொறுதியும் இல்லாதிருப்பது.

தாய்தந்தையரான நந்தகோபரும் யசோதையும் அருகருகே அமர்ந்திருக்கும்போது அவர்கள் பின்னால் சென்று அவர்களது கேசத்தை அவிழ்த்துப் போட்டு, முற்றத்தில் நிறைந்திருக்கின்ற மழைவெள்ளத்தை அவர்கள் மீதும் தம்மீதும் வாரி இறைத்து விளையாடி அம்மா அப்பாவிற்கு ஒரு க்ஷணம் பொறுதி (விஸ்ரமம்) கொடுக்காமல் அல்லல்படுத்தினான்.

**19. மாயத்தினால் மானுஷனாய நாதன்**
**மோஹத்தினால் வெண்ண லபிப்பதின்னாய்**
**மானிச்சு மாதாவொடு சேர்னு நன்னாய்**
**மாறத்து தைர் துள்ளியு மேற்றிருன்னான்.**

மாயத்தினால் = மாயையுடன்; மானுஷனாய நாதன் =மனுஷ்யரூபமெடுத்த பரந்தாமன் பிரபு; மோஹத்தினால் வெண்ண லபிப்பதின்னாய் = வெண்ணை கிடைக்க வேண்டும் என்ற மோஹத்தில் (ஆசையில்); மானிச்சு = மிகுந்த மரியாதையுடன்; மாதாவோடு சேர்ன்னு நன்னாய் = தாயுடன் நன்றாக ஒட்டிக்கொண்டு; மாறத்து = மார்பில்; தைர்துள்ளியுமேற்றிருன்னான் = தயிர்த்துளிகளை ஏற்று இருந்தான்.

மாயத்தினால் மானுடவேஷம் தரித்த லோகநாதன் வெண்ணை கிடைக்கும் மோஹத்தினால் ஒருநாள் யசோதை தயிர்கடையும் பொழுது அவள் மடியில் ஒட்டிப்பிடித்து அமர்ந்து கொண்டு தன் மார்பில் தெறித்து வீழுகின்ற தயிர்த்துளிகளை ஏற்று வாங்கிக்கொண்டிருந்தான்.

**20. பாலத்வேன களிச்ச நாள் அனுஜனோ**
**டொன்னிச்சு காணுன்னவர்க்கா**
**லஸ்யம் வருமக்ஷிகள்கு திருமெய்**
**ரண்டும் ஜகன்மோஹனம்**

**நீலக்கல்லு தமாலமஞ்சனகளா**
**யாபம் ஹரே ச்யாமளம்**
**பாலத்திங்களுதிச்ச போலெ பவதோப்**
**யானந்த நீலாம்பரம்.**

பாலத்வேன களிச்ச = பாலரூபத்தில் விளையாடின; அனுஜனோடொன்னிச்சு = தம்பியுடன் கூட; காணுன்னவர்க்கு = பார்ப்பவர்களுக்கு; அக்ஷிகள்கு = கண்களுக்கு; ஆலஸ்யம் = மயக்கம்; திருமெய்ரண்டும் = திருமேனிகள் இரண்டும்; ஜகன்மோஹனம் = ஜகத்தையெல்லாம் மயக்கக் கூடியது; தமாலம் = தாபிஞ்சும் அல்லது பச்சை நிறம்; அஞ்சனகளாயாபம் = அஞ்சனம் காயாம்பூ ஆகியவற்றின் அழகு கவர்ந்தது; பாலத்திங்கள் = சுக்லபட்சத்து ஆரம்ப சந்திரன்; ஆனந்த நீலாம்பரம் = அனந்தமான நீலாகாசம் போன்ற

தம்பியுடன் சேர்ந்து நீ வருகையில் குழந்தை பாவத்தில் பாலசந்திரன் உதித்ததுபோன்ற, நீலவஸ்த்ரம் தரித்ததுமான உன்னுடையதும் சகோதரனின் நீலக்கல், தொடுகுறி (நெற்றித்திலகம்), அஞ்சனம், காயாம்பூ போன்றவற்றின் நிறத்தையொத்த ச்யாமளமேனி பூண்ட ஹரியின் ஜகன் மங்களமான இரண்டு திருமேனிகளும் பார்ப்பவர் கண்களை மயக்குகின்றன.

**21. ஓடக்குழல்க்கு புதுவெண்ண லபிப்பதின்னாய்**
**ஆடிக்குழஞ்ஞுகுழலூதின வாசுதேவன்**
**கானக்குறிஞ்ஞியே விளிச்சதுகேட்டநேரம்**
**பூனக்குறிஞ்ஞிகளடுத்து காண்மனோ ஞான்.**

ஓடக்குழல்க்கு = புல்லாங்குழல் கீதத்திற்கு; லபிப்பதின்னாய் = கிடைக்கவேண்டி; ஆடிக்குழஞ்ஞு = ஆடிக்குழைந்து; கானக்குறிஞ்ஞியே = கானக்குறிஞ்சி என்ற ராகத்தை; விளிச்சதுகேட்டநேரம் = வாசித்ததைக் கேட்ட நேரம்; பூனக்குறிஞ்ஞிகள் = பூனைக்குட்டிகள்; விடுத்தது = அருகில் வந்ததை; காண்மனோ ஞான் = நான் பார்ப்பேனா?

புதுவெண்ணை கிடைக்க வேண்டும் என்பதற்காக தனது புல்லாங்குழலில் கானக்குறிஞ்சி என்ற ராகத்தை இசைத்துக் கொண்டு கூடவே ஆடிக்குழைந்து கொண்டு உனது குழலோசை கேட்டு அருகில் வந்த பூனைக்குட்டிகளுடன் உன்னை நான் பார்ப்பேனா?

22. கண்ணன் களிச்சேட்டனுமாயொருன்னாள்
ஸ்வர்ணாதிகள்க்கல்ல மஹத்துவமய்யோ
கண்ணஞ்சிரட்டக்கு படுத்வமேறும்
குன்னிக்குருக்கள்க்குமிதென்னு தீர்ன்னு.

களிச்சு = விளையாடி; ஏட்டன் = அண்ணா; ஸ்வர்ணாதிகள்க்கல்ல = ஸ்வர்ணம் போன்றவற்றுக்கன்று; கண்ணஞ்சிரட்டக்கு = மூன்று கண்களையுடைய தேங்காய் ஓடு (கொட்டாங்குச்சி); படுத்வமேறும் = மேன்மை அதிகம்.

ஒருநாள் கண்ணன் தன் அண்ணனுடன் விளையாடும்போது, "ஸ்வர்ணாதிகளுக்கு (தங்கம் முதலானவற்றிற்கு) மகத்துவம் இல்லை. (கண்ணன் சிரட்டை) கண் உள்ள தேங்காய் ஓடு" மற்றும் மஞ்சாடிக்குரு அதை விட மேலானவை என்று உரைத்தான்.

23. த்வேஷிச்சவர்க்காத்மஸௌக்யம் பலவழியில்
வருத்துன்ன லீலாவிலாஸம்
கோஷிச்சோரோன்னு கேள்க்காமதிலுமதிசயம்
பின்னேயும் தோன்னுமஸ்மின்
ஊழிக்கீரேழினும் நாயகன்ஒரு பசுபப்
பிள்ளரும் தானுமாயி
பூழிச்சோறோடுமக் கோப்பொரு பொழுதிஹ
கண்டாவு வைகுண்டவாசின்.

த்வேஷிச்சோர்க்கு = துஷித்தவர்களுக்கு, (இகழ்ந்தவர்களுக்கு); ஆத்மஸௌக்யம் பலவழியில் = பலவிதத்தில் ஆத்மசுகத்தை; கோஷிச் சோரோன்னு = கோஷித்துக்கொண்டு ஒவ்வொரு; அதிலுமதிசயம் = அதைவிட அதிசயம்; ஊழிக்கீரேழினும் = ஈரேழு பதினான்கு லோகங்களுக்கும்; பசுபப் பிள்ளரும் = இடையப்பிள்ளைகளும்; பூழிச்சோறு ஆடும் ஆ கோப்பு = புழுதி (மண்) சோறு வைத்து விளையாடும் அக்காட்சி; கண்டாவூ = பார்க்க முடிந்தால்.

உன்னை துஷித்தவர்களுக்குகூட பலரீதியிலே மோட்சம் அளிக்கின்ற உனது லீலாவிலாசம், ஹே வைகுண்டவாசன்! கோஷித்து சொல்லப்படுகின்றது. அதை விட பரம அதிசயமாக, ஈரேழு பதினான்கு

லோகங்களுக்கும் அதிபதியான ஹே வைகுண்டவாசன், சிறு கோபபாலகர்களுடன் சேர்ந்து மண்சோறு செய்து விளையாடும் உனது திருவிளையாடல்களை ஒருபொழுதாவது (முறையாவது) எனக்கு காண்ப்பிப்பாயா?

24. **அம்பாடிக்கொரு பூஷணம் ரிபுசமூஹத்**
**தின்னஹோ பீஷணம்**
**பைம்பால் வெண்ண தயிர்க்கு மோஷணம**
**திக்ரூராத்மனாம் பேஷணம்**
**வன்பாபத்தினு சோஷணம் வனிதமார்க்**
**கானந்த ஸம்போஷணம்**
**நின்பாதம் மதிபூஷணம் ஹரதுமே**
**மஞ்ஜீர ஸம்கோஷணம்**

அம்பாடி = ஆயர்பாடி; பூஷணம் = அலங்காரம்; ரிபுஸமூஹத்தின்னு = சத்ருக்கள் (துஷ்டர்கள்) கூட்டத்திற்கு; பீஷணம் = பயத்தைக் கொடுப்பவன்; பைம்பால், வெண்ண, தயிர்க்கு மோஷணம் = கறந்தபால், வெண்ணை, தயிர் ஆகியவற்றை திருடுபவன்; அதிக்ரூராத்மனாம் = கொடிய க்ரூரகுணமுடையவர்க்கு பேஷணம் = சிக்ஷகன், தண்டிப்பவன்; வன்பாபத்தினு = கொடிய பாபங்களுக்கு; சோஷணம் = நாசகாரணம்; வனிதமார்க்கானந்த ஸ்ம்போஷணம் = கோபிகைகளின் ஆனந்தத்தை வளர்ப்பவன்; மதிபூஷணம் = மதிமயக்கம்; மஞ்சீரஸம்கோஷணம் = உனது கால்சிலம்புகளின் மங்கள ஓசை; ஹரதுமே = எனது புத்தி பரம்த்தை களைய வேண்டுமே.

அம்பாடி (ஆயற்பாடி)க்கு நீயொருபூஷணம், சத்ருக்களுக்கு நீ பயம் அளிப்பவன், பசுவின்பால் வெண்ணை, தயிர் ஆகியவற்றைத் திருடுபவன், அஸத்துக்களுக்கு சிக்ஷை வழங்குபவன், கொடியபாபங்களுக்கு எதிரானவன், கோபாங்கனைகளுக்கு ஆனந்தஸம்வர்த்தனம் ஆகிய தம்புரானே நினது பாதச்சிலம்பின் மணியோசை எனது மனதின் / புத்தியின் பேதலிப்புகளை நீக்க வேண்டுமே.

25. **வெண்முத்தினும் மரகதத்தினுமார்த்தி நல்கும்**
**பொன்மேனி ரணடுமொருமிச்சு சமஞ்ஞு நன்னாய்**

**நின் மாயமேவ ஹ்ருதயத்திலுதிப்பதின்னும்**
**ஜன்மாந்தரே ஸுக்ருதமுள்ளொரு ஜிவனோவான்**

வெண்முத்தினும் மரதகத்தினும் = வெண்முத்து மரகதம் ஆகியவற்றிற்கு; ஆர்த்தி நல்கும் பொன்மேனி = பொறாமைப் படவைக்கும் திருமேனி; ரண்டுமொருமிச்சு = இரண்டு பேரும் ஒன்றாக; சமஞ்ஞுநன்னாய் = நன்றாக அலங்கரித்துக் கொண்டு; நிர்மாயமேவ = மாயைநீங்கி; ஹ்ருதயத்திலுதிப்பதின்னும் = இதயத்தில் உதிப்பதற்க் காகவும்; ஜன்மாந்தரே = அடுத்த பிறவியலாவது; ஸுக்ருதமுள்ளொரு = புண்ணியம் செய்த ஒரு; ஜீவனோவான் = ஜீவனாக ஆக.

வெண்முத்தையும் மரகதத்தையும் ஏங்கவைக்கும் நிறங்களை யுடைய பலராமன், க்ருஷ்ணன் ஆகியவர்கள் நன்றாக அலங்காரங்கள் செய்து கொண்ட திருமேனிகளுடன் ஒருமித்து என் இதயத்தில் உதிப்பதற்கு பூர்வ ஜன்ம புண்ணியம் செய்த ஜீவனாக நான் அடுத்த பிறப்பிலாவது ஆவேனா?

26. **வெண்ணக்கிரன்னு வழியே மணியும் கிலுக்கி**
**குஞ்சிக்கரங்ஙளுமுயர்த்தி நடன்ன நேரம்**
**கண்ணில்த்தெளிஞ்ஞு புதுவெண்ண லபிச்சு நில்போ**
**ருண்ணிக்கிடாவு சிரிபூண்டது கண்டிதாவூ**

வெண்ணக்கிரன்னு = வெண்ணைக்காக இரந்து; குஞ்ஞிக் கரங்ஙளுமுயர்த்தி = பிஞ்சுக்கரங்களையுயர்த்தி; லபிச்சு = கிடைத்து; நின்னோருண்ணிக்கிடாவு = நின்ற ஒரு சிறுபைதல்; (பச்சிளம் குழந்தை;) சிரிபூண்டிது = சிரித்தமுகத்துடன்; கண்டிதாவூ = காணவேண்டுமே.

தாயிடம் வெண்ணை வேண்டி, தனது ஆபரணங்களிலுள்ள மணிகளை கிலுக்கிக் கொண்டு, நடக்கும் நேரம் புதுவெண்ணை கிடைத்த சந்தோஷத்தில் புன்சிரிப்பு பூண்ட நினது திருவதனம் எனது கண்களுக்கு காணக் கிடைக்குமா?

27. **"என்னோமலிங்ஙு வரிகெ"ன்னு யசோதமெல்லெச்**
**சொன்னாள் மகன்னு புதுவெண்ண கொடுப்பதின்னாய்**
**அன்னேரமார்த்தியோடெயோடி வீயர்த்துவீண**
**கண்ணன்டே காதரத காண்மது கௌதுகம் மே**

என்னோமல் = என்செல்லமே; இங்ங = இங்கு; மகன்னு = மகனுக்கு; புதுவெண்ண கொடுப்பதின்னாய் = புதுவெண்ணை கொடுப்பதற்க்காக; அன்னோம் = அப்போது; ஆர்த்தியோடெ = ஆசையுடன்; ஓடிவியர்த்துவீண = ஓடிக்களைத்து வியர்வையுடன் விழுந்த; காதரத = பரவசம்; காண்மது = காண்பது; கௌதுகம் = ஆனந்தம்; மே = எனக்கு.

தன் மகனுக்கு புதுவெண்ணை கொடுப்பதற்கக்காக யசோதை "என் பொன்னுமகனே, இங்கு வா" என்று சொன்னாள். அதைக் கேட்ட கண்ணன் ஓடியோடி வியர்த்து விறுவிறுத்து விழுந்து எழுந்து ஓடிவந்த வைபவம் காண எனக்கு ஆசையாக இருக்கின்றது.

28. **கண்ணாடியில் கண்டு களாயரம்யம்**
**கண்ணில் தெளிஞ்ஞோரு முகாரவிந்தம்**
**சங்ஙாதியென்னிட்டு சிரிச்சுகண்ணன்**
**கண்ணாடி பூணுன்னிது கண்டிதாவூ**

களாயரம்யம் = காயாம்பூ நிறத்துடனான அழகு; சங்ஙாதி = தோழன், ஸகா; என்னிட்டு = என்று எண்ணி; பூணுன்னது = ஆலிங்கனம் செய்து கொள்ளுதல்.

கண்ணாடியில்கண்ட, காயாம்பூ நிறத்துடனான அதிமனோஹர மான தனது ப்ரதிபிம்பத்தை தனது சகா (சங்ஙாதி - friend) என்று நினைத்து ஆலிங்கனம் செய்த கண்ணனை நான் காண்பேனா?

29. **ஏலஸ்சும் மணியும் சிலம்பு தளயும்**
**கோலாஹலத் தோடெயம்**
**மேளத்தில் களியும் சிரிச்ச முகவும்**
**த்ருக்கைகளில் தாளவும்**
**காலிக்கால்ப் பொடியும் களாய நிறவும்**
**காருண்ய வாய்ப்பும் ததா**
**பாலன் க்ருஷ்ணனடுத்து வன்னொரு தினம்**
**கண்டாவு கண்கொண்டு ஞான்.**

ஏலஸ்சும், மணியும் சிலம்பும் தளயும் = ரட்சை (தாயத்து), மணிகள், சிலம்பு தளை முதலிய ஆபரணங்களுடன், கோலாஹலத்தோடெ

= கோலாஹலத்துடன்; மேளத்தில் களியும் = தாளத்திற்க் கேற்ற நடனமும்; சிரிச்ச முகவும் = சிரித்த முகமும்; த்ருக்கைகளில் தாளவும் = திருக்கரங் களில் ஜால்ராவுடன்; காலிக்கால்ப் பொடியும் = கோதூளிசகிதம்; களாய நிறவும் = நீலமேகச்யாமளவர்ணமும், காருண்யவாய்பும் = பொங்கி வழிகின்ற கருணைரசம்.

ஏலஸ்சு சிலம்பு, மணிகள், கால்தளை ஆகியவை போட்டிபோட்டுக் கொண்டு போடுகின்ற கோலாஹல சப்தத்துடன், திருக்கரங்களால் தாளம் போட்டுக் கொண்டு, மந்தஹாசவதனனாக, காயாம்பூ நிறஉடலில் கோதூளி சேர்ந்து கருணைக்கடலாம் பாலக்ருஷ்ணன் ஓடிவருவதை ஒரு நாளாவது நான் காண்பேனா?

**30. மண்ணில் பிறன்னு சுகமே மதுசூதனன்தான்**
**உண்ணிக்கிடாவு வடிவாய் வளருன்ன காலம்**
**வெண்ணய்க்கு வன்னு பிசகும் புனரென்னதல்லீ**
**பெண்ணுங்ஙள் வேறெயொரிடம் கருதீடினார் போல்**

மண்ணில் = பூமியில்; வடிவாய் = அழகுடன்; உண்ணிக்கிடாவு = சிறுபைதல் (கைக்குழந்தை); வெண்ணக்கு வன்னு பிசகும் புனரென்னு = வெண்ணைகொடு என்று கேட்டு மீண்டும் மீண்டும் சண்டை போடுவான் என்று சொல்லி; பெண்ணுங்ஙள் = கோபஸ்த்ரீகள்; வேறெயொரிடம் = வேறு இடம்; கருதீடினார்போல் = கருதினார்கள் போலும்.

மதுசூதனனாகிய மஹாவிஷ்ணு ஒரு சிறு பாலகன் வடிவில் பூமியில் வளர்ந்து வரும் காலத்தில், வெண்ணை கேட்டு அவன் மீண்டும் மீண்டும் குறும்பு பண்ணுவான் என்று நினைத்த ஆயர்பாடி பெண்கள் வேறு ஓரிடத்திற்கு இடம்பெயர நினைத்தார்களாம்.

**31. பற்றித்துடங்ஙிய கிடாங்களெ வேர்பெடுத்தி**
**சுற்றும் நிறஞ்ஞு சில கற்றுகிடாங்ஙளப்போள்**
**சிற்றாடயும் குழலுமாய் நடுவில் களிக்கும்**
**கட்டக்கிடாவு கணிகாட்டுக கௌதுகம் மே.**

பற்றித்துடங்ஙிய = பசுக்களின் முலைக்காம்புகளைப் பற்றத் துவங்கின; கிடாங்ஙளே வேர்பெடுத்து = கன்றுகளை வேர்பிரித்து; சுற்றும் நிறஞ்ஞு = சுற்றும் நிறைந்தனர்; கட்டக்கிடாங்ஙளபோள் = அப்போதுதான்

பிறந்த பச்சிளம் கன்றுகள்; சிற்றாடயும் குழலுமாய் = சிறுஆடையும் புல்லாங்குழலுமாக; நடுவில் களிக்கும் = மத்தியில் விளையாடும்; கட்டக் கிடாவு = பிஞ்சுக்குழந்தை; கணிகாட்டுக = அதிகாலையில் (விச்வரூபதர்சனமாக) காட்சி தருதல்; கௌதுகம் மே = எனக்கு மிகுந்த ஆவலாக உள்ளது.

தாய்ப்பசுவிடம் பால்குடிக்க வரும் சற்றே வளர்ந்த கன்றுகளை வேறுபெடுத்தி (மாற்றி வைத்து) புதிதாய் பிறந்த கன்றுகளை தாய்ப்பசுவின் அருகாமையில் அழைத்து வந்து, சிறு ஆடை (குட்டிமுண்டு என்று மலையாளத்தில் சொல்வார்கள் – சிற்றாடை) உடுத்து, கையில் குழலுமாய் அவர்கள் மத்தியில் விளையாடும் கண்ணனை எனக்குக் காட்ட வேண்டுமே என்று கோருகின்றேன்.

**32. உண்ணிக்காமுண்ணணம் போரிக களிகளினிப்**
**போருமென்னம்ம சென்னிட்**
**டுண்ணிக்காவொடு சொன்னாள் ஒருபொழுததிலும்**
**ப்ரீதியப்போள் களிப்பான்**
**என்னோமல்க்காசயாம்போள் வரிகமகனேயென்**
**னம்ம போகுன்ன நேரம்**
**பின்னாலே சென்னடுத்திட்டயி ஜனனி விசக்**
**குன்னுவென்னான் முகுந்தன்.**

உண்ணிக்காமுண்ணணம் = உண்ணிக்கு "ஆம், மம்மம், மம்மு" (சாதத்திற்கான மழலைச் சொல்) உண்ணவேண்டும்; போரிக = வருக; களிகளினிப் போரும் = விளையாட்டுக்கள் இனிபோதும்; உண்ணிக்காவொடு = பச்சிளம் குழந்தையிடம்; ஒருபொழுததிலும் = அப்போது தத்க்ஷணம்; ப்ரீதியப்போள்களிப்பான் = கண்ணனின் ஆவலோ (கவனமோ) விளையாடுவதிலேயே இருந்தது; என்னோமல்காசயாம் போள் = என் செல்லத்துக்கு (சாப்பிட) ஆசைவரும்போது; வரிகமகனே = வருவாய் மகனே, என்னம்மபோருன்னநேரம் = தாய் திரும்பிப்போகும் வேளையில்; பின்னாலே சென்னடுத்திட்டு = பின்னால் சென்று அருகில் வந்து; அயிஜனனி = ஏய்அம்மா; விசக்குன்னு = பசிக்கின்றது; என்னான் முகுந்தன் = என்றான் முகுந்தன்.

உண்ணீ (குழந்தே) ஆஅம் (மழலைச்சொல்) சாப்பிடவா, விளையாட்டை நிறுத்து என்று அம்மா போய் கூப்பிட்டபொழுது கண்ணன்

விளையாட்டிலேயே குறியாக இருந்தானாம். என் ஓமனே, உனக்கு ப்ரியமான போது சாப்பிடவா என்று தாய் போக நினைத்தபோது அவள் பின்னால் சென்று "அம்மா பசிக்குது" என்று கொஞ்சிக் கொண்டு சொன்னான் முகுந்தன்.

**33. மாணிக்க கண்ணுகொண்டென் மடியிலொருதினம்**
**வன்னு மந்தம் சுழற்றிப்**
**ப்ரீணிப்பிப்பான் உபஸ்தே ஸசிரமுரஸி நீ**
**தன்னேயின்னோருபாயம்**
**காணுன்னேனல்ல பூமெய் கனகமணிகளும்**
**காஞ்சியும் காந்திபூரம்**
**பூணுன்னோரோமனச் சேவடியுமாய் விபோ**
**தேஹி தேஹி ப்ரஸாதம்.**

மாணிக்கக் கண்ணு = மாணிக்கம் போல விளங்கும் சிவந்த கண்கள் சுழற்றி, உபஸ்தே = மடியில்; ஸசிரம் = அதிகநேரம்; காந்திபூரம் = ஸௌந்தர்யசோபை ஸ்புரணங்கள், பூணுன்ன = புணர்கின்ற, (நிறைந்த); ஓமனச்சேவடியுமாய் = அழகிய திருப்பாத பத்மங்கள்; பூமெய் = பூவுடல்; காணுன்னேனல்ல= என்னால் பார்க்க இயலவில்லை; என் மடியில் ஒருதினம் வன்னு = எனது மடியினில் ஒருநாள் வந்து; ப்ரீணிப்பிப்பான் = ப்ரீதிப்படுத்த (என் கண்களில் தெளிவு வருத்த); நீ தன்னேயொருபாயம் உபஸ்தே = பகவானே ஒரு கௌசலம் செய்ய ப்ரார்த்திக்கின்றேன்;

மாணிக்கம் போல் விளங்குகின்ற உனது கண்களுடன் எனது மடியில், என்னை சந்தோஷிப்பதற்காக உரசி உரசி உட்கார்ந்தபோது, கண்ணா, தங்கமும் ரத்னமும் கோர்த்த அழகான அரைஞாண் ஆபரணங்கள் சகிதம் சோபையார்ந்த உனது திருவடி, பூமெய் ஆகியவற்றைக் காண என்னால் இயலவில்லை. விபோ! எனக்கு அந்தக் காட்சியை ப்ரஸாதமாக அருள வேண்டுமே. (இந்த பத்யம் பலராமரை உத்தேசித்து எழுதப்பட்டது என்பது ஊகம். பலராமனது கண்கள் சிவப்பானவை. ஸர்ப்பம் போல் சுழற்றி சுழற்றிக் கிடப்பதை குறிப்பிட்டிருக்கின்றது.)

**34. தேவாரிப்பானிரிப்பான் துனியுமளவிலத்**
**தேவர் ஞானென்னு சொல்லிப்**

**பூவெல்லாம் சூடுமப்போள் அருதயி மகனே**
**எந்திதென்னாள் யசோதா**
**பூபாரம் தீர்ப்பதின்னாய் மஹியிலவதரிச்சொரு**
**ஸச்சித்ஸ்வரூபம்**
**வாபாடிப் பாரமோர்த்தீடின ஸுக்ருதினிமார்க்**
**கம்மமார்க்கே தொழுன்னேன்.**

தேவாரிப்பான் = நித்யபூஜை செய்ய; துனியுமளவில் = ஆரம்பிக்கும்போது; அத்தேவர் ஞானென்னு சொல்லி = அந்தத் தெய்வம் நான்தான் என்று சொல்லி; பூவெல்லாம்சூடும் = பூஜாத்ரவியங்கள் எல்லாவற்றையும் தனக்குத்தானே ஆராதனம் செய்து; அருதயிமகனே எந்திதென்னாள் எசோதா = கூடாது மகனே, ஏனிப்படிச் செய்கின்றாய் என்று யசோதை சொல்கின்றாள்; மஹியில் = பூமியில், ஸச்சித்ஸ்வரூபம் = ஸச்சிதானந்தரூபம்; வாபாடிப் பாரம் ஓர்த்தீடின = துதித்தும் (வாய்ப் பாட்டாக) தியானித்தும் பஜிக்கின்ற; ஸுக்ருதினிமார்க்கம்மமார்க்கே = புண்யசாலினியான தாயை; தொழுன்னேன் = தொழுகின்றேன்.

யசோதை நித்யபூஜைக்கு அமரும்போது கண்ணன் "தேவன் நான் தான்" என்று சொல்லி பூக்களையெல்லாம் தானே சூடுவானாம். அப்படிப் பட்ட ஸச்சிதானந்த ஸ்வரூபத்தை ஸதா பாடியும் துதித்தும் தியானித்தும் வணங்குகின்ற புண்ணியவதிகளாம் தாய்மார்களுக்கு நமஸ்காரம்.

35. **நாராயணாவென்னு ஜபிக்ககாவென்**
**னாரோமலாயிப்பறயும் யசோதா**
**நாணம் குணுங்ஙீட்டு சிரிக்குமப்போள்**
**நாராயணன் தானிதி வாசுதேவன்.**

காவே = ஹே குழந்தே; ஆரோமலாயி = அன்பொழுக; தானிதி = தான் இதி (நான் தான் அவன்); நாணம் குணுங்ஙீட்டு = வெட்கம் பூண்டு; சிரிக்குமப்போள் = அப்பொழுது புன்சிரிப்பை உதிர்ப்பான்.

யசோதை கண்ணனை "நாராயணா என்று ஜபம் செய்யப்பா" என்று அன்புடன் கூறும்பொழுது தானே நாராயணஸ்வரூபம் என்பதால் தன்னைத்தானே புகழ்ந்து கொள்வதில் நாணம் (வெட்கம்) ஏற்பட்டு புன்சிரிப்பை உதிர்ப்பானாம்.

36. எந்திக்கேள்க்குன்னது எம்போற்றியோடது வெறுதே
கேள்ப்பனென் கௌதுகத்தால்
ஏந்தும் பால் வெண்ண நோக்கிப்பல பலககளும்
வச்சு குந்திச் சொருன்னாள்
வெண்திங்கள்க் கோமனத்தம் களயுமணிமுகம்
த்ருஷ்ணயோடங்ஙுயர்த்திச்
செந்தொண்டிக்கத்புதம் தேடினோரதரபுடம்
கொண்டு மோந்தீடினான் போல்.

எந்தித்கேள்க்குன்னது? = என்ன வார்த்தை கேட்கின்றேன்?; எம்போற்றி = என்போற்றி – என் தெய்வமே; கேள்ப்பன் = கேட்கலாம்; கௌதுகம் = ஆசை, ஆவல்; ஏந்தும் = உயரத்தில் வகிக்கும்; குந்தி = எட்டிப்பார்த்து; வெண்திங்கள் கோமனத்தம் களயும் = முழு நிலவின் அழகைக் களைய (குறைக்கக்கூடிய); அணிமுகம் = அழகியமுகம்; த்ருஷ்ணயோடங்ஙுயர்த்தி = மிகுந்த ஆர்வமுடன் முகத்தை உயர்த்தி; செந்தொண்டிக்கத்புதம் தேடின = சிகப்பு நிறத்துடனான கொவ்வைப் பழத்தை விட அத்புதமான நிறத்தையுடைய; மோந்தீடினான்போல் = மோந்திக்குடித்தானாமே (ஆசைதீரகுடிப்பது).

தான்தான் நாராயணன் என்று கண்ணன் சொல்வதைக் கேட்டு யசோதை – "நான் என்ன கேட்கின்றேன்" என்று ஆச்சரியப்படும் வேளையில், ஒரு நாள் உயரே உறியில் வைத்திருந்த பால், வெண்ணை ஆகியவற்றை, நிறைய பலகைகளை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கி வைத்து அதன்மேல் ஏறி நின்று கொண்டு; பால்நிலவை வெட்கப்படச் செய்யும் முகத்தையுடைய கண்ணன் தனது சிவந்த அதரங்களால், அவற்றையெல்லாம் ஆசைதீர மோந்திக் குடித்தானாம்.

37. பாலத்வம் பூண்டு மேவுன்னளவோருதின
மங்ஙன்ய கோபாலரோடே
மோஹத்தால் வெண்முருக்கின் குசுமமதினுதன்
மோதிரம் விற்று போல் நீ
ஸ்நேஹத்தின் பங்கபீத்யா பத ரமயுமதின்
னப்பிரியம் பாவியாதே
ஸேவிச்சாளென்ன லோகோத்தர மதுரிம ஞான்
கண்டிதாவூ க்ருபாப்தே!

பாலத்வம் பூண்டு = பாலரூபியாக; அன்ய கோபாலரோடெ = வேறு பசுபாலகர்களுடன்; மேவுன்னளவொருதினம் = அம்பாடியில் வசிக்கும்போது ஒருநாள்; மோதிரம் விற்றுபோல்நீ = மோதிரத்தை நீ விற்றாயாமே; ஸ்நேஹத்தின் பங்கபீத்யா = பகவானின் அன்பிற்கு பங்கம் வருமோ என்று பயந்து; ரமயுமதின்னப்ரியம் பாவியாதே = ரமை (லக்ஷ்மீதேவி) அதற்கு அப்ரியம் காட்டாமல்; லோகோத்தர மதுரிம = உலகத்தை ஆச்சரியப்படுத்தும் மதுரம் இனிமை; க்ருபாப்தே = காருண்யஸிந்தோ; கருணைக்கடலே; கண்டிதாவு = நான் பார்க்கவேண்டும்.

மற்ற கோபர்களுடன் பாலகனாக நீ விளையாடிக் கொண்டிருக்கும்போது ஒருநாள் ஒரு வெண்முருக்கின்பூவுக்கு ஆசைப்பட்டு உனது மோதிரத்தை விற்றாயாமே? உனது அன்பு குறைந்துவிடுமோ (அதைத்தட்டிக்கேட்டால்) என்று பயந்து ஸாக்ஷாத் லக்ஷ்மீதேவியானவள் அதற்கு அப்ரியம் காட்டாமல் உன்னைச் சேவித்தாளாம். (ஆத்யாத்மிக ரீதியில் பார்த்தால் வெண்முருக்கின்பூவும் மற்ற சர்வ ஐஸ்வர்யங்களும் பகவானுக்குச் சமம் என்பது சாரம்). அப்பேர்ப்பட்ட லோகோத்தர மாதுர்யமே, கருணைக்கடலே உன்னை நான் பார்க்க வேண்டுமே. (மோதிரத்தை வாங்கிக்கொண்டு வெண்முருக்கின்பூவைக் கொடுத்தவரை மஹாலட்சுமி அனுக்கிரகம் செய்தாள் என்றும் தாத்பர்யம்.)

**38. தம்மில் களிச்சு கலஹிச்சு நிலத்துவீணார்**
**செம்மே சுவட்டில் வசமாய் பலபத்ரனப்போள்**
**தன்மேல் கிடன்னு சுகமே மதுசூதனன் தான்**
**அம்மய்க்கனந்தசயனம் வெளிவாக்கினான்போல்.**

தம்மில்களிச்சு = ஒருத்தருக்கொருத்தர் விளையாடிக்கொண்டு; கலஹிச்சு = சண்டைபோட்டு உருண்டு புரண்டு; நிலத்துவீணார் = நிலத்தில் விழுந்தார்கள்; செம்மெசுவட்டில் வசமாய் = கீழே தறையில் (பலபத்ரன்) நல்ல வசதியாக ஸௌகரியமாக; தன் மேல்க்கிடன்னுசுகமே = அவர்மேல் பரமசுகமாக தான் படுத்துக்கொண்டு; அம்மக்கனந்தசயனம் வெளிவாக்கினான் போல் = தனது தாய்க்கு அனந்தசயன கோலத்தை வெளிப்படுத்தினான் போலும்.

ஒருநாள் க்ருஷ்ணனும் பலராமனுமாக விளையாடும்போது வியாஜமாக இருவரும் சண்டைபோட்டுக்கொண்டு பலபத்ரர் கீழே விழ,

அவர் மேல் பரமசுகத்துடன் க்ருஷ்ணன் சயனிக்கத் தனது தாய்க்கு மதுசூதனனானவன் அனந்த சயனகோலத்தைக் காட்டினாராம்.

**39. மேகச்யாம மொரேடமிந்து ஸத்ருசம்**
**மற்றேடமென்னிங்ஙனே**
**தேஜஸ்ஸத்புதமாய் பவிச்சிது பவான்மார்**
**தம்மிலன்யோனமாய்**
**காடாச்லேஷமியன்ன நேரமதுகண்**
**டாச்சர்யமாய் நின்னவர்க்**
**காகாசே பத வாமகேஹநிலயா!**
**ஸ்ரீமன்! பரித்ராஹிமாம்.**

மேகச்யாமம் = மேகம் போல் கறுத்த; இந்துஸத்ருசம் = சந்திரன்போல் வெண்மையான; தேஜஸ் = ப்ரபாவம்; இயன்ன = கைக்கொண்ட; ஆகாசே = ஆகாயத்தில்; பவான்மார் தம்மில் அன்யோன்யமாய் = நீங்கள் இருவரும் பரஸ்பரம்; காடாச்ளேஷமியன்ன நேரம் = இறுகத் தழுவிக்கொண்டு நின்ற நேரம்; ஆச்சர்யமாய் பத = மிகுந்த ஆச்சரியத்துடன் உரைத்தார்கள்; வாமகேஹநிலயா = இடத்துபுறத்தப்பா; பரித்ராஹிமாம் = என்னை ரக்ஷிக்கவேண்டுமே.

ஒருபக்கம் நீலமேகச்யாமளனான க்ருஷ்ணன், மற்றொரு பக்கம் சந்திரன்போல் வெண்மையுடைய பலராமன் ஆகிய இருவரும் பரஸ்பரம் இறுகத் தழுவிக்கொண்டு நின்றபோது ஏற்பட்ட ப்ரபாவிசேஷத்தை வானத்திலுள்ள தேவகந்தர்வாதிகள் ஆச்சரியத்துடன் வர்ணித்தார்கள். அப்படிப்பட்ட வாமபுராதிவாஸன், ஸ்ரீமான் என்னை ரட்சிக்கட்டும்.

**40. அம்மே ஞான் மண்ணு தின்னீலது மனஸி நினக்**
**கில்ல விச்வாஸமெங்கில்**
**செம்மே காணென்னு மெல்லெச்செறிய பவிழவாய்**
**காட்டியம்மய்க்கொருந்நாள்**
**அன்னேரம் விச்வமெல்லாம் அதிலனவதி**
**கண்டம்ம மோஹிக்குமப்போளம்**
**மே அம்மிஞ்ஞ நல்கென்னொரு நிபுணதஞான்**
**கண்டிதாவூ முகுந்தா.**

மனஸி = மனதில்; செம்மே = நன்றாக; பவிழ்வாய் = பவழம் போன்ற வாய்; விச்வம் = பிரபஞ்சம்; அனவதி = பலபல; மோஹிக்கும் = மயக்கம் வருதல்; நிபுணத = சாமர்த்தியம், அம்மே அம்மிஞ்ஞநல்கு = அம்மா எனக்குத் தாய்ப்பால் கொடு.

கண்ணன் மண்ணைத் தின்றதாக மற்ற கோபர்கள் யசோதையிடம் புகார் செய்ய, "அம்மா நான் மண்ணை உண்ணவில்லை, வேண்டுமானால் என் வாயைப் பார்" என்று கண்ணன் கூற, அதில் சகல ப்ரபஞ்சங்களையும் கண்ட தாய், மயக்கம் அடைந்து விட அப்போது ஒரு சாதாரண பாலகனைப்போல், "அம்மா எனக்குத் தாய்ப்பால் கொடு" என்று சாதுர்யமாகச் சொன்ன முகுந்தா! நான் அந்தக் காட்சியைக் காண்பேனா?

41. **ஊங்கா வில்ப்பதினாயொருத்தி தெருவில்**
**போன்னங்நு வன்னீடினாள்**
**ஏகாந்தே பகவானவள்க்கு குதுகால்**
**நெல்கோரி நல்கீடினான்**
**மாழ்காதே கனகம் நிறஞ்ஞு ஸுகமே**
**பாத்ரத்திலப்போளவள்க்**
**காகாசே மருவுன்ன திவ்யஜனவும்**
**கண்டீடினார் அல்புதம்.**

ஊங்கா = ஊறுகாய், ஏகாந்தே = வேறு எவருமில்லாதபோது; வில்பதினாய் ஒருத்தி தெருவில் = தெருவில் ஒருபெண் விற்க வந்தபோது; குதுகால் = கௌதுகத்துடன், மாழ்காதே = தாமதியாமல்; நெல்கோரி நல்கீடினான் = நெல் நிறைய குடுத்தான்; கனகம் நிறஞ்ஞு ஸுகமே = பாத்திரத்தில் தங்கக் காசுகள் நிறைந்தது; ஆகாசே மருவீடின = ஆகாயத்தில் உள்ள அனைவரும்; திவ்யஜனவும் கண்டீடினார் அத்புதம் = தேவர்கள் அனைவரும் அதைக்கண்டு ஆச்சரியம் அடைந்தனர்.

தெருவில் ஊறுகாய் விற்க வந்த ஒரு பெண் வேறு ஒருவரும் இல்லாத போது கண்ணன் அவளைப் பார்த்து அவளது ஊறுகாய்களை வாங்கிக்கொண்டு (ஸ்ரீமத் பாகவதத்தில் பலம் – பழம் என்று உள்ளது) அவள் பாத்திரம் நிறைய நெல் வாரிக் கொடுத்தானாம். அவை அனைத்தும் உடனேயே தங்கக்காசுகளாக மாறி அப்பெண்ணிற்கு அதீதமான சந்தோஷத்தையும் ஸௌபாக்கியத்தையும் கொடுத்ததை வானிலுள்ள தேவர்கள் பார்த்து வியந்தனர்.

42. சொல்லூ ராப்பகல் கூம்பியும் விரிகயும்
செய்யுன்னதென்ந்தென்னு தான்
சொல்லும்போள் அதினின்னதென்னு பறவா
னூக்கம் கிடாங்ஙள்க்கஹோ
எல்லார்க்கும் ஸஹஸைவ தோன்னியொருமிச
செல்லாருமாய்ச் சொல்லினார்
அம்போஜம், ஜலஜம், பயோஜம், உதஜம்
பாதோஜம் என்னேகதா.

சொல்லூ = சொல்லுங்கள், ராப்பகல் கூம்பியும் விரிகயும் = இரவுபகல் கூம்புவதும் விரிவதும் எது என்று; இன்னதென்று பறவான் = இன்னவஸ்து என்று பதில்சொல்ல, ஊக்கும் கிடாங்ஙள்கஹோ = மற்ற குழந்தைகளுக்கு என்ன உத்வேகம் தெரியுமா; எல்லார்க்கும் = எல்லோருக்கும், ஸஹஸைவ = உடனேயே; தோன்னியொருமிச் செல்லாருமாய்ச் சொல்லினார் =எல்லோர்க்கும் ஒருமித்து பதில் மனதில் தெளிந்து ஒருமித்த குரலில் சொன்னார்கள்;

கண்ணன் ஒருநாள் தோழர்களுடன் விடுகதை சொல்லிக் கொண்டிருக்கும் வேளையில், இரவில் கூம்புவதும் (மூடுவதும்) பகலில் விரிகின்றதும் அம்போஜம், ஜலஜம், பயோஜம், உதஜம், பாதோஜம் என்று தாமரை மற்றும் ஆம்பல் (அல்லி) பூவை ஒருமித்த குரலில் சொன்னார்கள்.

43. அம்மய்க்கப் பால் திகக்குன்னதிலவசத பூண்
டென்னே நீக்கி முலக்கென்னம்
ம்க்கும் ப்ரீதியாகென்னரிசமொடு தயிர்
பாத்ரமெல்லாம் தகர்த்தான்;
நிர்மர்யாதத்தினொன்னெற்றணமதினு
முதிர்ன்னம்ம நோக்கீடுமப்போள்
அம்மாயப் பைதல் எத்தானுரல் முகளில்முதா
கண்டதும் கைதொழுன்னேன்.

அம்மய்க்கப் பால் = அம்மாவிற்கு அந்த பக்கம் உள்ள (அடுப்பில்) பால்; திகக்குன்னதில் = திளைத்துப்பொங்குவதில்; அவசத பூண்டு = விஷமம்/ஆதங்கத்துடன்; என்னெ நீக்கி முலய்க்கு = ஸ்தன்யபானம்

செய்யும் குழந்தையை நீக்கிவிட்டு; ர்த்தி = த்ருப்தி; நிர்மர்யாதா = குறும்பு; ஒன்னொற்றணம் = ஒன்று கொடுக்கவேண்டும் (சிக்ஷை என்று / அடி என்றும் எடுத்துக் கொள்ளலாம்) அதினுமுதிர்ன்னு = தயார் படுத்திக் கொள்ளுதல்; நோக்கீடுமப்போள் = நோக்கும் தருணத்தில்; அம்மாயப்பைதல் = அந்த மாயக்குழந்தை; தான் உரல்முகளில் முதா=மிகவும் சந்தோஷத்துடன் உரலின் மேல் ஏறி நின்று கொண்டு; கண்டதும் = பார்த்ததை கைதொழுன்னேன் = கைகூப்பி வணங்குகின்றேன்.

அடுப்பில் கொதித்து பொங்கிக் கொண்டிருந்த பாலை இறக்கி வைப்பதற்காக, யசோதை தன் மடியில் அமர்ந்து ஸ்தன்யபானம் செய்து கொண்டிருந்த பிஞ்சுக்கண்ணனை கீழே இறக்கும்போது, கோபத்தில் தயிர் பாத்திரத்தை உடைக்கின்றான் கண்ணன். இந்தக் குறும்பிற்கு அம்மா கோபித்துக் கொண்டு நல்ல அடி கொடுக்க வேண்டுமென்று கண்ணனைத் தேடும்போது அவளுக்கு மிகுந்த சந்தோஷத்தை உண்டு பண்ணும் விதமாக உரலின் மீது ஏறி நின்று கொண்ட காட்சியைக் கைதொழுகின்றேன்.

**44. ஸ்ரீமேவீடின பூமெய் உரலொடு கயர்கொண்**
**டம்ம பந்திச்ச நேரம்**
**நாமம் மற்றொன்னு தாமோதர! ஜயநிதரா**
**மென்னு விண்ணோர் புகண்ணார்**
**ப்ரேமாவேசேன மந்தம் மருதுகளிலிடெப்**
**பாஞ்ஞுமங்கல்யமேகி**
**ஸ்ரீமான்மார்க்கம்புஜாஹன் தனபதி தன**
**யன்மார்க்கதும் கை தொழுன்னேன்.**

ஸ்ரீமேவீடின = மஹாலக்ஷ்மி வசிக்கின்ற; பூமெய் = பூவுடல்; பந்திச்ச = கட்டின; நாமம் மற்றொன்னு தாமோதர! =தாமோதரா என்று மற்றொரு பெயர் கூட; ஜயநிதராம் = எப்போதும் ஜயம்; விண்ணோர் = தேவர்கள், புகழ்ன்னார் = புகழ்ந்தார்கள்; மந்தம் மருதுகளிலிடெ = மெதுவாக மருதமரங்களினிடையில்கூட; பாஞ்ஞு = ஊர்ந்துசென்றான்; தனபதிதனயன்மார் = குபேரனின் புத்ரர்களான நளகூபரன் மணிக்ரீவன் ஆகியோர்க்கு; மங்கல்யமேகி = மோக்ஷம் கொடுத்தான்.

மஹாலட்சுமி நித்தியவாசம் செய்யும் உனது திருவுடலை ஒரு கயிறு கொண்டு யசோதை உரலில் வைத்துக் கட்டினபோது வானத்திலிருந்தவர்கள்

ஜயகோஷம் முழக்க தாமோதரன் என்ற பெயர்கூட உனக்குக் கிடைத்தது. உரலுடன் கூட நீ ஊர்ந்து சென்று இரண்டு மருதமரங்களின் இடையில் சென்று குபேரனின் புத்திரர்களான நளகூபரன், மணிக்ரீவன் ஆகியோருக்கு மோட்சத்தை அளித்த அந்தக் காட்சியை நான் கைதொழுகின்றேன்.

**45. நாசம் பாரம் நமுக்கென்னவிடமவர் ப்ருஹத்**
**கானனம் கைவெடிஞ்ஞீட்டா**
**சாந்தே சென்னு வ்ருந்தாவனமதில் மருவீ**
**டேணமென்னாய் ஒருநாள்**
**கூசாந்தே கானனாந்தே சகட நிரகளோடித்**
**துடங்ஙி ததானீம்**
**கைசோரம் பூண்டு தாத்ரீமடிகளில் மருவும்**
**ராமக்ருஷ்ணௌ தொழுன்னேன்.**

பாரம் = அதிகமான; நமுக்கென்னவிடமவர் = நமக்கு இந்த ப்ரதேசம் நல்லதல்ல அதனால் இங்கிருந்து; கைவெடிஞ்ஞு = உபேக்ஷித்து; கைவிட்டு; மருவீடேணம் = தங்கவேண்டும்; கூசாந்தே = தாமதமின்றி; ஆசாந்தே= திக்கின் எல்லைக்கப்பால்; கானனாந்தே = காட்டிற்குள்ளில் (வனாந்தரப்பகுதி) சகடநிரகளோடித்துடங்ஙி = வண்டிச்சக்கரங்கள் கூட்டம் கூட்டமாக ஓடத்துவங்கியது; ததானீம் = அப்போது; தாத்ரீமடிகளில் மருவும் = தங்களது தாய் மடிகளில் படுத்திருக்கும், கைசோரம் பூண்டு = குழந்தைரூபம் தரித்த; தொழுன்னேன் = தொழுகின்றேன்.

ப்ருஹத்வனம் என்ற இந்த இடத்தில் அனேக நாசங்கள் சம்பவிக்கின்றதால் இந்த இடம் நமக்கு உசிதமல்ல என்று கருதிய கோபர்கள் தாமதியாமல் திக்கின் எல்லையிலுள்ள விருந்தாவனத்தை நோக்கி நிரை நிரையாக வண்டிகளில் சென்று கொண்டிருக்கும்போது பாலஸ்வரூபத்தில் தங்களது தாய் மடியில் படுத்திருக்கும் ராமக்ருஷ்ணாதிகளை நான் கை தொழுகின்றேன்.

**46. நந்தாவனம் போலெ மருப்ரதேசம்**
**குன்னாய கோவர்த்தனவும் விசேஷால்**
**வ்ருந்தாவனம் கண்டு தெளிஞ்ஞு போற்றி**
**ஸந்தாபமென்னுள்ளது நீக்கு நீ மே.**

நந்தாவனம் போலெ மருப்ரதேசம் = தேவேந்திரனின் சுபிட்சமான நந்தவனம் வ்ருந்தாவனத்துடன் ஒப்பிடும்போது ஒரு மருபூமி; குன்னாய = குன்றான; கெளிந்நு = களித்து சந்தோஷித்து; போற்றி = சர்வேச்வரன்; ஸந்தாபமென்னுள்ளது நீக்கு நீ மே = எனது மனதின் சங்கடங்களைக் களைவாயாக.

மிகவும் பசுமை வாய்ந்த கோவர்தனமலையைப் பார்த்த சர்வேச்வரன் மிகவும் மகிழ்ந்தான். அப்பேர்ப்பட்ட பகவானே! எனது துயரங்களையெல்லாம் தீர்த்து வைக்க வேண்டும்.

**47. பசுக்கிடாவாயொரு பாபிவன்னு**
**சிசுக்கள் கூட்டத்திலடுத்த நேரம்**
**வசத்துவெச்சங்ஙு வதிச்சு கண்ணன்**
**நசிக்குமல்லாய்கிலீ விச்வமெல்லாம்.**

பசுக்கிடாவாயொரு பாபி = கன்றுக்குட்டி ரூபத்தில் வந்த பாபியான அசுரன் (வல்சாசுரன்); சிசுக்கள் கூட்டத்திலடுத்த நேரம் = கோபர்கள் மற்றும் கன்றுகளின் மத்தியில் வந்தநேரம்; வசத்து வெச்சு = அருகில் வைத்து; நசிக்குமல்லாய்கில் ஈ விச்வமெல்லாம் = நசித்திடச் செய்யவில்லையென்றால் இந்த விச்வமெல்லாம் அழிந்திருக்கும் (அசுரனால் அழிக்கப்பட்டிருக்கும்).

வல்ஸாசுரன் என்ற பாபி ஒரு கன்றின் ரூபத்தை எடுத்துக்கொண்டு பசுக்கள் மத்தியில் மறைந்து வந்தபோது அவனைப் பகவான் வதம் செய்து பூவலகத்தை ஆபத்திலிருந்து காப்பாற்றினார்.

**48. காளிந்தீதீரமார்கே வனபுவி பசுபன்மாரு**
**மொன்னிச்சு மெல்லே**
**கோவ்ருந்தம் மேச்சு மேவீடின புவனபதே**
**க்ருஷண காருண்யஸிந்தோ**
**ஆகுன்னேனல்ல த்ருக்காலடியொடணவதின்**
**னாசு ஞான் எந்து செய்வூ?**
**மோஹம் நீங்ஙும் ப்ரகாரம் வழி தரிக விபோ**
**வாமகேஹாதி வாஸின்.**

*காளிந்தீ தீரமார்க்கே* = காளிந்தீநதியின் மார்க்கமாக; வனபுவி = காட்டுப்பகுதியில்; பசுபன்மார் = கோபர்கள்; கோவ்ருந்தம் மேச்சு மேவீடின

= பசுக்கூட்டங்களை மேய்த்துக்கொண்டு நடக்கும் (கன்றுகளல்லாமல் வளர்ந்த பசுக்களையும் குறிப்பிடுகின்றார்). புவனபதே = லோகநாதா; காருண்யஸிந்தோ = கருணைக்கடலே; ஆசு = வேகமாக; த்ருக்காலடி யொடு அணிவதின்னு = திருப்பாதங்களில் சேர்வதற்கு; ஆருன்னோனல்ல = என்னால் இயலவில்லையே; ஞான் எந்து செய்வூ? = நான் இனி என்னதான் செய்வேன்? மோஹம் நீங்ஙும் ப்ரகாரம் வழி தரிக = எனது மோகங்கள் (ஸம்ஸார பந்தங்கள்) நீங்க வழிகாட்ட வேண்டுமே; வாமகேஹாதி வாசின் = இடத்துபுறத்தப்பா.

காளிந்தீ தீரத்து வனப்பகுதிகளில் பசுக்களை மேய்த்துக் கொண்டு கோபர்களுடன் வசிக்கும் புவனபதே, கருணாவாரிதே, நான் உனது திருவடியில்சேர இயலவில்லையே – ஹே விபோ, வாமகேஹாதிவாஸின், எனது பந்தங்களை விடுவித்து உன் திருவடியில் சேர்த்துக்கொள்.

**49. ஆக்கம் கலர்ன்ன திருமேனி விழுங்ஙுவானாய்**
**கொக்கும் பிளர்ன்னு வலியோரு பகம் வரும்போள்**
**சிக்கென்னு வன்னு கதிநல்கி வினோதமோடே**
**சக்ரன்னு மோதமருளீடின தே நமஸ்தே.**

ஆக்கம் கல்ர்ன்ன = அழகான; விழுங்ஙுவானாய் = விழுங்குவதற்காக; பகம் = கொக்கு; சிக்கென்னு = வேகமாக; கதிநல்கி = மோட்சம் கொடுத்து; வினோதமோடே = விளையாட்டாக; சக்ரன் = இந்திரன்; மோதமருளீடின = சந்தோஷத்தைக் கொடுத்த; தே நமஸ்தே = உனக்கு நமஸ்காரம்.

உனது அழகான திருமேனியை விழுங்குவதற்காக கம்ஸன் அனுப்பின பகாசுரன் என்ற அரக்கனை அனாயாசமாக வதைத்து மோட்சம் கொடுத்து, இந்திரனுக்கு சந்தோஷத்தை நல்கின உனக்கு நமஸ்காரம்.

**50. பீலிக்கார்முடி கால்த்தளிர் பொடியுமேற்**
**றொட்டட்டழிஞுங்ஙனே**
**தாளத்தில் குழலும் குபேரநடயும்**
**கோபாலரும் கோக்களும்**
**பாலஸ்த்ரீகள் உழன்னுவன்னுவழியில்**
**பார்க்குன்ன ஸௌபாக்யவும்**

நந்தாவனம் போலெ மருப்ரதேசம் = தேவேந்திரனின் சுபிட்சமான நந்தவனம் வ்ருந்தா வனத்துடன் ஒப்பிடும்போது ஒரு மருபூமி; குன்னாய = குன்றான; தெளிஞ்னு = கண்டுசந்தோஷித்து; போற்றி = சர்வேச்வரன்; ஸந்தாபமென்னுள்ளது நீக்கு நீ மே = எனது மனதின் சங்கடங்களைக் களைவாயாக.

மிகவும் பசுமை வாய்ந்த கோவர்தனமலையைப் பார்த்த சர்வேஸ்வரன் மிகவும் மகிழ்ந்தான். அப்பேர்ப்பட்ட பகவானே! எனது துயரங்களையெல்லாம் தீர்த்து வைக்க வேண்டும்.

**47. பசுக்கிடாவாயொரு பாபிவன்னு**
**சிசுக்கள் கூட்டத்திலடுத்த நேரம்**
**வசத்துவெச்சங்நு வதிச்சு கண்ணன்**
**நசிக்குமல்லாய்கிலீ விச்வமெல்லாம்.**

பசுக்கிடாவாயொரு பாபி = கன்றுக்குட்டி ரூபத்தில் வந்த பாபியான அசுரன் (வல்சாசுரன்); சிசுக்கள் கூட்டத்திலடுத்த நேரம் = கோபர்கள் மற்றும் கன்றுகளின் மத்தியில் வந்தநேரம்; வசத்து வெச்சு = அருகில் வைத்து; நசிக்கு மல்லாய்கில் ஈ விச்வமெல்லாம் = நசித்திடச் செய்யவில்லையென்றால் இந்த விச்வமெல்லாம் அழிந்திருக்கும் (அசுரனால் அழிக்கப்பட்டிருக்கும்).

வல்ஸாசுரன் என்ற பாபி ஒரு கன்றின் ரூபத்தை எடுத்துக்கொண்டு பசுக்கள் மத்தியில் மறைந்து வந்தபோது அவனைப் பகவான் வதம் செய்து பூவுலகத்தை ஆபத்திலிருந்து காப்பாற்றினார்.

**48. காளிந்தீதீரமார்கே வனபுவி பசுபன்மாரு**
**மொன்னிச்சு மெல்லே**
**கோவ்ருந்தம் மேச்சு மேவீடின புவனபதே**
**க்ருஷ்ண காருண்யஸிந்தோ**
**ஆகுன்னேனல்ல த்ருக்காலடியொடணவதின்**
**னாசு ஞான் எந்து செய்வூ?**
**மோஹம் நீங்நும் ப்ரகாரம் வழி தரிக விபோ**
**வாமகேஹாதி வாஸின்.**

*காளிந்தீ தீரமார்க்கே* = காளிந்தீநதியின் மார்க்கமாக; வனபுவி = காட்டுப்பகுதியில்; பசுபன்மார் = கோபர்கள்; கோவ்ருந்தம் மேச்சு மேவீடின

= பசுக்கூட்டங்களை மேய்த்துக்கொண்டு நடக்கும் (கன்றுகளல்லாமல் வளர்ந்த பசுக்களையும் குறிப்பிடுகின்றார்). புவனபதே = லோகநாதா; காருண்யஸிந்தோ = கருணைக்கடலே; ஆசு = வேகமாக; திருக்காலடி யொடு அணிவதின்னு = திருப்பாதங்களில் சேர்வதற்கு; ஆகுன்னேனல்ல = என்னால் இயலவில்லையே; ஞான் எந்து செய்வூ? = நான் இனி என்னதான் செய்வேன்? மோஹம் நீங்ஙும் ப்ரகாரம் வழி தரிக = எனது மோகங்கள் (ஸம்ஸார பந்தங்கள்) நீங்க வழிகாட்ட வேண்டுமே; வாமகேஹாதி வாசின் = இடத்துபுறத்தப்பா.

காளிந்தீ தீரத்து வனப்பகுதிகளில் பசுக்களை மேய்த்துக் கொண்டு கோபர்களுடன் வசிக்கும் புவனபதே, கருணாவாரிதே, நான் உனது திருவடியில்சேர இயலவில்லையே – ஹே விபோ, வாமகேஹாதிவாஸின், எனது பந்தங்களை விடுவித்து உன் திருவடியில் சேர்த்துக்கொள்.

**49. ஆக்கம் கலர்ன்ன திருமேனி விழுங்ஙுவானாய்**
**கொக்கும் பிளர்ன்னு வலியோரு பகம் வரும்போள்**
**சிக்கென்னு வன்னு கதிநல்கி வினோதமோடே**
**சக்ரன்னு மோதமருளீடின தே நமஸ்தே.**

ஆக்கம் கல்ர்ன்ன = அழகான; விழுங்ஙுவானாய் = விழுங்குவதற்காக; பகம் = கொக்கு; சிக்கென்னு = வேகமாக; கதிநல்கி = மோட்சம் கொடுத்து; வினோதமோடே = விளையாட்டாக; சக்ரன் = இந்திரன்; மோதமருளீடின = சந்தோஷத்தைக் கொடுத்த; தே நமஸ்தே = உனக்கு நமஸ்காரம்.

உனது அழகான திருமேனியை விழுங்குவதற்காக கம்ஸன் அனுப்பின பகாசுரன் என்ற அரக்கனை அனாயாசமாக வதைத்து மோட்சம் கொடுத்து, இந்திரனுக்கு சந்தோஷத்தை நல்கின உனக்கு நமஸ்காரம்.

**50. பீலிக்கார்முடி கால்த்தளிர் பொடியுமேற்**
**றொட்டட்டழிஞுங்ஙனே**
**தாளத்தில் குழலும் குபேரநடயும்**
**கோபாலரும் கோக்களும்**
**பாலஸ்த்ரீகள் உழன்னுவன்னுவழியில்**
**பார்க்குன்ன ஸௌபாக்யவும்**

**மேளத்தோடெழுன்னள்ளீடுன்னொருதினம்**
**கண்டாவூ கண்கொண்டு ஞான்.**

பீலிக்கார்முடி = மயில்தோகை அணிந்த கறுத்த தலைமுடி; கால்தளிர் = தளிர் போன்ற ம்ருதுவான பாதங்கள்; பொடியேற்று ஒட்டொட்டு அழிஞுங்ஙனே = கோதூளி படர்ந்த, அங்கங்கே சற்றே அவிழத்துடங்கிய (முடிக்கற்றைகள்). தாளத்தில் குழலும் குபேர நடயும் = குழலூதிக் கொண்டு தாளகதிகளுடன் ப்ரதாபத்துடன், கம்பீரமான நடையழகும்; உழன்னுவன்னு = மிகவும் வேதனைப்பட்ட (பகல் முழுதும் கண்ணனைக் காணாமல் ஏற்பட்ட தவிப்பினால்) கோபாலர்களும் கோபீஜனங்களும்; மீண்டும் அவனை மாலையில் பார்க்கும் பாக்கியமும்

தளிர் போன்ற பாதங்கள், கோதூளி பூண்ட அவிழ்ந்த கார்குழலும், தாளத்தோடு கூடின குழல்விளியும், கம்பீரமான நடையழகும், கோபாலர்களும் கோக்களும், உனது பிரிவினால் வாடி மீண்டும் உன்னைப் பார்த்த சந்தோஷத்திலுள்ள கோபிகைகளும், மேளதாளங்களோடு கூட உள்ள உனது "எழுன்னள்ளத்து" ஊர்வலம் – ஸ்வாமிபுறப்பாடு இதெல்லாம் என்னால் காண இயலவேண்டுமே கண்ணா.

51. **கண்ணன் கூடாதேவண்ணம் பெருகினொரு**
**பெரும்பாம்பினுள்ளில் கடன்னாரெண்**
**ணம் கூடாதே கோபாலருமதினிடயில்**
**கோக்களும் சேர்ன்னொருன்னாள்**
**அன்னேரம் தானுமுள்புக்கவனு கதிகொடுத்**
**தாசு மூர்ச்சித்தவர்க்கும்**
**தண்டம் கூடாதே போன்னானது பொழுதசுரன்**
**சென்னு ஸாயூஜ்ய மார்ன்னான்.**

ஒருன்னாள் = ஒருதினம்; வண்ணம் பெருகின = ரொம்பப் பெரிய; எண்ணம் கூடாதே = எண்ணமற்ற; கண்ணன் கூடாதே கடன்னார் = கண்ணன் துணையில்லாமல் கடந்து சென்றனர்; அன்னேரம் தானும் அவனுள்புக்கு = அப்போது க்ருஷ்ணும் அந்த அகாசுரனின் உள்ளே புகுந்து; மூர்ச்சிச்சவர்க்கும் = மூர்ச்சையடைந்தவர்களுக்கும்; ஆசு = வேகமாக; தண்டம் கூடாதே போன்னான் = அனாயாஸமாக எந்தவித உபாதையும் இல்லாமல் வெளியே வந்தான்; அதுபொழுது = அப்போது; ஸாயூஜ்யமார்ன்னான் = மோக்ஷபதவியை அடைந்தான்.

ஒருநாள், கண்ணனில்லாத நேரத்தில் அனேகம் கோபர்கள் மற்றும் பசுக்கள் ஆகியோர், வ்ருந்தாவனத்தில் ஒரு விளையாட்டுத்திடல் எனத் தவறாக நினைத்து ஒரு பெரிய மலைப்பாம்பின் வாயில் அகப்பட்டுக் கொண்டனர். கம்சனின் அடியாளான அகாசுரன் (பாம்பின் வடிவில் இருந்தவன்) வாயில் கண்ணனும் உள்புகுந்து அதன் வயிற்றைக் கிழித்து அனைவரையும் காப்பாற்றினான். அசுரனும் ஸாயூஜ்ய பதவியை அடைந்தான்.

**52. த்ருக்கய்யில் கபளான்னவும் விரல்களில்**
**ஸாரோபதம்சங்ஙளும்**
**போத்தும் கொம்புமுதார வேத்ரவுமிடம்**
**கக்ஷே வஹன் கௌதுகால்**
**வஸ்த்ராந்தே மடியில் தரிச்சு முரளீம்**
**கோபாலரும் தானுமாய்**
**ஸ்வர்கத்துள்ளவர் நோக்கிநில்கே யஜனாத்**
**த்யக்ஷன் புஜிச்சீடினான்.**

த்ருக்கையில் = திருக்கரத்தில்; கபளான்னம் = அன்ன உருண்டை; ஸாரோபதம்சங்ஙளும் = ருசிகரமான கறிவகைகள்; போத்தும் கொம்பும் = எருமைக் கொம்புகொண்டு செய்யப்பட்ட ஒரு குழல் வாத்தியம்; உதார வேத்ரவும் = பசுக்களை மேய்க்க பயன்படும் கம்பு (அடிப்பதற்க்கு பயன்படுத்தாமல் அலங்காரத்திற்காக வைத்ததனால் உதாரம்); இடம் கக்ஷே = இடதுபக்கத்து அக்குளில்; வஹன் = தரித்துக்கொண்டு; கௌதுகால் = சந்தோஷத்துடன்; வஸ்த்ராந்தே மடியில் தரிச்சுமுரளீம் = அரயில் அணிந்துள்ள வஸ்த்ரத்தின் இடையில் செருகி வைத்துள்ள புல்லாங்குழல்; ஸ்வர்கத்துள்ளவர் நோக்கி நில்கே = வானத்துள்ள தேவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போது; யஜனாத்யக்ஷன் = யாகங்களில் அதிகாரியாயுள்ளவன்; புஜிச்சீடினான் = உண்டான், சாப்பிட்டான்.

தனது திருக்கையில் அன்ன உருண்டை, விரல் இடுக்குகளில் ருசிகரமான கறிவகைகள்; இடதுபக்க அக்குளில் கொம்பு வாத்தியம், பசுக்களை மேய்க்க உபயோகப்படும் கம்பு, இடுப்பைச்சுற்றி கட்டி யிருக்கும் வஸ்த்ரத்தில் சொருகிய புல்லாங்குழல் ஆகிய கோலத்தில் கோக்கள், கோபாலர்கள் ஆகியோருடன் சந்தோஷமாக கண்ணன் வனபோஜனம் செய்தான். யாகங்களுக்கெல்லாம் பலதாதாவான கண்ணனின் இந்தக் கோலத்தை வானவர்கள் பார்த்து பூரிப்படைந்தார்கள்.

53. உண்ணிக்கரங்ஙளிருட்டிய சோறு மாயிட்
டுண்ணிக்கிடாங்ஙளொருபோலெ சமஞ்ஞு சங்க்யம்
ஒன்னிச்சிருன்னுருளயுண்மது கண்டுமுண்டும்
வெண்ணக்கிரன்னவன் அதின் நடுவே நிரன்னு.

உண்ணிக்கரங்ஙள் = பிஞ்சுக்கைகள்; உருட்டிய சோறுமாயி = உருட்டின கவளம் அன்னம்; உண்ணிக்கிடாங்ஙள் = கோபக் குழந்தைகள், ஒருபோலெசமஞ்ஞு = ஒரே மாதிரியாக அலங்காரம் செய்து கொண்டு; ஒன்னிச்சிருன்னு = ஒன்றாக அமர்ந்து; உருளயுண்டது கண்டுமுண்டும் = உருளைச்சோா் மற்றவர் சாப்பிடுவதை தான் வேடிக்கைப் பார்த்தும் தானும் சாப்பிட்டும்; வெண்ணக்கிரன்னவன் = வெண்ணை வேண்டி யாசித்துப் பெற்றவன்; அதின் நடுவே நிரன்னு = கோபர்கள் வட்டமாக அமர க்ருஷ்ணன் அவர்கள் மத்தியில் எல்லோரையும் பார்க்கும்படி அமர்ந்தான்.

தன்னைப்போலவே அலங்காரம் செய்து கொண்ட மற்ற கோபர்களுடன், தனது பிஞ்சுக்கைகளில் உருளைச்சோறுடன், அனைவரும் வட்டமாக அமர்ந்திருக்க, கண்ணன் அவர்கள் மத்தியில் நடுநாயகமாக அமர்ந்து, தனது சகாக்கள் உண்பதை வேடிக்கை பார்த்தும், தானும் சாப்பிடுவதுமாக வெண்ணைக்கு இரந்த கண்ணன் விளங்கினான்.

54. வல்ஸஸ்தோமம் முகுந்தன் வனபுவி பசு
பன்மாருமாய் மேச்சகாலம்
வல்ஸஸ்தேயம் விதாதா விவசதயில் வ்ருதா
செய்துநிர்விண்ணனாயான்
வல்ஸஸ்தோமத்தெ நோக்கும் பொழுது மகுடவும்
ஹார பீதாம்பரஸ்ரீ
வல்ஸத்தோடெ விளங்ஙீ புவனமகிலவும்
கண்டு விஷ்ணுஸ்வரூபம்.

வல்ஸஸ்தோமம் = பசுக்கள் கூட்டம்; வனபுவி = காட்டுப்பகுதி; பசுபன்மார் = கோபாலகர்கள்; மேச்சகாலம் = மேய்த்தகாலம்; வல்ஸஸ்தேயம் = கோ, கோபாலர்களை மோஷ்டிப்பது, (திருடுவது) என்ற காரியம்; விதாதா = ப்ரும்மா; விவசதயில் = பரவசத்தில் விஷமத்தில்; வ்ருதா = வெறுமெ; நிர்விண்ணனாயான் = நிராசைப்பட்டான்; மகுடம் = கிரீடம்; ஹாரம் = மாலை; பீதாம்பரம் = மஞ்பள்பட்டு; –வல்ஸத்தோடெ

விளங்ஙி = ஶ்ரீவத்ஸத்துடன் விளங்கினான்; புவனமகிலவும் = அகிலம் முழுவதும்.

ப்ரம்மன் பகவானைப் பரீட்சை செய்வதற்காக பசுக்கூட்டங்களையும் கோபர்களையும் ஒரு வருடம் மறைத்து வைத்தாரென்றும் அதைப் பார்த்தபோதெல்லாம் ஒவ்வொரு பசுவும் ஒவ்வொரு கோபாலனும் கிரீடம், ஹாரம், பீதாம்பரம் ஆகிய திவ்யாபரணங்களுடன் சாட்சாத் விஷ்ணுஸ்வரூபமாகவே தெரிந்து மிகவும் விவசனானான் என்றும் தாத்பர்யம். அதே சமயம் பகவான் தனது திவ்யசக்தியால் கோ, கோபாலர்களை ஸ்ருஷ்டி செய்து பாலித்தும் வந்தான் - அனைத்தும் விஷ்ணு ஸ்வரூபமாகவே மாறிவிட்டன.

**55. கழுததேஹமெடுத்த தேனுகன் தான்**
**பழுதில்ச்சென்னு பிடிச்சுராமனோடாய்**
**கழலில்தன்னெ பிடிச்சு நிக்ரஹிச்சிட்**
**டழகில் தால பலங்ஙளாஸ்வதிச்சான்.**

கழுததேஹமெடுத்த தேனுகன் = கழுதையின் ரூபத்தில் வந்த தேனுகாசுரன்; பழுதில்ச்சென்னு = சமயம் பார்த்துச் சாமர்த்தியமாகச் சென்று; கழலில் தன்னெ பிடிச்சு = பின்னங்காலிலேயே பிடித்து; நிக்ரஹிச்சிட்டு = கொன்றுவிட்டு; அழகில் தாலபலங்ஙள் ஆஸ்வதிச்சான் = அழகாக தாலபலங்களை ருசித்துச் சாப்பிட்டான்.

தேனுகன் என்னும் அசுரன் வஞ்சமாக ஒரு நாள் பலராமரைப் பிடிக்க வந்தான். அப்போது பலராமன் மிகச் சாதுர்யமாக அசுரனின் பின்னங்கால்களைப் பிடித்து சுழற்றி வீசியெறிந்து கொன்றுவிட்டான். பின் அனைவரும் தாலவனத்திலுள்ள ருசியான பனம்பழங்களை மகிழ்ச்சியோடு தின்று மகிழ்ந்தார்கள்.

**56. தண்ணீர் முக்கிக்குடிக்கும் பொழுது கொடுவிஷம்**
**தட்டி மோஹிச்சு வீணோருண்**
**ணிகோபாலரெக் கண்டொரு தினமுடனே**
**சென்னு காருண்யவேகால்**
**உண்ணிக்கால் கொண்டு வண்ணம் பெரிய ஃபணி**
**வரன்தன்னெ மார்திச்சு பின்னே**

**தண்டம் கூடாதயச்சீடின பரமவிபோ**

**நின்னெ ஞான் கை தொழுன்னேன்.**

மோஹிச்சு வீண = மயக்கமாகி விழுந்த; உண்ணி கோபாலரெக் கண்டொருநாளும் = சிறு கோப பாலர்களைக் கண்டு ஒருநாள்; காருண்யவேகால் = கருணை பொங்கிவழிய வேகமாக; வண்ணம் பெரிய = பெரிய சரீரத் துடனான; ஃபணிவரன் = உக்ரஸர்ப்பம்; உண்ணிக்கால் கொண்டு மர்திச்சு = சிறுபாதங்களால் மிதித்து; தண்டம் கூடாதயச்சீடின = கொல்லாமல் விட்டு விட்டு (ரமணகம் என்ற த்வீபத்திற்கு போக அனுமதித்த) பரமவிபோ = ஸர்வவ்யாபியான பகவானே.

ஒருநாள் அருகிலுள்ள காளிந்தியிலிருந்து குளிர்ந்த ஜலத்தை முக்கிக் குடித்த பசுக்கள், கன்றுகள், கோபர்கள் ஆகியோர் மயங்கி விழுந்ததைக் கண்ட க்ருஷ்ணன் பரம கருணையுடன் தண்ணீரில் குதித்து பெரிய சரீரத்தையுடைய நாகஸ்ரேஷ்டனை தனது பிஞ்சுப் பாதங்களால் மிதித்து, விஷத்தையிறக்கி, ஆனால் கொல்லாமல் விட்டு, ரமணகம் என்ற த்வீபத்திற்கு அனுப்பி வைத்த ஸர்வவ்யாபியான பகவானே, உன்னை நான் கைதொழுகின்றேன்.

**57. காளிந்தீ தீரதேசே நிசிவன தஹனன்**
**வன்னு சுற்றும் சுழுன்னாக்**
**காளுன்னோராதியோடெ பசுபகுலமுணர்ன்**
**னோடியங்ஙோட்டுழன்னு**
**சீளென்ன காட்டுதீயெத் திருமுககமலம்**
**கொண்டு கண்ணன் நுகர்ன்னு**
**நாளொன்னீ வண்ணமோரோ களிகள் பலதுமக்**
**கானனாந்தே துடர்ன்னு**

காளிந்தீதீரதேசே நிசி = காளிந்தி நதியோரம் இரவில்; வனதஹனன் = காட்டுதீ; சுழன்னு = சுழன்று; காளுன்ன = கத்திஜ்வலிக்கின்ற; பசுபகுலம் = கோபர்கூட்டம்; சீளென்னு = சட்டென்று; முககமலம் = தாமரைபோன்ற வதனம்; உணர்ன்னங்ஙோட்டுபூன்னு = உறக்கத்திலிருந்து விழித்துக் கொண்டு அங்குமிங்குமாக ஓடிக்களைத்து; நுகர்ன்னு = விழுங்கி; நாளொன்னீ வண்ணம் = ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு புதுப்புது; ஓரோ களிகள் = ஒவ்வொரு விளையாட்டுக்கள்; கானனாந்தே துடர்ன்னு = காட்டிற்குள் தொடர்ந்து நடந்தன.

காளிந்தி நதியோரம் பற்றியெரிந்து கொண்டிருந்த காட்டுத் தீயில் அகப்பட்ட பசுக்கள் பீதியுடன் அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருப்பதைப் பார்த்த கண்ணன் சட்டென்று காட்டுத்தீயினை தன் திருவாயால் உட்கொண்டு கோக்களையும் கோபர்களையும் காப்பாற்றினான். இவ்வண்ணம் ஒவ்வொரு நாளும் அக்காட்டில் பலவிதமான லீலா விலாசங்கள் தொடர்ந்து வந்தன.

**58. ப்ரலம்பனென்னுள்ள சுரேந்தரனோர்த்தா**
**னலம்புசன் தானு மஸாரனத்ரே**
**சராசரங்ஙள்க்கு சுகம் வருத்தான்**
**ஹலாயுதன் கொன்னருளி வினோதால்**

அசுரேந்த்ரன் = அரக்கர்களின் தலைவன்; ஓர்த்தான் = நினைத்தான்; அலம்புசன் = அலம்பு என்ற காரண ஜலத்தில் சயிக்கின்ற ஸ்ரீ அனந்தபத்மநாபன்; அஸாரன் = நிஸ்ஸாரன் (துச்சமானவன்); அத்ரே = என்று; சுகம் வருத்தான்; சுகத்தைக் கொடுக்க; வினோதால் = விளையாட்டாக, அனாயாசமாக; கொன்னருளி ; கொன்று மோட்சம் கொடுத்தான்; ஹலாயுதன் = பலராமன்.

ப்ரலம்பன் என்ற அசுரன் ராமகிருஷ்ணர்களை மிகவும் துச்சமாக நினைத்தான். ஆனால் அவனது கொடுமைகளிலிருந்து சராசரங்களைக் காப்பாற்றும் பொருட்டு பலராமன் அவனை வதம் செய்து முக்தி கொடுத்து அருளினான். (சில புத்தகங்களில் அலம்புஸன் என்பதை வேறொரு அசுரனாகச் சொல்கின்றது. ஆனால் பாகவதம் ப்ரலம்பனை மட்டுமே குறிப் பிடுகின்றது. மேலும் அலம்புஸனைத் துரோணர் வதைத்ததாக வரலாறு.)

**59. தூரேப் போயங்ஙு முஞ்சாடவியிலொருதினம்**
**கோக்கள் கோபாலரெல்லாம்**
**பார்க்கும் காட்டுதீயில் நடுவிலுடனகப்**
**பெட்டு முட்டுன்ன நேரம்**
**நேரேப் போய்ச்சென்னு பார்க்கும் கருணயோடவரெக்**
**கண்ணு சிம்மிச்சு சுற்றும்**
**பூரிச்சோரக்னியேச் சேர்த்தது திருவதனம்**
**கொண்டதும் கைதொழுன்னேன்.**

தூரோப்போயங்கு = தூரமாகப் போய் அங்கு; முஞ்சாடவி = முஞ்சைப்புல்கள் வளர்ந்த காட்டில்; பாரிக்கும் = வியாபிக்கும்; நடுவிலுடனகப்பெட்டு = நடுவில் உடன் அகப்பட்டுக்கொண்டு; முட்டுன்ன நேரம் = அவஸ்த்தைப்பட்டுக் கொண்டிருக்கும் நேரம்; நேரேப் போய்ச்சென்னு பார்க்கும் = நேரில் போய்ப்பார்க்கும்; கருணயோடவரெ = கருணையுடன் அவர்களை; கண்ணுசிம்மிச்சு = அவர்களை கண்களை மூடச் சொல்லிவிட்டு; சுற்றும்பூரிச்சோரக்னியெ = சுற்றிவர விரிந்து எரிந்து கொண்டிருக்கும் காட்டுதீயை; சேர்த்தது = ஒன்றாகச் சேர்த்து; திருவதனம் கொண்டதும் =தனது வாய்க்குள்ளே ஆக்கி விழுங்கியதையும்

ஒரு நாள் கோக்களும் கோபாலர்களும் (கண்ணன் உடனில்லாமல்) வெகுதொலைவிலுள்ள முஞ்சாடவி என்னும் கோரைப்புல் நிறைந்த காட்டிற்குள் சென்றபோது கொழுத்து விட்டு எரியும் காட்டுதீயில் மாட்டிக்கொண்டனர். அவர்கள் துயரத்தை அறிந்த கண்ணன் மிக விரைவாக அங்கு சென்று, அவர்களைக் கண்களை மூடிக்கொள்ளச் சொல்லிவிட்டு, பரந்து விரிந்திருந்த காட்டுத்தீயினை ஒன்று சேர்த்து தனது திருவாய்க்குள் புகுத்தி விழுங்கிவிட்டு, பரம கருணையுடன் அவர்களைக் காப்பாற்றிய கண்ணனை நான் கை தொழுகின்றேன். (சம்சாரம் என்ற காடுதான் முஞ்சாடவி; சம்சார துக்கங்கள் காட்டுத்தீ போன்றவை; சம்சாரத்திலிருந்து இந்திரியங்களைத் திருப்பிவிட்டால் பகவதனுக்ரஹம் பெற்றுவிடலாம் என்று தாத்பரியம்.)

**60. வேனல்க்காலம் குளுர்க்காலவுமிடிதகரப்**
**பேமழக்காலவும் போய்**
**மானிச்சு ஹந்த! வ்ருந்தாவனமது விலா**
**ஸங்ஙள் கொண்டம்புஜாக்ஷன்**
**வானிக்கார்க்கத்புதன் நீயொரு பொழுதும**
**பேதேன நல்குன்னதெல்லாம்**
**த்யானிக்குன்னேரமொட்டொட்டனுபவமறிவென்**
**னாகிலும் வன்னிதாவு.**

வேனல்க்காலம் = வெயில்காலம் (கோடை); இடிதகரப் பேமழக் காலவும் = இடியுடன் கூடி பேய்மழை பெய்யும் காலம்; மானிச்சு = பஹுமானித்து; வானிக்கார் = தேவலோகத்தவர்; அபேதேன = வித்தியாசம் பாராட்டமல்; ஒட்டொட்டனுபவம் = அனவதி அனுபவங்கள் ஏற்பட்டு; அறிவென்னதாகிலும் வன்னிதாவு = அனுபவஞானம் வந்தது என்றால்.

வெயில்காலம், குளிர்காலம்; இடியுடன் கூடிய பேய்மழைக்காலம் என்று இயற்கையின் சுழற்சியை உணர்ந்து, தாமரைக்கண்ணனான க்ருஷ்ணன் வ்ருந்தாவனத்தில் வித்தியாசம் பாராட்டாமல் செய்த லீலா விலாசங்களைப் பார்த்து தேவர்கள் ஆனந்தித்தார்கள். இப்படி பகவான் அபேதபாவத்தில் செய்த நிக்ரஹ அனுகிரஹங்களெல்லாம் எனக்கு ஆத்மானுபவ ஞானத்தைத் தியானிக்கும் போதெல்லாம் கொடுக்க வேண்டும்.

**61. பீலிகக்கண்ணுமணிஞ்ஞு பிள்ளர் நடுவே**
**கண்ணன் களிக்குன்னதும்**
**சீலக்கேடுகள் மேல்க்குமேலனுதினம்**
**வெவ்வேறே காட்டுன்னதும்**
**பாலக்காமினிமார் விழுத்த துகில் வாரிக்**
**கொண்டொளிக்குன்னதும்**
**சாலெக்கண் மிழிகொண்டு காண்மதினு ஞா**
**னென்னே கொதிக்குன்னுவான்.**

பீலிக்கண்ணுமணிஞ்ஞு = மயில்தோகையுமணிந்து; பிள்ளர் நடுவே = சிறுபிள்ளைகள் மத்தியில்; களிக்குன்னதும் = விளையாடுவதும்; சீலக்கேடுகள் = குறும்புகள்; மேல்க்குமேலனுதினம் = மேலும் மேலும் நாட்கள் செல்லும்போது; வெவ்வேறே காட்டுன்னதும் = விதவிதமாக காண்பிப்பதும்; பாலக்காமினிமார் = க்ருஷனைப் பதியாகக்கிடைக்க வேண்டும் என்று காத்தியாயினி தேவியை பூஜித்த வ்ரஜசுந்தரிகள்; விழுத்த துகில் = அவிழ்த்து வைத்திருக்கும் உடைகள்; வாரிக்கொண்டொளிக் குன்னதும் = வாரியெடுத்துக் கொண்டு ஓடிப்போய் ஒளிந்து கொள்வதும்; சாலே = நேரிடையாக; கண்மிழிகொண்டு = ஊனக்கண்களால்; காண்மதினு = காண்பதற்கு; ஞானென்னே = நான் எத்தனை நாட்களாக; கொதிக்குன்னுவான் = ஆவலுடன் உள்ளேன்?

சிறுபிள்ளைகள் மத்தியில் மயில்தோகையை அலங்காரமாக அணிந்துள்ள கண்ணன் விளையாடுவதும், நாளுக்குநாள் பலவிதமாக குறும்புகள் செய்வதும்; கண்ணனையே பதியாகக் கிடைக்கவேண்டும் என மனமுருகிக் காத்யாயனிதேவியை ப்ரார்த்தனை செய்யும் கோபகன்னியர்கள் அவிழ்த்துவைத்த உடைகளை வாரியெடுத்துக்கொண்டு ஒளித்து வைப்பதும் ஆன திவ்ய தரிசனங்களைக் காண எனது

ஊனாகங்களுக்கு வாய்ப்பு கிட்ட வேண்டுமே என்று நான் எத்தனையோ நாட்களாகத் தவம் கிடக்கின்றேன்.

**62. சொல்லேறும் ப்ராமணஸ்த்ரீஜனமவர் வசமாக்**
**கீடும் அன்னம் புஜிப்பான்**
**நல்லோரெளல்சுக்யமுள்க்கொண்டுஒரு**
**திவஸமெழுன்னெள்ளி தூரம் வனாந்தே**
**மெல்லே கோபாலரும் கோக்களுமதினிடசேர்ன்**
**னேட்டனும் தானுமாய்ச்சேர்ன்**
**னுல்லாஸம் பூண்டு மேவீடின திருவுடல்க்**
**கண்டாவு கண்கொண்டொருன்னாள்.**

சொல்லேறும் = கீர்த்தியுடைய; வசமாக்கீடுமன்னம் புஜிப்பான் = ஒருக்கிவைத்த அன்னத்தைச் சாப்பிட; நல்லொரெளல்சுக்யமுள்கொண்டு = நல்ல உத்ஸாஹத்துடன்; எழுன்னெள்ளி = எழுந்தருளி; கோபாலரும் கோக்களுமதினிட சேர்ன்ன ஏட்டனும் = பசுபாலகர்கள், பசுக்கள் ஆகியவற்றுடன் அண்ணனும் தானுமாக; உல்லாசம் பூண்டு = உல்லாசத்துடன்.

பரமபக்தைகளான ப்ராமணஸ்த்ரீகள் சமைத்து எடுத்துவந்த திவ்யான்னத்தைச் சாப்பிடுவதில் மிகுந்த ஆவல் பூண்டு ஒரு நாள் கோக்கள், கோபாலகர்கள், அண்ணன் பலராமன் ஆகியோருடன் உத்சாஹமாக எழுந்தருளப் பண்ணின கண்ணனின் திருவுடலை இந்தக் கண்கள் கொண்டு பார்க்க வேண்டுமே.

**63. கொஞ்சிக்கண்கொண்டு குஞ்சிப்பசுபரொடு களிச்**
**சும் முதா வல்லவீனாம்**
**வஞ்சிச்சும் சித்தபத்மம் மதுரமுரளிகொண்**
**டாகே விச்வம் ஜயிச்சும்**
**குஞ்சிக்கைகொண்டு குன்னின்குட திருமுடியில்**
**சூடி நின்னோரு நின்மை**
**நெஞ்சில் தோன்னேணம் ஆபல்கணமனவதியாய்**
**வன்னு வீழும்பொழெல்லாம்.**

கொஞ்சிக்கண்கொண்டு = கண்களால் கோஷ்டி காட்டி; முதாகளிச்சும் = சந்தோஷமாக விளையாடியும்; குஞ்சிப்பசுபரொடு = சிறு கோபர்களுடன்; வல்லவீனாம் சித்தபத்மம் = கோபிகைகளின் இதயகமலம்; வஞ்சிச்சும் = கவர்ந்தும் (அபஹரித்தும்); மதுரமுரளி கொண்டாகெ விச்வம் ஜயிச்சும் = இனிமையான வேணுகானத்தினால் ஜகத்தையெல்லாம் ஜயித்தும்; குஞ்சிக்கைகொண்டு = பிஞ்சுக்கரங்களினால்; குன்னின்குட = குன்றின்குடை; திருமுடியில் சூடி நின்னோரு = திருமுடியில் சூடி நின்றவொரு; நின்மை = உனது திருமெய்; நெஞ்சில் தோன்னேணம் = நெஞ்சகத்து உதிக்கவேண்டும்; ஆபல்கணமனவதியாய் வன்னு வீழும்போழெல்லாம் = ஒன்றன் பிறகு ஒன்றாக ஆபத்துகள் வரும்போதெல்லாம்.

உனது கடைக்கண்களால் ஓரோருவிதமாக சேஷ்டைகள் காட்டிக் கொண்டும், கோபர்களுடன் ஆனந்தமாக விளையாடியும், கோபிகைகளின் இதயங்களைக் கவர்ந்து கொண்டும், உனது இனிமையான வேணுகானத்தினால் ஜகத்தை முழுவதும் ஜயித்தும், பிஞ்சுக் கரங்களினால் கோவர்த்தன மலையினைக் குடையாகப் பிடித்தும் காட்சியருளிய உனது திருமெய் எனக்கு ஆபத்துகள் வரும்போதெல்லாம் என் நெஞ்சிலே உதிக்க வேண்டுமே.

**64. வர்ணிக்காவல்ல விஷ்ணோ! தவகுணகண**
**மோரோன்னு சேஷன்னுபோலும்**
**கண்ணில்க்காணுன்னவர்க்கெந்திது விஷய**
**தியாமெங்கிலும் ப்ரார்த்தயே ஞான்**
**விண்ணில்க்கூடும் ஜனங்ஙள்க்கதிபன் அவசனாய்**
**வன்னு கைகூப்பி வீணோ**
**ருண்ணி த்ருக்காலொரிக்கல் மனஸி மம தரிக்**
**காய் வரேணம் க்ருபாப்தே.**

வர்ணிக்காவல்ல = வர்ணிக்க இயலாது; தவகுணகணமோரோன்னு = உன்னுடைய குணாதிசயங்கள் ஒவ்வொன்றும்; சேஷன்னு போலும் = ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனால்கூட; விஷயதியா = விஷயபுத்தியுடையவர்கட்க்கு; கண்ணில்க்காணுன்னவர்க்கெந்திது = புறக்கண்களால் பார்ப்பவர்களுக்கு எங்ஙனம்; எங்கிலும் = ஆயினும்; ப்ரார்த்த்யே ஞான் = நான் ப்ரார்த்திக்கின்றேன்; விண்ணில் கூடும்

ஜனாங்ஙள்க்கதிபன் = தேவலோகத்தவர்களின் அதிபனாம் தேவேந்திரன்; அவசனாயவனனு = கர்வம் நசித்தவனாக வந்து; கைகூப்பி வீணோரு = (தனது கர்வத்துக்குப் ப்ராயசித்தமாக) இருகரங்களையும் கூப்பிக்கொண்டு அஞ்சலி பத்தனாக; உண்ணி த்ருக்காலொரிக்கல் = பிஞ்சுபாதங்களை ஒருவேளையாவது; மனஸி மம தரிக்காய் வரேணம் = என் மனதில் தரிக்கும் , தர்சிக்கும் வாய்ப்பு கிடைக்கவேண்டுமே, க்ருபாப்தே = கருணைக்கடலே.

ஹே விஷ்ணோ! ஆயிரம் நாவுபடைத்த ஆதிசேஷனாலும் உனது குணகணங்களை வர்ணிக்க இயலாது. அப்படியிருக்கும்போது விஷயவாசனைகளுடைய என்போன்றோர் இந்தப் புறக்கண்களால் எப்படிப் பார்க்க இயலும். ஆயினும் நான் உன்னிடம் ப்ரார்த்தனை செய்கின்றேன். நீ கோவர்த்தனோத்தாரணம் செய்தபோது கர்வம் தொலைந்த தேவேந்திரன் ப்ராயச்சித்தமாக நமஸ்காரம் செய்த உனது திருப்பாதங்கள் எனது மனதில் உதிக்க வேண்டுமே, கருணைக்கடலான பகவானே.

**65. நந்தன் சென்னங்ஙு முங்ஙீடின வழி வருணன்**
**தன்டே லோகத்து சென்னான்.**
**அன்னேரம் நந்தஜன் தான் வருணபுரியிலுள்ப**
**புக்கு கொண்டிங்ஙு போன்னான்**
**பந்துக்கள்க் கொக்கெயும் தானனுபவமருளி**
**பிந்துநாதாந்தமப்போளெந்**
**தாமவ்வண்ணமென்னாகிலு மதினுமஹம்**
**பாத்ரமல்லே முகுந்தா.**

முங்ஙீடின வழி = மூழ்கிய நேரத்தில்; வருணன் தன்டே = வருணனுடைய; அன்னேரம் = அப்பொழுது; வருணபுரியிலுள்புக்கு = வருணபுரியின் உள்ளே புகுந்தான்; கொண்டிங்ஙு போன்னான் = கொண்டு இங்கு வந்தான்; பந்துக்கள்க்கொக்கெயும் = பந்துக்கள் எல்லோருக்கும்; பிந்துநாதாந்தம் = சச்சிதானந்தபிந்து என்ற ஞானானுபவம்; எந்தாம் = என்னவென்று; அவ்வண்ணம் = அந்தப்பிரகாரம்; அஹம் = நான்; பாத்ரமல்லே = பாத்திரமாகவில்லையா, அருகதையில்லாதவனா?

ஒருநாள் நந்தகோபர் நதியில் குளித்துக்கொண்டிருக்கும்போது வருணனின் ராஜதானியில் சென்று அகப்பட்டுக் கொண்டான். அப்போது கண்ணன் தானும் அங்கு சென்று தந்தையை மீட்டு வந்து தனது பந்துக்கள்

அனைவருக்கும் சச்சிதானந்தமாகிய அனுபவத்தை அருளினான். ஹே முகுந்தா, அந்த அனுபவத்திற்கு நானும் யோக்யதை உடையவனாக ஆவேனா?

**66. இந்திந்தரங்ஙள் முரளுன்னதுமிந்திரேசன்**
**மந்தம் துடங்ஙியகுழல் த்வனியும் வனாந்தே**
**ஒன்னிச்சு சென்னு தருணிகளோடு சொன்னார்**
**வ்ருந்தாவனத்தில் வருவானவர் தூதரோவான்.**

இந்திந்தரங்ஙள் = இந்திரையுடன் தாமரையின் ஐஸ்வர்யம் அனுபவிக்கும் வண்டுகள்; இந்திரேசன் = இந்திரையின் ஈசன் (நாதன்); மந்தம் = மெதுவாக; முரளுன்னது = மூளுகின்ற; ஒன்னிச்சுசென்னு = ஒன்றாகச்சென்று; தருணாக்ஷிகளோடு சொன்னார் = கோபாங்கனை களிடம் சொன்னார்; தூதரோவான் = தூதரோ என்று தோன்றும் விதமாக.

இந்திராநாதனாகிய க்ருஷ்ணன் மெதுவாக வேணுகானம் செய்ய ஆரம்பித்தபோது அந்த த்வனியுடன் சேர்ந்து வண்டுகளின் ரீங்காரமும் வ்ரஜகன்யகைகளை வ்ருந்தாவனத்திற்கு வரவழைக்க விடுத்துள்ள தூதுபோல் தோன்றியது.

**67. தூவெண்ணிலாவு விரவில் தெளியுன்ன நேரம்**
**பூவின்னுளாம் பரிமளம் சொரியுன்ன நேரம்**
**கார்வர்ணனகுழலெடுத்து விளிச்ச நேரம்**
**நீள்க்கண்ணிமார் உழறிவன்னதுகாண்மனோ ஞான்**

விரவில் = வேகத்தில், விரைவில்; தெளியுன்ன நேரம் = உதிக்கும் நேரம்; பூவின்னுளாம் = பூவில்உள்ள, பரிமளம் = சுகந்தம், நறுமணம்; சொரியுன்ன = பொழிகின்ற; குழலெடுத்து விளிச்சநேரம் = குழலூதிக் கூப்பிட்ட நேரம்; நீள்க்கண்ணிமார் = சுந்தரிமார்; உழறி = அவசரஅவசரமாக, காண்மனோ ஞான் = நான் பார்ப்பேனா?

பௌர்ணமி நிலவு வேகவேகமாக உதித்துவரும்போது, புதிதாக மலர்ந்த மலர்களின் நறுமணம் வீசும்போது, கார்வண்ணன் குழலூதி விளித்தபோது, அவற்றில் மயங்கிய கோபஸ்த்ரீகள் அவசர அவசரமாக ஓடிவந்ததை நான் பார்க்கும் பாக்கியம் அடைவேனா?

68. அங்க பங்ஙி கண்டு கண்டனங்கமால் பிணஞ்ஞுமேவு
மங்கனாஜனத்தொடே மனம் கலர்ன்ன மாதவன்
ரங்கநாதனென்னுபேர் புகழ்ன்ன நாதனின்னினிக்கு
ஸங்கநாசமென்னு சொன்ன மங்கலம் தரேணமே.

அங்கபங்ஙி = தேஹகாந்தி (அங்க அழகு); அனங்கன் = காம தேவன். மால் = பீடை; (உபத்ரவம்); அங்கனாஜனம் = வ்ரஜஸ்திரீகள்; மனம் கலர்ன்ன = மனம் ஒருமைப்பட்ட; ரங்கநாதனென்னுபேர் புகழ்ன்ன = ரங்கநாதன் என்ற பேருடன் புகழ்பெற்ற; நாதனின்னினிக்கு = நாதன் இன்று எனக்கு; ஸங்கநாசம் என்னு சொன்ன = லௌகீக விஷயங்களிலுள்ள ஆசை நசிக்கும் என்று சொன்ன; மங்கலம் = பாக்கியம்.

பகவானின் தேஹகாந்தியைப் பார்த்து மன்மதனின் பிடியிலகப்பட்ட வ்ரஜகன்யகைகளின் ஒருமைப்பட்ட மனதுடன், ரங்கநாதன் என்று புகழ்பெற்ற மாதவன் இன்று லௌகிக விஷயங்களிலுள்ள ஆசாநாசம் என்கின்ற பாக்கியத்தை எனக்குத் தரவேண்டுமே.

69. செந்தாமரப்பூ மலர்மால மௌலௌச்
செந்தாமரக்கண்ணனணிஞ்ஞு நன்னாய்
வ்ருந்தாவனத்தில் குழலூதுமக்
கோப்பென்னாகிலும் சேதஸி கண்டிதாவூ.

மௌலௌ = திருமுடியில்; செந்தாமரப்பூ மலர்மால = செந்தாரைப் பூவாலான மலர்மாலை; செந்தாமரக்கண்ணன்ணிஞ்ஞு நன்னாய்= செந்தாமரைக்கண்ணன் நன்றாக அழகாக அணிந்துகொண்டு, அக்கோப்பு = அந்தக் கோலாஹலக் காட்சி; என்னாகிலும் = எப்போதாவது; சேதஸி= சித்தத்தில்; கண்டிதாவூ = காணக்கிடைக்க வேண்டுமே.

திருமுடியில் செந்தாமரைப்பூ மலர் மாலைகள் அணிந்த, செந் தாமரைக்கண்ணன் வ்ருந்தாவனத்தில் குழலூதும் அந்த அதிஅற்புதக் காட்சியை நான் எப்போதாகிலும் எனது மனதில் காண்பேனா?

70. வ்ருந்தாவனத்திலெழுன்னள்ளி விலாஸமோடே
மந்தாரமால குழல் பீலிகள் பூண்டு நன்னாய்
பெண்ணுங்ஙளோடுமிடசேர்ன்னு நிலாவுதோறும்
கண்ணன் களிச்ச களியம்பொடு காண்மனோ ஞான்.

எழுன்னள்ளி = எழுந்தருளி; விலாஸமோடே = ஸ்ருங்கார பாவத்துடன்; மந்தாரமால குழல் பீலிகள் பூண்டு நன்னாய் = மந்தாரமாலை (வனமாலை) புல்லாங்குழல்; மயில்தோகை ஆகியவை அழகுற அணிந்த; பெண்ணுங்ஙளோடுமிடசேர்ன்னு = மாதவ மாதவ மத்யே கோபீ கோபீ கோபீ மத்யே மாதவ என்பதற்கிணங்க கோபிகையர் நடுவே; நிலாவுதோறும் = பௌர்ணமி தோறும்; களிச்சுகளியம்பொடு = ஆடின ஆட்டத்தையெல்லாம்; காண்மனோ ஞான் = நான் காண்பேனா?

மந்தாரமாலைகள், வேணு, மயில்தோகைகள் ஆகியவை தரித்த சுந்தரனான கண்ணனை, கோபகன்யகைகளுடன் பௌர்ணமியில் ராஸலீலை ஆடும் அழகான காட்சியை நான் பார்ப்பேனா?

**71. கோபஸ்த்ரீகள் மறஞ்ஞுபோய திருமெய்**
**கண்டிட்டு கௌதூஹலால்**
**மாறத்தும் முலமேலு மாஸ்யகமலம்**
**தன்மேலுமாச்ளேஷிதம்**
**ஸ்ரீமல்ச் சேவடி மூவடிக்கு புவனம்**
**வென்னீடுமோஜஸ்ஸோடெச்**
**சேதஸ்ஸிங்கல் உதிப்பதின்னு ஸுக்ருதம்**
**போராஞ்ஞிரன்னீடினேன்.**

மறஞ்ஞுபோய = மறைந்துபோன; கௌதூஹலால் = ஆச்சரியத்துடன் சந்தோஷத்துடன்; ஆஸ்யகமலம் = முககமலம்; ஆச்ளேஷிதம் = ஆலிங்கனம்; ஸ்ரீமல்ச்சேவடி = மங்களமயமான திருப்பாதங்கள்; மூவடிக்கு புவனம் வென்னீடும் = மூன்று அடிகளில் அகில புவனத்தையும் வென்ற (வாமனஅவதாரம், த்ரிவிக்ரம அவதாரம்); ஓஜஸ்ஸோடெ = சோபையுடன்; சேதஸ்ஸிங்கல் = இதயத்தில்; உதிப்பதின்னு = உதிப்பதற்கு; ஸுக்ருதம் = புண்ணியம்; போராஞ்ஞிரன்னீடினேன் = போதவில்லை என்பதால் உன்னிடம் யாசகம் செய்கின்றேன்.

க்ருஷ்ணன் தன்னிடம் மட்டுமே அதிக ப்ரேமையுடன் உள்ளான் என்று நினைத்து கர்வப்பட்ட கோபிகைகள் சட்டென்று மறைந்த க்ருஷ்ணனை மீண்டும் காணக்கிடைத்தபோது ஆனந்த மிகுதியில் கண்ணனின் திருப்பாதங்களைத் தங்களின் ஸ்தனங்கள் மீது வைத்து ஆலிங்கனம் செய்து மகிழ்ந்தார்கள். எந்தத் திருவடி வாமன

அவதாரகாலத்திலே மூவடிகளால் புவனம் முழுவதையும் அளந்ததோ அந்தத் திருவடியை எனது மனதில் காணத் தக்க புண்ணியம் செய்யவில்லை. ஆகையால் அந்தப் பாக்கியத்தை நான் உன்னிடம் யாசிக்கின்றேன்.

**72.** **வட்டப்போர் கொங்கமொட்டும் தடவி முரஹரன்**
**மெல்லெவட்டக்களிக்காய்**
**மட்டோலும் வாணிமார் தன்னிடயில் மரதகம்**
**போலெ சேர்ன்னும் விளங்ஙி**
**வாட்டம் தட்டாதே தாளம் தரிவளகடகம்**
**நூபுரத்தோடிணங்ஙி**
**புஷ்டானந்தேன நில்க்கும் முழுமதியதிலாம்**
**மாறு கீதங்ஙள் பொங்ஙி.**

வட்டப்போர்க்கொங்கமொட்டும் = கோபிகைகளின் வட்டமான குஜபாரங்கள்; மெல்லெ = மெதுவாக; வட்டக்களிக்காய் = வட்டவடிவமாக அனைவரும் நின்று கொண்டு நர்த்தனம் செய்யத் தயாராக; மட்டோலும் வாணிமார் தன்னிடையில் = அழகான கோபிகைகளின் நடுவே; வாட்டம் தட்டாதே = சிறிதும் அசதியடையாமல்; தரிவள = உள்ளே மணிகள் சேர்த்ததினால் சப்தம் செய்யும் வளையல்கள்; கடகம் = கங்கணங்கள்; நூபுரத்தோடிணங்ஙி = கால்சிலம்பின் தாளத்திற்கு ஒத்தார்ப்போல்; புஷ்டானந்தேன = புஷ்டியுடனும் சந்தோஷத்துடனும்; கீதங்ஙள் பொங்ஙி = கீதங்கள் பொங்கியெழுந்தன.

அழகான கோபிகைகளுடன் வட்டமாக நின்று கொண்டு மரகதம் போல் விளங்கின கண்ணன் கொஞ்சம்கூட அசதியடையாமல், ஸர்வாலங்கார பூஷிதனாக நர்த்தனம் செய்யத் தயார் நிலையில் நின்ற போது அவனது கைகளிலும் பாதங்களிலும் போட்டிருக்கும் ஆபரணங்களின் தாளகதிக்கேற்ப சுற்றுப்புறம் முழுவதும் கான மாதுர்யத்தில் நிறைந்தது.

**73.** **பீலிக்கார்முடி சாஞ்ஞும் திருமுகம்**
**மெல்லெ வியர்க்குன்னதும்**
**சாலக்கண் மிழிகொண்டு காமினிகளெக்**
**காமிச்ச நைபுண்யவும்**
**நீலக்கார்முகில் வர்ணவும் திருவுடல்க்**
**குள்ளோரு ஸௌரப்யவும்**

**பாலக்காமினிமார் மயங்ஙியதுமென்**
**கண்கொண்டு கண்டாவு ஞான்.**

பீலிக்கார்முடி சாஞ்ஞதும் = மயில்தோகை சொருகிய திருமுடி சற்றே சாய்ந்ததும்; திருமுகம் மெல்லெ வியர்க்குன்னதும் = திருமுகத்தில் மெதுவாக வியர்வைத்துளிகள் அரும்பியதும்; சாலக்கண்மிழிகொண்டு = சலித்துக்கொண்டிருக்கும் (அலைபாயும்விழிகள்) கண்விழிகளால்; காமினிகளெ = கோபிகைகளை; காமிச்ச = மோஹிப்பித்த; நைபுண்யம் = மிடுக்கு; நீலக்கார்முகில்வர்ணவும் = நீலமேகச்யாமள வர்ணமும்; திருவுடல்க்குள்ளோரு ஸௌரப்யவும் = திருவுடலுக்கே உரித்தான நறுமணமும்; பாலக்காமினிமார் மயங்ஙியதும் = பாலிகைகளான கோபியர்கள் மயங்கியதும்; கண்கொண்டு கண்டாவுஞான் = என் கண்களால் பார்க்க இயலவேண்டுமே.

மயில் இறகு அணிந்த பகவானின் திருமுடி சற்றே சாய்ந்திருக்க திருமுக கமலத்தில் வியர்வை அரும்பி நிற்க, அலைபாயும் விழிகள் கோபியர்களைப் பரவசப்படுத்திட நீலமேக சியாமள வர்ணம் பூண்ட கண்ணனின் திருவுடலின் நறுமணத்தில் மதிமயங்கிய ஆயர்குலப் பெண்களையும், என்னால் பார்க்க இயலவேண்டுமே.

**74.* சாலெ கவாடமழகோடு துறன்னுகொண்டு**
**மாலேய பங்கவுமணிஞ்ஞு தெளிஞ்ஞு நன்னாய்**
**கேளீகலாசஸமயே குளுர் தென்னலேற்று**
**நாளீகநேத்ரன் அலஸாக்ஷியுமாயி நின்னான்.**

சாலெ = மெதுவாக; கவாடம் = கதவு; துறன்னு கொண்டு = திறந்துகொண்டு; மாலேயபங்கமணிஞ்ஞு = சந்தனக்காப்பணிந்து; களபம்சார்த்தி; நன்னாய் தெளிஞ்ஞு = கோபிகைகளை நன்றாய் ப்ரீதிப்படுத்தி; கேளீகலாசஸமயே = ராஸக்ரீடைமுடிவடையும் தருணத்தில்; நாளீகநேத்ரன் = தாமரைக்கண்ணன்; அலஸாக்ஷியுமாயி = க்ரீடித்து தளர்ந்த கோபிகையுடன்; குளிர்தென்னலேற்று நின்னான் = யமுனா நதியின் குளிர்தென்றல் ஏற்று நின்றான்.

(* சில பதிப்புகளில் இந்த ச்லோகம் 116ஆவது ச்லோகமாக வரும்.)

அதுவரையில் கோபிகைகளின் க்ருஷ்ணனைச் சேரும் ஆசையென்னும் கதவுகளைப் பூர்ணமாக திறந்து வைத்து, திருவுடல் முழுவதும் களபம் அணிந்தவனாக, ராஸக்ரீடையின் முடிவில்,

தாமரைக்கண்ணன், களாந்த கோபியருடன் யமுனை நதியின் குளிர்காற்று ஏற்று நின்றான்.

75. ஏகதா தேவயாத்ரா விதியிலதிகமா
மம்பிகா கானனத்தில்
பூகுன்னோர் யாதவன்மார் அதிலொரஹிவரன்
நந்தனெச்சென்னு தின்னான்
வேகம் த்ருக்காலுகொண்டே கதியருளியவன்
பண்டு வித்யாதரன் போல்
சோகம் நீக்கீடவண்ணம் மனஸி மதுரிபோ!
மங்களம் தேஹிமஹ்யம்.

ஏகதா = ஒரு பொழுது; தேவயாத்ராவிதியில் = தேவனின் (சிவனின்) ரதோத்ஸவத்தால்; அம்பிகா கானனத்தில் = அம்பிகாவனத்தில்; பூகுன்னோர் = புகுந்தவர்கள்; ஒரு அஹிவரன் = அங்கிரஸ்முனிவரை பரிஹாசம் செய்ததினால் சாபம் ஏற்று ஸர்ப்பமாக மாறியவன்; நந்தனெச்சென்னு தின்னான் = நந்தனை விழுங்கத் துவங்கினான்; வேகம் த்ருக்காலுகொண்டே கதியருளி = வேகமாக திருப்பாதங்களால் அவனுக்கு நற்கதி கொடுத்து; பண்டு வித்யாதரன்போல் = முன்பு போலவே வித்யாதரன் என்னும் அவனது நிஜஸ்வரூபத்தை நல்கி, சோகம் நீக்கிட வண்ணம் = மனதிலுள்ள துயரங்களைப் போக்கும் வகையில்; மங்களம் தேஹிமஹ்யம் = எனக்கு மங்களத்தை அருள்வாயாக.

ஒருமுறை, அம்பிகா வனத்தில் சிவக்ஷேத்திரத்தின் ரதோத்சவ சமயத்தில், அங்கு வசிக்கும் யாதவர்களினூடே, அங்கிரஸ் என்னும் முனிவரைப் பரிகாசம் செய்ததால் சாபமேற்று சர்ப்பமாக ஆனவன் நந்தனை விழுங்கத் துவங்கினான். தனது திருப்பாதங்களால் அவனுக்கு கதிமோட்சம்கொடுத்து, முன்புபோலவே வித்யாதரன் என்னும் அவனது நிஜஸ்வரூபத்தைக் கொடுத்து அனுக்கிரகம் செய்ததுபோல், மதுரிபோ! எனது மனதிலுள்ள தாபங்களையெல்லாம் போக்கி மங்களத்தைக் கொடுப்பாயாக.

76. அங்கனா ஜனத்தெயும் பிடிச்சுகொண்டு மண்டினோரு
சங்கசூடனெப் பிடிச்சவன்டெ மௌலிரத்னவும்

**தங்கலாக்கி மெல்லவே ஹலாயுதன்னு நல்கினோரு**
**பங்கஜாக்ஷா நின் க்ருபக்கு பாத்ரமாக்குகென்னெயும்**

அங்கனா ஜனத்தேயும் = கோபியர்களை; பிடிச்சுகொண்டு = பிடித்துக்கொண்டு; மண்டினோரு = ஓடிச்சென்ற ஒரு; சங்கசூடனைப் பிடிச்சு = சங்கசூடன் என்ற குபேரனின் கிங்கரனைப் பிடித்து; மௌளிரத்னவும் = சிரோபூஷணத்தையும்; தங்கலாக்கி = தன் கையிலாக்கி, ஹலாயுதன்னு நல்கினோரு = பலராமருக்குப் பரிசாக கொடுத்த ஒரு; பங்கஜாக்ஷா = தாமரைக்கண்ணா; நின் க்ருபக்கு = உனது க்ருபைக்கு; பாத்ரமாக்குகென்னெயும் = என்னையும் கூட பாத்திரமாக்க வேண்டுமே.

ஒரு வனத்தில் விளையாடிக் கொண்டிருந்த கோபிகைகளை அபஹரித்த சங்கசூடனைப் பிடித்து, கோபியரை ரட்சித்து, அவனது மௌளிரத் தினத்தைப் பறித்து, பலராமருக்கு நல்கின ஹே தாமரைக்கண்ணா, உனது க்ருபைக்கு என்னையும் கூடப் பாத்திரமாக்க வேண்டுமே.

**77. அரிஷ்டனென்னுள்ளொரு துஷ்டனாலுள்ள**
**அரிஷ்டமன்னாட்டினு தட்டியப்போள்**
**கரிஷ்டனாம் நீ கொல செய்த சேஷம்**
**வரிஷ்டமாயுள்ள பதம் லபிச்சான்.**

அரிஷ்டனென்னுள்ளொரு துஷ்டன் = அரிஷ்டன் என்ற (காளை ரூபத்தில் வந்த கம்சனின் சேவகன்) துஷ்டன்; அரிஷ்டம் = பீடை; அன்னாட்டினு = அந்த வ்ரஜத்திற்கு; தட்டியப்போள் = பாதித்தபோது; கரிஷ்டன் = மிகவும் பாரம் ஏறியவன்; வரிஷ்டமாயுள்ள = ஸ்ரேஷ்டமான வைகுண்டபதம்; லபிச்சான் = கிடைக்கப்பெற்றான்.

அரிஷ்டன் என்னும் காளை ரூபத்தில் வந்த அசுரனால் கோகுலமே பாதிப்படைந்தபோது மிக பலசாலியான நீ அவனை வதம் செய்ததால் மிகவும் உத்தமமான வைகுண்ட பதவியை அவன் அடைந்தான்.

**78. சாலெக்காணாய நீலக்குதிர விருதனாம்**
**கேசி நாசம் வருத்தான்**
**நீலக்கார் வர்ணா! நின்னோடரிசமொடுமுதிர்ன்**
**னொன்னு நேரிட்டு பாஞ்ஞான்**

**பாலக்கை வாயிலாக்கீட்டரிமர நிமிஷம்**
**கொண்டு கொன்னான் த்ரிலோகே**
**மாலாகேத் தீர்ன்னு மாயாவியெ மயசுதனெக்**
**கொன்னதும் கைதொழுன்னேன்.**

சாலெக்காணாய = நேரிடையாக காணக்கூடிய; நீலக்குதிர விருதனாம்கேசி; நீலக் கார்மேகத்துக்குச் சமானமான கேசி என்ற அசுரன் (கம்சனின் கையாள்), நாசம் வருத்தான் = க்ருஷ்ணனுக்கு தீங்கு செய்ய; நின்னோடு அரிசமொடு = உன்மேல் கோபமாக; முதிர்ன்னொன்னு நேரிட்டு பாஞ்ஞான் = கொலை நோக்குடன் நேரில் பாய்ந்தான்; பாலக்கை வாயிலாக்கீட்டரிமரநிமிஷம் = பிஞ்சுக்கைகளை அவன் வாயில் புகுத்தி, அரைநொடியில் கைகளை பெரிதுபடுத்தி; த்ரிலோகே = மூன்று லோகங்களிலும்; மாலாகேத் தீர்ன்னு = ஸங்கடம் தீர்ந்து; மாயாவியெ மயசுதனெ = மயனின் புத்ரனான வ்யோமாசுரனையும்; கொன்னதும் = வதம் செய்ததையும்; கைதொழுன்னேன் = கை வணங்குகின்றேன்.

நீலக்குதிரை வடிவில் வந்த கேசி என்னும் அசுரனை அவன் வாயில் உனது பிஞ்சுகரங்களைப் புகுத்தி அரைநொடியில் கொன்று மூவுலகத்திற்கும் க்ஷேமத்தைச் செய்தும், மயனின் புத்ரன் வ்யோமாசுரன் மாயாவியாக வந்தபோது அவனையும் வதம்செய்த நீலமேகச்யாமள வர்ணனான ஹே க்ருஷ்ணா! உன்னை நான் கரம் கூப்பி வணங்குகின்றேன்.

79. **நாளேக்குநாளே மதுராபுரியின்னு காணாம்**
**நாளீக நேத்ரா தவ மாதுலநிக்ரஹம் மே**
**கேளென்னு நாரதமுனி ஸ்துதிசெய்த நீ தான்**
**பாலிச்சுகொள்க பரமேச்வரா பத்மநாபா!**

நாளேக்குநாளே = நாளை மறுநாள்; மதுராபுரியின்னு காணாம் = மதுராபுரியை சீக்கிரம் பார்க்கலாம்; நாளீக நேத்ரா = தாமரைக்கண்ணா; தவ மாதுலநிக்ரஹம் = உனது மாமனான கம்சனின் வதம்; மே கேளென்னு = எனக்கு பார்க்கலாம்; (செய்தி கேட்கலாம்); நீதான் பாலிச்சுகொள்க = நீதான் ரட்சிக்க வேண்டும்.

கூடியவிரைவில் நீ மதுராபுரி சென்று உனது மாமனாம் கம்சனை வதம் செய்தாய் என்ற விவரம் நாரதமுனி எல்லோரும் கூற கேட்கலாம்.

அப்படிப்பட்ட ஹே பரமேச்வரா! பத்மநாபா! நீதான் என்னை ரட்சிக்க வேண்டும்.

80. **அக்ரூரன் மிக்கதும்மேல் வருவது வழியின்**
**னுள்ளிலோர்த்தோர்த்து வன்னான்**
**வ்யக்ரம் கைவிட்டு த்ருக்கால்ப் பொடியிலவசனாய்**
**ஹந்த! வீணங்நுருண்டான்**
**நில்க்குன்னுபை கறக்குன்னதுமழகொடுகண்**
**டத்புதன்மார் பவான்மார்**
**அக்ரே தானோர்த்ததெல்லா**
**மவசமனுபவிச்**
**சானஹோ பாக்யசாலீ.**

மேல்வருவது மிக்கதும் = இனி வர இருப்பவற்றைப் பற்றி முழுதும்; வழியின்னுள்ளில் = மனதினுள்ளில், ஓர்த்தோர்த்து = நினைந்து நினைந்து; வ்யக்ரம் கைவிட்டு = வியாகுலம் இல்லாமல்; ஹந்த = ஆச்சரியம்; த்ருக்கால்ப்பொடியிலவசனாய் = திருப்பாத தூளியில் அவசனாக; வீணங்நுருண்டான் = விழுந்துபுரண்டான்; அத்புதன்மார் பவான்மார் = அதிஅத்புதவிக்ரஹங்களான நீங்கள் இருவரும் (பலராமனும் க்ருஷ்ணனும்); பைகறக்குன்னதும் = பசுவைகறப்பதையும், அழகொடுகண்டு = அழகாக கண்டு; அக்ரே தானோர்த்ததெல்லாம் = யாத்திரையின் ஆரம்பத்தில் தான் நினைந்து நினைந்து மகிழ்ந்தவற்றையெல்லாம்; அனுபவிச்சானஹோ பாக்யசாலி = பாக்யசாலியான அக்ருரன் நேரில் பார்த்து அனுபவித்தான்.

இனி நடக்க இருக்கின்ற காரியங்கள் ஒவ்வொன்றையும் மனதில் நினைத்து நினைத்து அக்ருரன்தான் வரும் வழியில் கண்ணனின் திருப்பாதங்களில்பட்ட பாததூளியின்மேல், வெட்கத்தைவிட்டு, பரவசனாக, விழுந்து புரண்டு பரவசப்பட்டான். திவ்ய மங்களரூபிகளான நீங்களிருவரும் பசுக்களைக் கறப்பதைப் பார்த்து அத்புதத்துடன், தான் வரும் வழியில் நினைந்து உருகியவற்றையெல்லாம் நேரில் பார்த்து ஆனந்தப்பட்டான்! எவ்வளவு பாக்யசாலி!

81. **அக்ரூரர்க்கொட்டுமிக்ரூரத ருசிரதயல்**
**லென்னு கோபீஜனானாம்**
**ஒக்கேக்கூடும்போழுண்டாய் முறகளுபநிஷல்**
**கீத மெல்லாம் அதத்ரே**
**அக்காளிந்தீ ஜலத்தில் ப்ரணயவிவசனாய்**
**தன்னெயும் சேஷனேயும்**
**பக்தன்னம்போடு காணிச்சத மதுபுரியில்ச்**
**சென்னதும் கைதொழுன்னேன்.**

அக்ரூரர்க்கொட்டுமிக்ரூரத = அக்ரூரன் என்று பேர் வைத்துக்கொண்டு இப்படி க்ரூரதை; ருசிரதயல்லென்னு = யோஜிக்கவில்லையென்று; கோபீஜனானாமொக்கெ = கோபியர்கள் எல்லோரும்; கூடும்போழுண்டாய் = ஒன்றாகக் கூடியபொழுது உண்டானது; முறகள் = முறையீடுகள்; உபநிஷல்கீதமெல்லாமதத்ரே = அவையெல்லாம் உபநிஷத்கீதங்கள்/ஸ்ருதி வசனங்கள் ஆயிற்றாம்; ப்ரணய விவசனாய் = பக்தி பரவசனாக; தன்னெயும் சேஷனேயும் = அனந்தசயனனாக மஹாவிஷ்ணுரூபத்தை, பக்தன்னம்போடு = பக்தனுக்கு அன்புடன்; சென்னதும் = சென்றதும்.

கண்ணனை மதுராவிற்குக் கூட்டிக் கொண்டுபோக வந்த அக்ரூரன் இவ்வளவு க்ரூரனாக இருப்பது சரியில்லையென்று கோபிகைகள் ஒன்றாய்க் கூடி ஒரே த்வனியில் கண்ணனின் பிரிவைத் தாங்காமல் அரற்றுகின்றனர். ஆயினும் அவர்களது சுஸ்வரமான அரற்றல் உபநிஷத வாக்கியமாக ஆகிவிட்டன (கோபிகா கீதம்). பிறகு மதுராபுரி செல்லும் வழியில் காளிந்தீ நதியில் பக்தி பரவசனாக மூழ்கிய அக்ரூரருக்கு தன்னையும் சேஷனையும் பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் அனந்தசயனனான மஹாவிஷ்ணு வாகக் காட்சி அளித்து, பின், மதுராபுரிக்கு யாத்திரை சென்ற காட்சியை பக்தியுடன் கண்டு நான் கைதொழுகின்றேன்.

82. **வஸ்த்ரங்ஙள் கன்மஷமலக்கியலக்கி நல்கும்**
**ஸல்கர்மமாண்ட ரஜகன்னு நிமேஷமாத்ரம்**
**த்ருக்கய்யுகொண்டடி கொடுத்தவனுள்ள பாபம்**
**சிக்கென்னு போக்கியெழுன்னள்ளியதும் தொழுன்னேன்**

கன்மஷம் = மலினமானது; அலக்கியலக்கி நல்கும் = துவைத்துத் துவைத்து வெண்மையாக்கிக் கொடுக்கும்; ஸல்கர்மமாண்ட ரஜகன்னு =

பாபங்கள் தீர்ந்து புண்யம் சம்பாதித்த /ரஜகன்னு = வண்ணானுக்கு, நிமேஷமாத்ரம் = நொடிப்பொழுதில்; த்ருக்கய்யுகொண்டடிகொடுத்து = திருக்கரங்களால் ஓர் அடி அடித்து; சிக்கென்னு போக்கி = ஜடுதியில் போக்கி; எழுன்னள்ளியதும் = எழுந்தருளியதும்.

மதுராபுரி ப்ரவேச வேளையில் கண்ணன் ஒரு வண்ணானிடம் துணிகள் கேட்டானென்றும் அவன் கொடுக்க மறுத்துப் பேசியபோது, மற்றவர்களின் மலின வஸ்திரங்களை வெளுத்து கொடுத்து பாபகர்மங்கள் தொலைந்து புண்யவானான அவனுக்கு மோக்ஷத்தைக் கொடுத்து எழுந்தருளிய பகவானைக் கைதொழுகின்றேன்.

**83. சங்ஙாதிமார் பலருமாயொருமிச்சு நல்லோ**
**ரங்ஙாடி புக்கு தெருவூடெ நடக்குமப்போள்**
**மங்ஙாதெ வஸ்த்ரகுசுமாதிகளங்ஙுமிங்ஙும்**
**ஸம்மானமாண்ட பகவானித கைதொழுன்னேன்.**

சங்ஙாதிமார் = ஸகாக்கள்; பலருமாயொருமிச்சு = பலரும் ஒன்றாக; அங்ஙாடி = கடைத்தெரு (சந்தை) புக்கு = சென்று; தெருவூடெ நடக்குமப்போள் = தெருவில் நடந்துபோகும்போது; மங்ஙாதே = குறைவில்லாமல்; வஸ்த்ரகுசுமாதிகள் = வஸ்த்ரம் பூக்கள் ஆகியவை; அங்ஙுமிங்ஙும் = அங்குமிங்கும்; ஸம்மானமாண்ட = பரிசாகப்பெற்ற.

தனது சகாக்கள் / நண்பர்கள் பலருடனும் ஒன்று சேர்ந்து மதுராபுரியின் கடைவீதிகளில் வலம்வரும்போது அங்குள்ள ஸஜ்ஜனங்கள் பலரும் கண்ணனுக்கு திவ்யமான வஸ்த்ரங்கள், மலர்கள் ஆகியவற்றைப் பரிசாக தந்தார்கள். அவற்றைப் ப்ரியமுடன் ஏற்றுக்கொண்ட பகவானை நான் கைதொழுகின்றேன்.

**84. அங்கம் கூன்னோரு தாஸீமலிவொடவள்கொடுத்**
**தங்கராக ப்ரஸாதா**
**லங்கம் நேராக்கியப்போளவளுமழகுகண்**
**டங்கஜப்ராந்தி பூண்டாள்**
**மங்ஙாதே மன்மதக்கூத்தினு புரமொருநா**
**ளங்ஙு சென்னிட்டனேகம்**

**மங்கல்யம் கைவளர்த்தீடின புவனபதே!**
**க்ருஷ்ண! துப்யம் நமோஸ்து**

அங்கம் கூன்னோரு தாஸீம் = அங்கத்தில் வைகல்யமுள்ள (கூன்முதுகுடைய) தாஸியான குப்ஜையை அலிவொடு = அன்போடு; அங்காகப்ரஸாதால் = சுகந்த திரவியங்களால் சந்தோஷித்து; அழகு கண்டு = அழகாக ஆனவள்; அங்கஜப்ராந்தி = காமமோஹம் பூண்டாள்; மங்காதே = மடியாமல்; மன்மதக்கூத்தினு = காமக்ரீடைக்கு; புரமொரு நாளங்ஙு சென்னிட்டனேகம் = ஒருதினம் அவளது வீட்டிற்குச் சென்று அனவதி: மங்கல்யம் கைவளர்த்தீடின = ஸௌபாக்கியங்களை அருளின; க்ருஷ்ண துப்யம் நமோஸ்து; க்ருஷ்ணா உனக்கு நமஸ்காரம்.

கூன் முதுகுடைய குப்ஜா என்ற பெண் ப்ரேமையுடன் கொடுத்த சுகந்த திரவியங்களைப் பெற்றுக் கொண்டு அவளுக்கு நல்ல ரூபஸௌந்தர்யத்தை வழங்கி அனுக்ரஹம் செய்தான் கண்ணன். அவளது இச்சைப்படி அவளது இல்லம் சென்று அவளுக்கு அனேகம் மங்களங்களை அருளிய ஹே புவனபதே! க்ருஷ்ணா! உனக்கு நமஸ்காரம்.

**85. யாஜிச்சவர்க்கவரவர்க்கு ஸமஸ்தபாபம்**
**மோசிச்சு தல்க்ஷணமதே பறயேண்டதுள்ளு**
**பூஜிச்சுவெச்ச குலவில்லுமொடிச்சுமெல்லே**
**மோதிச்சு போன்னு மருவீடினதும் தொழுன்னேன்.**

யாஜிச்சவர் = யாசித்தவர்; அவரவர்க்கு = ஒவ்வொருவருக்கும் ஸமஸ்தபாபம் = அனைத்து பாபங்களையும்; மோசிச்சு தல்க்ஷணமதே = அந்தக்ஷணமே மோசனம் செய்து; பறயேண்டதுள்ளு = என்று தான் சொல்ல வேண்டும் (வேறு என்ன சொல்ல); பூஜிச்சு வெச்ச குலவில்லுமொடிச்சு மெல்லெ = பூஜித்து வைத்திருந்த நாண் ஏற்றின வில்லை மெதுவாக, உடைத்து (ஒடித்து); மெல்லெ மருவீடின மோதிச்சு போன்னு = ஒன்றும் நடக்காதது போல் மெதுவாக ஸகாக்களுடன் பேசிக்கொண்டு; தொழுன்னேன் = தொழுகின்றேன்.

கண்ணன் நடந்து வருகின்ற பாதையின் இருபுறம் கூடியிருந்த ஜனங்கள் அனைவரையும் அவரவர் பாபங்களிலிருந்து விடுவித்துக் கொடுத்து, நொடிப்பொழுதில் அவர்களைப் பாபரஹிதர்களாக ஆக்கினாய் என்று தான் சொல்லவேண்டும். பிறகு கம்சன் தனுர்யாகத்திற்காக பூஜையில்

வைத்திருந்த நாண் ஏற்றிய வில்லை உடைத்து, ஒன்றுமே நடவாதது போன்ற பாவனையுடன் தனது தோழர்களுடன் உரையாடிக் கொண்டு மெதுவாக நடக்கும் கண்ணனை நான் கை தொழுகின்றேன்.

**86. சொல்லேறும் கொலகொம்பனாம் குவலயா**
**பீடத்தோடெத்துன்னதும்**
**மல்லன்மாரொடு நேரிடுன்னதுமுடன்**
**கைவல்யமேகுன்னதும்**
**அல்லே மாதுலனெப் பிடிச்சு ஸஹஸா**
**கைகொண்டு கொல்லுன்னதும்**
**கல்யாணம் ஜனனிக்கு நல்கியதுமென்**
**கோவிந்தா! கைகூப்பினேன்.**

சொல்லேறும் = ப்ரஸித்தமான; கொலகொம்பனாம் = கொலைக்கொம்பன் ஆன; குவலயாபீடத்தோடெத்துன்னதும் = குவலயாபீடம் என்ற யானையின் அருகில் எத்திச்சேருவதும்; மல்லன்மாரோடு = மல்யுத்தக்காரர்களுடன்; நேரிடுன்னதுமுடன் = யுத்தம் செய்து உடனடியாக; கைவல்யமேகுன்னதும் = அவர்கட்கு கைவல்யத்தைக் கொடுப்பதும்; மாதுலனெப்பிடிச்சு = மாமனைப்பிடித்து; ஸஹஸா = சட்டென்று; கைகொண்டு கொல்லுன்னதும் = கைகளால் வதம் செய்வதும்; கல்யாணம் ஜனனிக்கு நல்கியதும் = தாய்க்கு க்ஷேமத்தைக் கொடுத்ததும்; கைகூப்பினேன் = இருகை கூப்பி தொழுகின்றேன்.

குவலயாபீடம் என்ற கொலையானையை நெருங்குவதும் மல்யுத்தக்காரர்களுடன் நேருக்கு நேர்மோதி சட்டென்று வதம் செய்து மோக்ஷம் கொடுப்பதும், தன் மாமனான கம்சனைச் சடுதியில் தன் கரங்களால் கொலை செய்வதும், பின்பு தனது தாய்க்கு க்ஷேமத்தை நல்கி ஆனந்தமடையச்செய்வதுமான வினையாற்றிய ஹே கோவிந்தா உன்னை நான் கை தொழுகின்றேன்.

**87. மானிக்கும்போள் மனஸ்சும் மடியுமதிசயம்**
**கொண்டு வர்ணிக்குமப்போள்**
**வாணிக்கும் போயடுத்தீடருது பத ஜகன்**
**மோஹனம் தே மஹத்வம்**

**ஆனக்கொம்பும் தரிச்சிட்டேட்டனும் அனுஜனுமாய்ச்**
**சென்னதும் ரங்கதேசே**
**த்யானிக்கும்போள் உதிச்சீடுக மனஸி ஸதா**
**வாசுதேவ ப்ரஸீத!**

மானிக்கும்போள் = சிந்தை செய்யும் பொழுது; மனஸ்சும் மடியும் = மனதும் புத்தியும் சோம்பல் அடையும் (தயங்கும் என்றும் அர்த்தம்); அதிசயம்கொண்டு = ஆச்சரியத்துடன்; வாணிக்கும் போயடுத்தீடருது – கலைவாணிக்குக்கூட கிட்டெப்போக இயலாமல்; பத = சொல்ல; ஜகன்மோஹனம் தே மஹத்வம் = அகில உலகங்களையும் மோஹிப்பிக்கின்ற உனது மஹத்துவம்; ஆனக்கொம்பும் தரிச்சு = யானைதந்தத்தையும் தரித்துக்கொண்டு; ஏட்டனும் அனுஜனுமாய் = அண்ணனும் தம்பியுமாக; சென்னதும் ரங்கதேசே = ரங்கப்ரவேசம் செய்ததும்; த்யானிக்கும் போளுதிச்சீடுக = தியானம் செய்யும்போது உதிக்கவேண்டுமே; மனஸி ஸதா = மனதில் எப்போதும்.

உன்னைக் குறித்து சிந்தனை செய்யும்போது மனம் உனது அத்புதங்களை வர்ணிக்க இயலாமல் தடுமாறும், கலைவாணியோ உனது ஜகன் மோஹனமான ரூபலாவண்யத்தைப் பற்றி முழுதும் கூற முடியாமல் இருக்கின்றாள். அப்பேர்ப்பட்ட ஹே வாசுதேவா! குவலயாபீடம் என்ற யானையின் தந்தங்களைக் கைகளில் தரித்துக் கொண்டிருக்கின்ற அண்ணனும் தம்பியுமான உங்களது திருவுருவம் நான் தியானிக்கும் பொழுதெல்லாம் என் மனதில் உதிக்க வேண்டுமே.

88. **தானே தன்னெயொரோன்னு கண்டு ஜனகன்**
**னம்மக்குமுண்டாய் விபோ!**
**கண்ணன் கேவலனென்னு தத்ர பிதரௌ**
**பக்த்யா புகழ்த்தீடினார்**
**ஸௌந்தர்யாதிகள் வாஸபூமி திருமை**
**போராஞ்ஞுழன்னீடுமக்**
**கண்ணன் கார்முகில் வர்ணனே! மனஸி**
**போன்னாவிர்பவிக்கேணமே.**

*தானே தன்னே* = நேரிடையாக; ஓரோன்னு தத்ர கண்டு = ராமக்ருஷ்ணன் மாரின் பராக்ரமம் கண்டு; கண்ணன் கேவலன் என்னு = கண்ணன் ஸர்வவ்யாபியான ஈச்வரன்தான் என்று; ஜனகன் = பிதா; பிதரௌ =

பிதாவால்; பக்த்யா புகழ்த்தீடினார் = பக்தியுடன் துதித்தனர்; திருமை = திருமெய்; போராஞ்ஞு = போதவில்லையோ என்று தோன்றும் விதமாக; ஸௌந்தர்யாதிகள் வாஸபூமி உழன்னீடும் = ஸௌந்தர்யம், வஸ்த்ரம், வசிக்கும் பூமி என்பவையால் அனுக்ரஹிக்கும்; மனஸி = மனதில்; போன்னு = வந்து; ஆவிர்பவிக்கேணமே = பிரத்யக்ஷமாகவேண்டுமே.

ராமக்ருஷ்ணன்மார்களின் வீர பராக்ரமங்கள் ஒவ்வொன்றையும் நேரில் கண்ட தேவகிக்கும் வசுதேவருக்கும் கண்ணன் சாக்ஷாத் ஸர்வேச்வரன்தான் என்று தெளிந்ததால் அவர்கள் துதி செய்தார்கள். கண்ணனின் ஸான்னித்தியத்தாலேயே மதுராபுரி பூர்ணமாக ஆயிருப்பினும் அது போதாது என்று தோன்றியதாலோ என்னவோ மேலும் மேலும் ஸௌந்தர்யாதிகள், வஸ்த்ரங்கள், வாஸபூமி ஆகியவற்றை அனுக்ரஹம் செய்கின்ற கண்ணா, கார்முகில் வண்ணா! எனது மனதில் ப்ரத்யகஷமாகத் தெரிய வேண்டுமே.

**89. வைகுன்னேரம் குருஸ்த்ரீஜன வசனமுபா**
**கர்ண்ய தானும் குசேலன்**
**மாழ்காதே பாக்யவானங்ஙவரிருவருமாய்**
**இந்தனத்தின்னு போயார்**
**பெய்யும் பேமாரியெல்லாம் முடியில் விறகுமா**
**யேற்று கைய்யும் பிடிச்சிட்**
**டய்யோ கஷ்டம்! ப்ரபாதத்தோளமடவியிலே**
**நின்னதும் கைதொழுன்னேன்.**

வைகுன்னேரம் = மாலைவேளையில்; குருஸ்த்ரீ = குருபத்னி; வசனமுபாகர்ண்ய = நிர்தேசம் அனுசரித்து; மாழ்காதே = சோம்பலில்லாமல்; இந்தனத்தின்னு போயார் = விறகு சேகரிக்கப் போனார்கள்; முடியில் = சிரஸ்ஸில்; பெய்யும் பேமாரியெல்லாமேற்று = பேய்மழை பெய்தபோது அவற்றையெல்லாம் சிரஸ்ஸில் ஏற்று; ப்ரபாதத்தோளம் = பொழுது புலரும் வரையில், அடவியில் நின்னதும் = காட்டிலேயே நின்றதை; கைதொழுன்னேன் = கைவணங்குகின்றேன்.

ஒரு ஸாயம்ஸந்த்யா வேளையில் குரு ஸாந்தீபனியின் மனைவி யின் ஆக்ஞைக்கேற்ப விறகு சேகரிக்க, கண்ணனும் பாக்யவானான குசேலனும் (பிற்காலத்தில் குசேலருக்குக் கிடைக்கப்போகின்ற பாக்கியத்தை

உத்தேசித்து பாக்யவான் என்று பதப்ரயோகம்) காட்டிற்குச் சென்றார்கள். அப்போது கொட்டும் பேய்மழையில் முழுக்க நனைந்து இருவருமாக கைகோர்த்துக் கொண்டு வனத்திலேயே இரவு முழுவதும் தங்கி கஷ்டப்பட்டதை நினைத்துக் கைதொழுகின்றேன்.

90. **மும்பேதான் குருதக்ஷிணக்கு குருவோடன்**
**வேஷணம் செய்தபோதம்**
**போதெள ஸஹஸா மரிச்ச மகனேக்**
**காண்மான் கொதிச்சீடினான்**
**காம்பீர்யத்தொடு பாஞ்சஜன்யநிநதம்**
**கேட்டந்தகன் ஸம்ப்ரமிச்சம்**
**போடேகின பாலனே குருவினாய்க்**
**காணிச்ச நீ பாஹி மாம்.**

மும்பே = அத்யயனம் பூர்த்தியாகி குருகுலத்திலிருந்து விடை பெறும் முன்பாக; அன்வேஷணம் செய்தபோது = குருதக்ஷிணையாக என்ன தரவேண்டும் என்று கேட்டபோது; அம்போதௌ = ஸமுத்திரத்தில்; ஸஹஸா = உடனே; மரிச்ச மகனைக்காண்மான் = இறந்த மகனைக்காண; கொதிச்சீடினான் = ஆவல் கொண்டார்; காம்பீர்யத்தோடு = கம்பீரமாக; பாஞ்சஜன்யநினதம் = பாஞ்சஜன்யம் என்ற சங்கத்தின் ஒலி; கேட்டந்தகன் = அந்தகன் (காலன்) கேட்டுவிட்டு; ஸம்ப்ரமிச்சம்போடேகினான் = அலறியடித்துக் கொண்டு மிகுந்த பக்தியுடன் கொடுத்தான்; காணிச்ச = காண்பித்த; பாஹிமாம் = என்னை ரட்சிக்க வேண்டும்.

அத்யயன பூர்த்தியில் குருதக்ஷிணையாக என்ன வேண்டும் என்று ஸாந்தீபனி முனிவரிடம் கண்ணன் கேட்க, ஸமுத்திரத்தில் வீழ்ந்து இறந்து போன தன் மகனைக்காண வேண்டும் என்று அவர் கூற, உடனேயே பாலனை விழுங்கியது பஞ்சஜனன் என்ற சங்குருபியான அசுரன் என்பதையறிந்து அவனை வதம் செய்து பாஞ்சஜன்யம் என்ற சங்கினை எடுத்து கம்பீரமாக பகவான் த்வனி எழுப்ப, அதைக் கேட்ட காலன் (யமன்) அலறியடித்துக்கொண்டு பாலகனை கண்ணனிடம் கொடுக்க, அவனைக் குருவிடத்தில் ஸமர்ப்பித்த ஹே பகவானே! நீ என்னைக் காப்பாற்ற வேண்டுமே.

91. **ஏகாந்தே ஸம்சயம் மே தவ பதகமலம்**
**கொண்டு பூலோகமிப்போள்**

**வைகுண்டம் தானிதென்னாயதுபொழுது மஹா**
**லோகர் வைகுண்ட வாஸின்!**
**வைகுண்டம் நோக்கி வாழுன்னவரவனிதலம்**
**தன்னெ வந்திக்கும்போள்**
**கைகூப்பேண்டுன்னதெனிக்கோ முரமதன விபோ!**
**ஹந்த! ஸாந்தீபனிக்கோ?**

ஏகாந்தே = ரஹஸ்யமாக; மே ஸம்சயம் – எனக்கொரு ஸந்தேகம்; தவபதகமலம் கொண்டு = உன்னுடைய சரணாரவிந்தஸ்பர்சம் கொண்டு; பூலோகமிப்போள் வைகுண்டம்தான் இதென்னாயது பொழுது = பூவுலகமே இப்போது வைகுண்டமாக மாறியிருக்கும் வேளையில்; வைகுண்டம் நோக்கி வாழுன்னவர் = வைகுண்டத்தைப் பார்த்து வாழும் தேவலோகத்தவர்; அவனிதலம் = மனுஷ்யலோகம்; முரமதனவிபோ = முரன் என்ற அசுரனை வதைத்த ஹே ப்ரபோ; ஹந்த = ஆச்சரியம்; கைகூப்பேண்டுன்னதெனிக்கோ = கைகூப்பவேண்டியது எனக்கா (என்னையா?)

ஹே முரமதனவிபோ! எனக்கு இப்போது ரகசியமாக ஒரு சந்தேகம் வருகின்றது. உன்னுடைய திருப்பாதங்கள் பட்டதன் மூலமாக இந்த பூவுலகமே வைகுண்டதுல்யமாக ஆகியிருப்பதாலும், வானோர்கள் எல்லோருமே இந்த மானுஷ உலகத்தை வைகுண்டமாகப் போற்று வதாலும் இந்த நானும் உனது குருஸ்ரேஷ்டரான ஸாந்தீபனிமுனியும் ஒன்றுபோல் வைகுண்டவாஸிகளாக ஆகியிருப்பதால் வணங்கப்பட வேண்டியவர் நானா அல்லது ஸாந்தீபனி முனிவரா என்று என் மனதில் சந்தேகம் எழுகின்றது.

**92. ப்ரீத்யா காந்தன் நியோகிச்சழல் களவதி**
**னாயுத்தவர் வன்னதிப்போள்**
**அத்யாவேகால் வியோகத்துயிர்கள் மதுகரத்**
**தோடசேஷம் பறஞ்ஞார்**
**தத்வம் சித்தே தரிச்சப்பொழுது விரஹஜம்**
**துக்கமெல்லாம் த்யஜிப்பானெத்**
**திடும் பக்தி கண்டுத்தவருமவிடெயக்**
**கோபிகள்க்காய் நமிச்சான்.**

ப்ரீத்யா = அன்புடன்; காந்தன் = நாதன் (கண்ணன்); அழல் களவதினாய் நியோகிச்ச = விரஹதுக்கம் அகற்ற அனுப்பிவைக்கப்பட்ட; அதியவேகால் = மிகவும் ஸாவதானமாக (மெதுவாக); வியோகத்துயிர்கள் = விரஹதாபங்கள்; மதுகரத்தோடு =வண்டுடன் (ஸ்ரீக்ருஷ்ணன் என்ற பாவத்தில் - ப்ரமரகீதம்); அசேஷம் பறஞ்ஞார் = முழுவதும் சொன்னார்கள்; சித்தே = மனதில்; தரிச்சப்பொழுது = தரித்தபொழுது; விரஹஜம் துக்கமெல்லாம் த்யஜிப்பான் = விரஹதாபங்களெல்லாம் அகல; எந்நீடும் பக்தி கண்டு = அவர்களது நிர்மலமான பக்தியைப்பார்த்து; கோபிகள்க்காய் நமிச்சான் = கோபியர்களை நமஸ்கரித்தார்.

தங்கள் காந்தனான ஸ்ரீக்ருஷ்ணனால் அனுப்பப்பட்ட உத்தவர் வந்தபோது கோபியர்கள் தங்களது விரஹதாபத்தை வண்டுடன் சொல்லிக் கொண்டிருந்தனர். உத்தவர் சொன்ன தத்துவங்களைக் கேட்ட அவர்கள் விரஹ துக்கத்தையெல்லாம் மறந்தனர். அவர்களின் நிஷ்களங்கமான பக்தியைப் பார்த்த உத்தவர் அவர்களைப் பக்தியுடன் நமஸ்கரித்தார்.

93. **அக்ரூரனெக் கொண்டத ஹஸ்திபுர்யாம்**
**அக்ரூர துர்யோதன வ்ருத்த மெல்லாம்**
**அக்ரூரராம் பாண்டவர் வ்ருத்தவும் தான்**
**அக்ரே தரிக்கும் ஹரயே நமோஸ்து!**

அக்ரூரனெக்கொண்டு = பிறகு அக்ரூரரை அனுப்பிவைத்து; ஹஸ்திபுர்யாம் = ஹஸ்தினாபுரியில்; அக்ரூர துர்யோன வ்ருத்தமெல்லாம் = அந்த க்ரூரனாம் துர்யோதனன் விருத்தாந்தமெல்லாம்; அக்ரூரராம் பாண்டவர் வ்ருத்தவும் = க்ரூரமற்ற (சாதுக்களான) பாண்டவர்களின் நிலைமையும்; தானக்ரே தரிக்கும் = முன்கூட்டியே விசாரித்து அறிந்து வைத்துக் கொள்ளும்; ஹரயே = ஸகல பாபங்களையும் ஹரிக்கும் பகவானே! நமோஸ்து = நமஸ்காரம் பவிக்கட்டும்.

பிறகு, அக்ரூரரை ஹஸ்தினாபுரி அனுப்பிவைத்து க்ரூரனான துர்யோதனனின் விருத்தாந்தம், ஸாதுக்களான பாண்டவர்கள் விருத்தாந்தம் ஆகியவற்றை முன்கூட்டியே தெரிந்து வைத்துக்கொண்டு விளங்குகின்ற ஹரயே உனக்கு நமஸ்காரம் உரித்தாகுக.

94. **முஷ்டிகேறும் யவனன்டெ மும்பில் முசுகுந்**
**தன் தன்னெயோர்த்திட்டுடன்**

**வெக்கம் பார்த்தத மாகதன் வரவிலும்**
**வேகம் நடிச்சீடினான்**
**துர்கம் தீர்த்தத ரேவதீரமணனோ**
**டொன்னிச்சு மேவும் விபோ!**
**த்ருக்கால் கண்டு நமஸ்கரிப்பதினொரிக்**
**காலே வரிச்சீடினேன்.**

முஷ்க் = தன்னை மிஞ்ச எவருமில்லை என்ற கர்வம்; வெக்கம் = வேகம்; ஓர்த்திட்டேன் = நினைவில்கொண்டு உடனடியாக; மாகதன் வரவிலும் = ஜராஸந்தன் வரவிலும்; வேகம் நடிச்சீடினான் = ஜராஸந்தன் வரும் வேகத்தைப் பார்த்து நடித்தான்; துர்கம் தீர்த்தத = கோட்டை பணிசெய்து; ரேவதீரமணனோடொன்னிச்சு = பலராமருடன் இணைந்து; த்ருக்கால் கண்டு = திருப்பாதங்களைக் கண்டு; நமஸ்கரிப்பதின்னொரிக் காலே = ஒருமுறையேனும் நமஸ்காரம் செய்வதற்கு; வரிச்சீடினேன் = என்முன்பாக பார்க்க வரம் கோருகின்றேன்.

கர்விஷ்டனான யவனனின் முன்பாக, முசுகுந்தனை மனதில் நினைத்து, மகதராஜனாம் ஜராஸந்தனின் படையின் வேகத்தைக் கருத்தில் கொண்டு; அவர்கள் மத்தியில் கபடநாடகம் நடித்து, பிறகு த்வாரகையில் கோட்டை நிர்மாணித்து பலராமருடன் வசிக்கும் ஹே விபோ! உன்னுடைய திருப்பாதங்களைக் கண்டு தொழுவதற்கு ஒரு முறையேனும் வழி ஏற்பட வரம் கோருகின்றேன்.

95. **வேளிக்குதன்னெ சிசுபாலனொருங்ஙி வன்னான்**
**நாளீகநேத்ரனுமடுத்தெழுன்னள்ளி நின்னான்**
**கோலாஹலத்தோடகஜாபுரியின்னு போம்போள்**
**ஆலோலநேத்ர கருடத்வஜனோடணஞ்ஞாள்.**

வேளிக்குதன்னே = விவாஹத்திற்காக; சிசுபாலனொருங்ஙி வன்னான் = சேதிராஜாவான சிசுபாலன் தயாராக வந்தான்; நாளீகநேத்ரன் = தாமரைக்கண்ணன்; அடுத்து = அருகில் (தேவியின் கோயிலருகில்); எழுன்னள்ளி = எழுந்தருளி; நின்னான் = நின்றான்; கோலாஹலத்தோடு = ஆடம்பரமாக; அகஜாபுரியின்னு = பார்வதீ க்ஷேத்திரத்திலிருந்து; போம்போள் = தர்சனம் முடிந்து திரும்பும்போது; ஆலோலநேத்ர = க்ருஷ்ணனைத் தேடி அங்குமிங்குமாக சலிக்கும் கண்களையுடையவள்

(ருக்மிணி); கருடத்வஜனோடு = கருடனை கொடியில் அடையாளமாக உடையவனை (ஸ்ரீக்ருஷ்ணனை); அணஞ்ஞாள் = சேர்ந்தாள்.

ருக்மிணியின் கரம் பிடிக்க மோஹித்த சிசுபாலன் தயாராக வந்தான். அப்போது தாமரைக்கண்ணனாம் பகவான் ஸ்ரீக்ருஷ்ணரும் தேவீக்ஷேத்ரத்தின் அருகில் எழுந்தருளினார். தனது பந்துக்கள், தோழிகள், ஸேனைகள், மிருதங்க, சங்க, பணவ, தூர்ய, பேரீநாதம் ஆகியவற்றுடன் கோலாஹலமாக, மணப்பெண்ணான ருக்மிணி, தேவி உபாசனையை முடித்துக் கொண்டு பார்வதீ க்ஷேத்திரத்திலிருந்து திரும்புபோது, தனது சலிக்கும் (அசையும்) கடைக்கண்களால் அங்குமிங்கும் க்ருஷ்ணனைத் தேடி, கருடனைக் கொடியில் வைத்திருக்கும் பகவானோடு இணைந்தாள்.

**96. ஸம்மோதம் பூண்டு வேள்ப்பானபிருசிபெருத**
**ஸத்யபாமக்கலென்னோ**
**காண்மானோ ஜாம்பவானெ ப்ரணயநிதியெ நீ**
**துர்யசஸ்ஸொன்னு தீர்த்து**
**கண்மாயத்தெப்புகழ்த்தீடருது தவ பர**
**ப்ரம்மமே மந்தமந்தம்**
**பெண்மாணிக்கங்ஙளெண்மர்க்குமொரனுபவமாய்த்**
**தீர்ன்ன நின்னெத் தொழுன்னேன்.**

ஸம்மோதம் பூண்டு = பெரிய ஸந்தோஷத்துடன்; வேள்ப்பான் = விவாஹம் செய்ய; அபிருசி = தாத்பர்யம் (ஆசை); காண்மானோ = காண்பதற்கோ; ப்ரணயநிதியெ = பக்தியின் இருப்பிடமான; துர்யசஸ்ஸொன்னு தீர்த்து = தானாகவே ஒரு துஷ்கீர்த்தியானதை (ஸ்யமந்தகமணியைத் திருடினவன் என்ற பொல்லாப் பெயரை) தீர்த்து வைத்து; கண்மாயம் = இந்திர ஜாலம்; புகழ்ந்தீடருது = வர்ணித்தல் அசாத்தியம்; மந்தம் மந்தம் = க்ரமேண; பெண்மாணிக்கங்ஙளெண்பர்க்கும் = பெண்மாணிக்கங்களான எட்டு பேர்களுக்கும்; ஓரனுபவமாய்த் தீர்ன்ன = ஒரே வல்லபனாக துல்யானுபவத்தைக் கொடுத்த

ஸத்யபாமாவை விவாஹம் செய்ய ஆசைப்பட்டோ அல்லது பக்தோத்தமனான ஜாம்பவானைச் சந்தித்து ஸ்யமந்தகமணி விஷயமாக ஏற்பட்ட துஷ்கீர்த்தியை நீக்கவோ அல்லது உன்மேல் ப்ரேமை நிரம்பிய

ஜாம்பவதியை மணம்புரிய விரும்பியோ நீ செய்த மாயா ஜாலங்களை ஹே பரப்ரஹ்மமே! யாரால் விவரிக்க இயலும்? க்ருஷ்ணபத்னிமாரான எட்டுபேருக்கும் (ருக்மிணி, ஸத்யபாமா, ஜாம்பவதி, காளிந்தி, மித்ரவிந்தா, ஸத்யா, பத்ரா, லக்ஷ்ணா ஆகியோர்) ஒரே விதமான அனுபூதியைக் கொடுத்த பரப்ரஹ்மமே! உன்னைக் கைதொழுகின்றேன்.

**97. மைக்கண்ணிமார்கள் பதினாறு ஸஹஸ்ரமொன்**
**னிச்சுல்க்கண்டயா ததனு பௌமக்ருஹே லபிச்சான்**
**அக்கௌசலங்ஙளறியாஞ்ஞு முனீந்த்ரனும் போய்**
**சக்ரம் திரிஞ்ஞு பவனங்ஙளிலென்னு கேள்ப்பூ.**

மைக்கண்ணிமார் = கண்களில் மை எழுதியவர் (சுந்தரிகள்); பதினாறு ஸஹஸ்ரமொன்னிச்சு = பதினாறாயிரம் பேர் ஒன்றாக; உல்க்கண்டயா = எதிர்பார்ப்புடன்; பௌமக்ருஹே = பௌமன் (பூமிசுதன் – நரகாசுரன்) க்ருஹத்தில்; லபிச்சான் = (மனைவிகளாக) கிடைக்கப் பெற்றவனாக; அக்கௌசலங்ஙள் – அந்த சாமர்த்தியங்கள்; அறியாஞ்ஞு = அறியாமல்; முனீந்த்ரன் = நாரதமுனி; பவனங்ஙளில்ப் போய் சக்ரம் திரிஞ்ஞு = அவரவரது க்ருஹங்களில்ப் போய் பார்த்து அத்புதப்பட்டார்; என்னு கேள்ப்பூ = என்று கேட்டிருக்கின்றேன்.

அதன்பிறகு, நரகாசுரன் அடைத்து வைத்திருந்த பதினாறாயிரம் சுந்தரிமாரையும் திருமணம் செய்து கொண்டு க்ருஹஸ்தாஸ்ரமத்தில் இருக்கும் வேளையில் உன்னுடைய ஸாமர்த்தியங்களை அறியாத நாரதமுனி ஒவ்வொரு க்ருஹமாகச் சென்று பார்த்து மிகவும் ஆச்சரியப்பட்டார் என்று கேட்டுள்ளேன்.

**98. எண்ணாயிரம் நேரெயிரட்டி நல்லார்**
**நன்னாயிருன்னோரு விபூதிகண்டால்**
**கண்ணாயிரம் பூண்டவனும் கொதிக்கும்**
**பெண்ணாயிருன்னாவிது பத்மநாபா?**

எண்ணாயிரம் = எட்டாயிரம்; நேரெயிரட்டி = நேரெ இரட்டிப்பாக (அதாவது பதினாறாயிரம்); நல்லார் = ஸ்ரீக்ருஷ்ணபத்னிமார்; நன்னாயிருன்னோரு விபூதி கண்டார் = நன்றாக ஸௌபாக்யத்துடன்

வாழ்வதைப் பார்த்த. கண்ணாயிரம்பூண்வடன் = ஆயிரம் கண்களுடைய இந்திரன். கொதிக்கும் = பொறாமைப்படும்; பெண்ணாயிருன்னாவிது = நானும் பெண்ணாக இருந்திருந்தால் என்று.

உனது பத்னிமார்கள் பதினாறாயிரம் பேரும் பரம ஸௌக்கியமாக வாழ்வதைப்பார்த்த தேவேந்திரன் கூட அவர்களைப்போல் நானும் ஒரு பெண்ணாக இருந்திருக்க கூடாதா என்று ஏங்கினான் / பொறாமைப்பட்டான் ஹே பத்மநாபா!

**99. த்வார்வத்யாம் பவனேஷு தேஷு பதினாறா**
**மாயிரம் மூர்த்தியாய்**
**ஸ்ரீபர்த்தாவினெ நின்னெ நிர்மலகுணான்**
**வெவ்வேறே கைகூப்பினேன்**
**ஸாபத்ன்யம் தடவும் மஹேந்த்ரனெயுடன்**
**ஜித்வா ஹறிச்சங்ஙஹோ**
**ஸாமர்த்யத்தொடு ஸத்யபாமயுடனேப்**
**பூங்காவு கல்பத்ருமம்.**

த்வார்வத்யாம் = த்வாரகையிலுள்ள; தேஷுபவனேஷு = உனது பவனங்களில்; பதினாறாமாயிரம் மூர்த்தியாய் = பதினாறாயிரம் மூர்த்தி பேதங்களுடன்;ஸ்ரீபர்த்தாவினெ = ஸ்ரீ (மஹாலக்ஷ்மியின்)யின் நாதனான; நின்னெ = உன்னை; நிர்மலகுணான் = ஸாத்வீக குணங்களுடைய நிஸ்ஸங்கனான: வெவ்வேறே = தனித்தனியாக; ஸாபத்ன்யம் = சத்ருதை; (எதிராளியாக நினைத்தல்) ஜித்வாஹறிச்சு = எதிர்த்துப் போராடி; மஹேந்திரனே = தேவேந்திரனை; பூங்காவு = உத்யானம்; கல்பத்ருமம் = கற்பகவிருக்ஷம்.

பதினாறாயிரம் பத்னிமார்களுடன் த்வாரகையில் அவரவர் க்ருஹத்தில் வசிக்கின்ற ஸாத்வீக குணங்களையுடைய நிர்மலனான உனது மூர்த்திகளை தனித்தனியே நான் கைதொழுகின்றேன். எதிராளியாக நினைத்த தேவேந்திரனை சாதுர்யமாக ஜயித்து ஸத்யபாமாவின் விருப்பத்திற்கேற்ப இந்திரலோகத்து கற்பக விருக்ஷத்தைக் கொண்டுவந்து பாமாவின் நந்தவனத்திலே நட்டுவைத்தாய்.

100. எந்தாவூ விப்ரசாபால் ந்ருகனவசதயா
பண்டு பண்டே கிடன்னான்
ஓந்தாயிட்டந்தகூபே நிப்ருதமதுபலால்
பாலகன்மார் பறஞ்ஞார்
ஸந்தாபம் தீர்த்தெடுத்தங்ஙவனனவதிசெய்
தோரு தானங்ஙளெல்லாம்
பந்துக்கள்க்குள்ளிலாக்கீட்டவனு கதி கொடுத்
தோரு துப்யம் நமோஸ்து.

எந்தாவூ = ஏதோ அத்ருஷ்டகாரணமாக; விப்ரசாபாத் = ப்ராஹ்மணசாபம் மூலம்; ந்ருகன் = ந்ருகமஹாராஜா; ஓந்தாயிட்டு = ஓணானாக; அந்தகூபே நிப்ருதம் = பொட்டக்கிணற்றில்/பாழும்கிணற்றில் வீழ்ந்து; அவசதயா = அவசனாக; பண்டுபண்டே = ரொம்பக்காலமாக; கிடன்னான் = கிடந்தான்; பாலகன்மார் பறஞ்ஞார் = கோபபாலகர்கள் சொன்னார்கள்; ஸந்தாபம் தீர்த்தெடுத்து = ஸங்கடங்களைப் போக்கி எடுத்து; அவனனவதிசெய்த = அவன் செய்த அனவதி (அனேகம்), தானங்ஙளெல்லாம் = தான தர்மங்களின் புண்ணியங்களை; பந்துக்கள்குள்ளிலாக்கீட்டு = பந்துகளுக்கு பிரித்துக் கொடுத்தபின்; கதி கொடுத்து = மோக்ஷகதியைக்கொடுத்த; துப்யம் நமோஸ்து = உனக்கு நமஸ்காரம்.

ப்ராமணசாபம் ஏற்றதால் ந்ருகன் என்ற மஹாராஜா பல வருடங்களாக ஓர் ஓணானாக பாழும்கிணற்றில் வீழ்ந்து கிடப்பதை சிறுவர்கள் மூலம் அறிந்த கண்ணா, அவனது ஸங்கடங்களைத் துடைத்து அவன் செய்திருந்த புண்யங்களைப் பந்துக்களுக்கு பகிர்ந்தளித்து அவனுக்குக் கதிமோக்ஷம் அளித்த உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

101. வாவா என்னு விளிச்சு கேளிபரனாய்
லீலக்கு காளிந்தியே
பாவாலொன்னு பகர்ன்ன மத்தத கலர்ன்
னெந்தேது போகுன்னிதோ
கோபாலக்கரி கொண்டு நேரெ குழியெத்
தோண்டீடினான் பவான்

**தாபாகர்ஷணமென்னதெங்கலருளிடா**
**னந்த நீலாம்பரா!**

கேளீபராயை = விநோத ரஸிகனாக; லீலக்கு = ஜலக்ரீடை செய்ய; காளிந்தியெ பாவால் வாவா என்னுவிளிச்சு = காளிந்திநதியை வாவா என்று அழைத்தார்; மத்ததகலர்ன்னு = மதம்கலர்ந்து; எந்தேது போருன்னதோ = கவனியாமல் வேறுதிசை நோக்கிப் போதல்; கோபாலககரிகொண்டு = கோபாலகனாக கரி (கலப்பை) கொண்டு; குழியெத்தோண்டிடினான் = குழியை ஆழமாகத் தோண்டி அருகில் வருத்தி; தாபாகர்ஷணம் = தாபங்களை ஆகர்ஷணம் செய்து அகற்றுவது; என்னதெங்கலருளீடு = என்பதை எனக்கு அருளிடு; ஆனந்த நீலாம்பரா = ஆனந்தமயனான, நீலவஸத்ரமுடுத்த பலராமஸ்வாமியே!

ஒருமுறை ஜலக்ரீடை செய்ய எண்ணிய பலராமர் காளிந்தீநதியை வாவா என்று தன் பக்கம் அழைக்க நதி அதைப் பொருட்படுத்தாமல் போய்க்கொண்டிருந்ததால் கோபமடைந்த பலராமன் தனது கலப்பையால் நதியில் குழிதோண்டி, நதியைத் தன் பக்கம் ஈர்த்தான். அந்த ஆனந்தமயனான, நீலாம்பரதாரியான பலராமர் என் தாபங்களையெல்லாம் ஆகர்ஷணம் செய்து தாபநிவாரணம் தந்து அனுக்கிரகம் செய்ய வேண்டுமே.

102. **தன்னெ ஸ்நேஹமியன்னவர்க்கு நிமிஷம்**
**த்வேஷிச்சவர்கும் பலால்**
**தன்னேப்போலெ சமஞ்ஞவர்க்குமருளி**
**கைவல்யமல்லே விபோ!**
**தன்னெத்தானறியாஞ்ஞு கின்னமதியாய்**
**நின்னோடிரன்னீடினோரென்**
**னெக்காணவசம் க்ருபாலய! ஜய!**
**ஸ்ரீவாம கேஹாலயா!**

தன்னே ஸ்நேஹமியன்னவர்க்கு = தன்னிடம் அன்பு செலுத்தியவர்களுக்கும்; நிமிஷம் = நொடியில்; த்வேஷிச்சவர்க்கும் = சதருதை பாராட்டியவர்களுக்கும்; பலால் = சம்மதமில்லாமல் / அனுமதியில்லாமல், தன்னேப்போலெ சமஞ்ஞவர்க்கும் = உன்னைப் போலவே (போலி) வேஷம் போட்ட பௌண்ட்ரகனுக்கும், அருளீ

கைவல்யம் = மோட்சத்தைக் கொடுத்த; தன்னெத்தானறியாஞ்ஞு = தன்னைத் தானே அறிந்து கொள்ளாமல்; கின்ன மதியாய் =தளர்ந்த மனதுடைய (மனக்லேசத்துடனான); நின்னோடிரன்னீடின = உன்னிடம் யாசிக்கின்ற; என்னெக் காணவசம் = அவசநிலையிலுள்ள என்னைக்காண்; க்ருபாலய ஜய! = கருணைக்கடலே ஜயஜய! ஸ்ரீவாமகேஹராயை = ஸ்ரீவாமபுராதீசா (இடத்துபுறத்தப்பா!)

உன்னிடம் அத்யந்த பக்தி செலுத்துவோர்க்கும் உன்னிடம் விரோதம் பாராட்டியவர்க்கும் உன்னைப்போல் (கபட) வேஷம் தரித்தவனுக்கும் வித்தியாசம் பார்க்காமல் நொடிப்பொழுதில் மோட்சத்தைக் கொடுத்து அனுக்கிரகம் செய்த ஹே இடத்துபுறத்தப்பா! என்னை அறிந்துகொள்ளாமல் (ஆத்ம ஞானம் பெறாமல் அஞ்ஞானத்தில் உழலும்) தளர்ந்த மனதுடைய என்னைப் பார்த்து, உன்னிடம் யாசிக்கும் என்னையும் அவசனாக பார்க்க வேண்டுகின்றேன் - ஹே க்ருபாகரனே, கருணைக்கடலே உனக்கு ஜயமுண்டாகட்டும்.

**103. த்ருக்கய்யால் மரணம் வரேணமதினாய்**
**பண்டேயிரிக்குன்னவன்**
**சொல்க்கொள்ளும் விவிதன் முதா முஸலி**
**தான்அம்பாடியில்ச் சென்ன நாள்**
**மைக்கண்ணார் பலரோடுமாய் மதுமதம்**
**பூரிச்சு மேவுன்னவன்**
**த்ருக்கய்யால் மரணம் லபிச்சுபரிலோகே**
**போய் ஸுகிச்சீடினான்**

த்ருக்கய்யால் = திருக்கரங்களால்; மரணம் வரேணமதினாய் = மரணம் வரவேண்டும் என்பதற்காக; சொல்க்கொள்ளும் = பேர்போனவன் (ப்ரஸித்தன்); பண்டேயிரிக்குன்னவன் - பலகாலமாக காத்திருப்பவன்; முசலிதான் = முசலம் ஆயுதமாகக் கொண்ட பலராமர்; முதா = சந்தோஷத்துடன்; அம்பாடியில் சென்ன நாள் = ஆயர்பாடியில் சென்ற தினம்; மைக்கண்ணார் = சுந்தரிமார்; மதுபதம் = மதுபானத்தின் லஹரி; பூரிச்சு மேவுன்னவன் = மதிரலஹரி பூண்டிருந்தவன்; த்ருக்கய்யால் மரணம் = திருக்கரங்களால் மரணம் (மோட்சம்); லபிச்சுபரிலோகே சுகிச்சீடினான் = கிடைக்கப்பெற்று மேல்லோகத்தில் போய் சுகமாக இருந்தான்.

விவிதன் என்ற ப்ரஸித்தனான வானரன் பகவான் திருக்கரங்களால் மரணமடைய வேண்டும் என்று பலகாலம் காத்திருந்தான். கோபசுந்தரிகளுடன் உல்லாசமாக பலராமன் இருக்கும் தருணத்தில் பகவானின் திருக்கரங்களினால் மரணம் கிடைத்து விவிதன் மேலுலகம் சென்று சுகமாக இருந்தான்.

**104. புத்ரன்மார் பத்னிமாரென்னிவரொடு ஸுகமே**
**நித்யவும் த்வாரவத்யாம்**
**ப்ருத்வீபாஜாம் க்ருஹஸ்தாஸ்ரம விதி**
**யுபதேசிச்சு கொண்டச்சுதன் தான்**
**நித்யாத்மா நித்ய தானாதிகள் நியதமொருக்**
**குன்னதும் தன்மலே போ**
**யாஸ்தானே சேர்ன்னு தர்மாதிகள் விரவில்**
**விசாரிப்பதும் கைதொழுன்னேன்.**

புத்ரன்மார் பத்னிமாரென்னிவரொடு ஸுகமே = புத்ரர்கள் பத்தினிகள் ஆகியோருடன் சுகமாக; நித்யவும் = அனுதினமும்; த்வாரவத்யாம் ; த்வாரகாபுரியில்; ப்ருத்வீபாஜாம் = பூவாசிகளுக்கு; க்ருஹஸ்தாஸ்ரம விதியுபதேசிச்சு கொண்டு = க்ருஹஸ்த தர்மத்தைக் குறித்து உபதேசம் செய்து கொண்டு; நித்யாத்மா = நித்திய ஸ்வரூபனான; நித்யதானாதிகள் = தானம் முதலான தினப்படி தர்மங்கள்; நியதம் = இடைவிடாது; தன்மலே ஒருக்குன்னதும் = தானே நடத்திக்காட்டுவதும், போயாஸ்த்தானே சேர்ன்னு = சுதர்மா என்ற ராஜசபையில் போய் அமர்ந்து; தர்மாதிகள் விரவில் சிந்திப்பதும் = நீதி, நியாயம், தர்மம் ஆகியவை குறித்து விசாரம் செய்வதும்; கை தொழுன்னேன் = கைகூப்பி வணங்குகின்றேன்.

த்வாரகையில் தனது பத்னிமார்களோடும் புத்ரர்களோடும் சுகமாக வசித்துக் கொண்டும், பூமியில் பிறந்தவர்கட்கு க்ருஹஸ்தாஸ்ரம விதிகளை நன்கு உபதேசம் செய்து கொண்டும், தானே நித்யாத்மாவாக இருப்பினும் தானம் முதலிய எல்லா நித்யகர்மானுஷ்டானங்களையும் விடாமல் செய்து கொண்டும் ராஜசபையில் போய் தர்மகார்யங்கள், நீதி, நியாயம் ஆகியவற்றைக் குறித்து விசாரம் செய்து கொண்டும் உள்ள அச்சுதனை நான் கைதொழுகின்றேன்.

105. ப்ரத்யும்னாதிகள் எத்ரயுண்டு பவத: பஸ்சாதவர்க்கெத்ரவான்
புத்ரன்மார் அநிருத்தராதிகளுமெல்லார்க்கும் நமிக்குன்னு ஞான்
ப்ரத்யேகம் குணகர்மமோர்த்து பறவானாளல்ல பாணாசுரன்
ஹஸ்தச்சேதனமொன்னு ஹஸ்தினபுரீ நிர்யாணமித்யாதிகள்.

ப்ரத்யுமனாதிகள் = ப்ரத்யும்னன் முதலியோர்; எத்ரயுண்டு = எத்தனை பேர்களுண்டு; பவத = தங்களுக்கு; பஸ்சாத் அவர்க்கெத்ரவான = பிறகு அவர்களுக்கு எத்தனை புத்ரர்கள்; எல்லார்க்கும் நமிகுன்னு ஞான் = எல்லோரையும் நான் நமஸ்கரிக்கின்றேன்; பறவானாளல்ல = சொல்லமுடியாது; இத்யாதிகள் = ஆகியவை.

ப்ரத்யும்னன் முதலான தங்களது புத்ரர்கள், அவரைத் தொடர்ந்து பௌத்ரர்கள் அநிருத்தன் ஆகியோர் எல்லோரையும் நான் நமஸ்கரிக்கின்றேன். பாணாசுரனின் ஆயிரம் கைகளில் இரண்டைத்தவிர மற்ற கைகளைத் துண்டித்தது; ஹஸ்தினாபுரத்தில் நிகழ்ந்த மரணங்கள் (பாரதப்போர் மூலமாக நிகழ்ந்தவை) தவிர உன்னுடைய குணகணங்கள் என்று எடுத்துச் சொல்ல வேண்டியவை அனேகம் இருப்பதால் அவற்றையெல்லாம் குறிப்பிட்டுச் சொல்ல நான் தகுதியுடையவனில்லை.

106. கூகி கோழிவனாந்தரே விறகுமாய்
நின்னன்னு ராவே ததா
கூகி கோகிலவாணிமார் குசதடே
மேவீடுமன்னாளிலும்
கூகும் கோழிகள் தம்மிலுள்ள ஸுக்ருதம்
சௌரே பறஞ்ஞீடுவான்
ஆகுன்னில்ல சராசரங்ஙளிலுமுண்
டத்யந்த கத்யந்தரம்

வனாந்தரே = காட்டின் உள்ளில்; ராவே = ராத்திரியில்; கூகி = கூவியது; கோகிலவாணிமார் = குயில் நாதத்தையுடைய வனிதையர்; கூகும் கோழிகள் தம்மிலுள்ள ஸுக்ருதம் = ஒவ்வொரு ஜீவராசிகள் இடையேயுள்ள முன்ஜன்ம கர்மபலம்; பறஞ்ஞீடுவான் = சொல்ல; ஆகுன்னில்ல = ஆவதில்லை; சௌரே = சூரசேனன் வம்சத்தில் ஜனித்தவனே; சராசரங்ஙள் = அனைத்து ஜீவராசிகளும்; அத்யந்த கத்யந்தரம் = அனேகவிதமான வேறுபாடுகள்.

(ஸாந்தீபனிமுனிவரின் பத்னியின் நிர்தேசப் பிரகாரம்) விறகு எடுத்துவரச் சென்ற ராத்ரியிலும் கோழிகள் கூவின (பொழுது விடிந்தது). அதே போன்று குயில் நாதமுடைய சுந்தரிமார்களின் அரவணைப்பில் மயங்கி இருந்த போதும் கோழிகள் கூவி பொழுது புலர்ந்தது. பகவானை த்வேஷித்தவர்கள், அன்புடன் பக்தி செலுத்தினோர், பயப்பட்டவர், தோழனாகக் கருதியவர்கள், ஸௌஹ்ருதம், பக்தி, புத்ரவாத்ஸல்யம் என்று எந்தெந்த பாவத்திலாகிலும் அவனை ஸ்மரிக்கின்ற அனைத்து ஜீவராசிகளுக்குமிடையே அவரவர் பூர்வ ஜன்ம கர்மாக்களை அனுசரித்து எத்தனை எத்தனை பாகுபாடுகள் ஹே சௌரே! இவற்றையெல்லாம் எடுத்துச் சொல்ல என்னால் இயலவில்லை.

107. **காராக்ருஹத்தில் நரபாலர் பறஞ்ஞு வாக்கும்**
**ஸ்ரீநாரதோக்தியுமதில் கரணீயமாதௌ**
**ஸ்ரீமானொடுத்தவரொடெங்ஙினெயென்னதேகும்**
**ப்ரேமாதுரம் திருமுகம் தவகாண்மனோ ஞான்.**

காராக்ருஹத்தில் நரபாலர் பறஞ்ஞுவாக்கும் = ஜராஸந்தனால் அடைத்து வைக்கப்பட்டிருந்த நாட்டு ராஜாக்கள் (சிற்றரசர்கள்) சொன்ன வார்த்தையும் ஸ்ரீநாரதோக்தியும் = அதேநேரம் யுதிஷ்டிரர் நடத்த உத்தேசித்த ராஜஸூய யாகத்தில் கலந்துகொள்ள ஸ்ரீநாரதர் அனுப்பின ஸந்தேசமும், அதில்க் கரணீயமாதௌ = அவற்றில் முதலில் செய்ய வேண்டியது எது என்பது; எங்ஙினெயென்னதும் = எவ்வாறு என்பதும்; ஸ்ரீமான் உத்தவரொடு ஏகும் = ஸ்ரீமானான உத்தவருடன் கேட்டறிந்து; ப்ரேமாதுரம் = ஸ்னேஹ வாத்ஸல்யத்துடன் (யுதிஷ்டிரன் குறித்து ப்ரேமமும் ராஜாக்களை உத்தேசித்து ஆதரவும்) காண்மனோ ஞான் = நான் காண்பேனா?

ஜராஸந்தனுடைய தடுப்புக் காவலிலிருந்த சிற்றரசர்கள் தூதன் மூலமாக அனுப்பின அபேக்ஷையும், நாரதமுனி மூலம் அறிந்த யுதிஷ்டிரன் நடத்தவுள்ள ராஜஸூய யாகம் ஆகியவற்றில் எதை முதலில் கவனிக்க வேண்டும் என்று ப்ரேமாதுரமாக உத்தவரிடம் பகவான் வினவுகின்றார். அந்தக் கருணை ததும்பும் திருமுகத்தை நான் காண்பேனா?

108. **இந்த்ரப்ரஸ்தத்திலிந்த்ரப்ரிய ஸூதனெ நினச்**
**சுள்ளொரௌத்ஸுக்ய வேகால்**

**வன்னிட்டப்பீமனாலே மகதபதியெயும்**
**கொன்னு நாடும் ஜயிச்சான்**
**தன்யாத்மா ராஜஸூயம் நரபதி பத**
**ஸாதிச்சதும் தர்மஜன் தான்**
**ஒன்னாயீ சைதன்யமப்போள் மதுமதன! பவா**
**னோடதும் கை தொழுன்னேன்.**

இந்த்ரப்ரியசுதனெ நினச்சு = இந்திரனின் ப்ரிய புத்ரனான அர்ஜுனனை நினைத்து; ஔத்ஸுக்யவேகால் = உற்சாகமிகுதியால்; அஃப்பீமனாலே = அந்த பீமன் முகாந்தரமாக ; கொன்னு = கொன்று; மகதபதி = மகத தேசத்து அரசன் ஜராஸந்தன்; தன்யாத்மா = சுக்ருதம் செய்தவன்; தர்மஜன் = தர்மபுத்ரர்; ராஜஸூயம் ஸாதிச்சதும் = ராஜஸூய யாகத்தை வேண்டவிதம் நடத்தி முடித்ததும்; ஒன்னாயி சைதன்யமப்போள் = சேதிதேசத்து அரசனான சிசுபாலன் பகவானுடன் ஐக்கியமானான்; மதுமதனன் = மதுவை வதிச்சவன்.

இந்திரனின் ப்ரியபுத்ரனான அர்ஜுனனைக் காணும் உத்ஸாகத்தோடு இந்த்ரப்ரஸ்தம் சென்று அங்கு மகதராஜாவான ஜராஸந்தனை பீமன் மூலமாக வதம் செய்ய வைத்து, அவனது ராஜ்யத்தையும் வென்றார். பரம உத்தமனான யுதிஷ்டிரனின் ராஜஸூயயாகத்தை நன்கு நடத்திக் கொடுத்து, சேதிதேசத்து அரசன் சைத்யன் (சிசுபாலனை) ஸம்ஹாரம் செய்து, அவனுக்கு முக்தி கொடுத்த ஹே மதுமதனா! பகவானே! உன்னை நான் கைதொழுகின்றேன்.

**109. ஸால்வன் வன்னச்சனெக் கொன்னொரு மறிவு**
**குறஞ்ஞொன்னதங்கீகரிச்சிட்டு**
**எல்லாம் போய்ச் சென்னு வன்னீடின கதியவனும்**
**நல்கினானேக பாவம்**
**கல்யாணங்ஙள்க்கு மூலம் தவ பதகமலம்**
**ஸேவ செய்தாவதெல்லாம்**
**நிர்லஜ்ஜம் கீர்த்தனம் செய்வது கிமபி செவிக்**
**கொள்க வாமாலயேசா!**

ஸால்வன் = சிசுபாலனின் தோழனான அரசன்; வன்னச்சனெக் கொன்னொரு மறிவு = வந்து, தனது அப்பாவான வசுதேவரைக்

கொன்றதாக ஆடின மாயாஜாலத்தை; குறஞ்ஞொன்னது - கொஞ்ச நேரத்துக்கு அதை. அங்கீகரிச்சிட்டு = உண்மையென்று நம்புவதுபோல் நடித்துவிட்டு. எல்லாம் போய்ச்சென்னு = மாயையெல்லாம் நீங்கி யுத்த களத்திற்குச் சென்று; ஏகபாவம் வன்னீடின கதி = ஸாயுஜ்யமுக்தி; அவனு நல்கினான் = அவனுக்கு வழங்கினான்; கல்யாணங்ஙள்க்கு மூலம் =ஸகல கல்யாணங் களுக்கும் மூலகர்த்தாவான; தவ பதகமலம் = உனது பதமலர்கள்; ஸேவ செய்தாவதெல்லாம் = என்னால் இயன்ற சேவை புரிந்து கொண்டு; நிர்லஜ்ஜம் = லஜ்ஜயை விட்டு, வெட்கத்தைவிட்டு; கிமபி செவிக்கொள்க = கொஞ்சமாவது செவியால் கேட்டு; வாமாலயேசா = இடத்துபுறத்தப்பா!

சிசுபாலனின் தோழன் ஸால்வன் என்ற அரசன் மாயாவசுதேவரைக் கொல்வதுபோல் ஒரு ஜாலத்தை நடத்தியபோது அதை நம்பினவன் போல் கொஞ்சநேரம் நடித்துவிட்டு, பிறகு மாயை தெளிந்தவனாக நேருக்கு நேர் அவனுடன் யுத்தம் செய்து அவனுக்கு மோட்சம் அளித்தார் பகவான். ஸகல கல்யாண குணங்களுக்கும் ஆதாரமான உனது பாத கமலங்களுக்கு என்னால் இயன்ற சேவைகளைச் செய்து கொண்டு, உனது கீர்த்தனங்களை வெட்கப்படாமல் பாடுவதை தயை கூர்ந்து செவி சாய்த்துக் கேட்க வேண்டுமே. ஹே வாமாலயேசனான இடத்துபுறத்தப்பா.

**110. ஸ்ரீராமன் தீர்த்தயாத்ரா விதியிலசுரனெக்**
**கொன்னு புண்ய ப்ரதேசான்**
**ஸ்ரீகாசீ காஞ்சி காவேரிகள் மதுர**
**மஹேந்த்ராத்ரி கன்யாகுமாரீ**
**ஸ்ரீராமன் ஸேதுபந்திச்சவிடமொரு தனுஷ்**
**கோடியென்னிங்ஙனே தான்**
**ஓரோன்னே சேவசெய்தங்ஙமலமதி முதா**
**வன்னதும் கைதொழுன்னேன்.**

ஸ்ரீராமன் = ஸ்ரீபலராமன்; தீர்த்தயாத்ராவிதியில் = பாரத யுத்ததைத் தவிர்க்க இயலாது என்பதைத் தெரிந்துகொண்டு தீர்த்த யாத்திரை செல்லும் வழியில்; தானோரோன்னே = தானும் ஒவ்வொரு ப்ரதேசமாக; சேவசெய்து = சேவித்துவிட்டு; அமலமதி = சுத்த ஸத்வ புத்தியோடு கூட முதா அங்ஙு வன்னதும் = சந்தோஷத்துடன் த்வாரகைக்குத் திரும்பி வந்ததும்; கைதொழுன்னேன் = கைகூப்பி வணங்குகின்றேன்.

பாரத யுத்தத்தைத் தவிர்க்க இயலாது என்பதையறிந்த பலராமர் தீர்த்தயாத்திரையாகப் போன இடத்தில் பல்வைன் என்ற அசுரனைக் கொன்று, புண்யப்ரதேசங்களான காசீ, காஞ்சி, காவேரிகள், மதுரா, மஹேந்திரகிரி, கன்யாகுமாரி, ஸ்ரீராமர் ஸேதுபந்தனம் நடத்திய தனுஷ்கோடி போன்ற புண்ய ஸ்தலங்களுக்கு விஜயம் செய்து சந்தோஷத்துடன் த்வாரகாபுரி திரும்பி வந்ததையும் நினைத்து கைதொழுகின்றேன்.

**111. நிர்மாயம்தான் குசேலன் த்விஜவரனவிடம்**
**விட்டு வேறிட்டு வேட்டான்**
**உண்மானில்லாஞ்ஞலஞ்ஞான் புனரொரு திவஸம்**
**த்வாரகாம் கண்டு சென்னான்**
**ஸம்மோதம் பூண்டிருன்னானவிலரி திருமுல்க்**
**காழ்ச்ச வெச்சான், ப்ரபாதே**
**ப்ரம்மானந்தேன போன்னான் தனதனெ விபவம்**
**கொண்டு வெக்கம் ஜயிச்சான்.**

நிர்மாயம்தான் குசேலன் = நிர்மல பக்தனும் ஆத்மார்த்த தோழனுமான குசேலன்; த்விஜவரன் = ப்ராஹ்மணஸ்ரேஷ்டன்; அவிடம் விட்டு = குருகுலவாசம் நிறைவடைந்தபின் அங்கிருந்து; வேறிட்டு = இருவரும் பிரிந்த பின்; வேட்டான் = விவாஹம் செய்தான்; உண்மானில்லாஞ்ஞலந்ஞான் = உண்பதற்குப் போதிய வகையில்லாமல் (தாரித்திரியம்); அலஞ்ஞான் = மிகவும் சிரமப்பட்டான்; புனரொரு திவஸம் = பிறகொரு தினம்; த்வாரகாம் கண்டு சென்னான் = த்வாரகையில்ச் சென்று கண்டான்; ஸம்மோதம் பூண்டிருன்னான் = சந்தோஷத்துடன் இருந்து; அவிலரி = அவல்பொரி; திருமுல்க்காழ்ச்ச வெச்சான் = திருமுன்பில் காணிக்கையாக சமர்பித்தான்; ப்ரபாதே = காலையில்; ப்ரம்மானந்தேன போன்னான் = ஸகல துக்கங்களையும் மறந்து பரம ஆனந்தத்துடன் திரும்பிச் சென்றான்; தனதன் = தனத்தைக் கொடுக்கும் குபேரன்; விபவம் கொண்டு வெக்கம் ஜயிச்சான் = விபவஸம்ருத்தியில், ஸம்பத்தின் மிகுதியில் குபேரனையும் மிஞ்சினான்.

நிர்மலசித்தனான உனது தோழன் குசேலன் என்ற ப்ராஹ்மண ஸ்ரேஷ்டன் குருகுலவாசம் முடிந்ததும் உன்னிடமிருந்து பிரிந்து வேறு

இடம் சென்று, விவாஹம் செய்து கொண்டு வாழும் தருணத்தில், மிகவும் கஷ்டமான தரித்திர தசையை அடைந்து, உண்ண உணவு கூட இல்லாமல் அவதிப்பட்டான். பிறகு ஒரு நாள் த்வாரகைக்குச் சென்று கண்ணனை தரிசித்து அவருக்கு அவலை சமர்ப்பணம் செய்து, அவருடன் சந்தோஷமாக இருந்து, மறுநாள் காலையில் தனது கஷ்டங்களையெல்லாம் மறந்தவனாகத் திரும்பிச் சென்றான். க்ருஷ்ணப்ரசாதத்தின் பலனாக அந்தக் குசேலன் ஸம்பத்துக்கள் நிறையப் பெற்று ஐஸ்வர்யத்தில் குபேரனையும் மிஞ்சும் வகையில் தனிகனானான்.

112. **அக்காலத்துடனத்யபூர்வமுளவா**
**யர்க்கோபராகம் ததா**
**சொல்க்கொள்ளுன்ன ஸமந்த பஞ்சகமஹா**
**தீர்த்தத்தினெத்தும் விபோ!**
**அக்ரே பந்துஜனங்ஙளொக்கெயவிடெக்**
**கூடி ஸுகிச்சொட்டுநாள்**
**அச்சன்டெ யஜனம் கழிச்சு புரியில்**
**போரும் ஹரே! பாஹிமாம்.**

அக்காலத்துடனத்யபூர்வமுளவாய = அப்போது அதிஅபூர்வமாக சம்பவித்த; அர்க்கோபராகம் = பூர்ணமான ஸுர்யகிரஹணம்; ததா = அப்பொழுது; சொல்க்கொள்ளுன்ன = கீர்த்தியேறின; ஸமந்த பஞ்சக மஹா தீர்த்தத்தினெத்தும் = பரசுராமர் இருபத்திரண்டு தலைமுறை க்ஷத்திரியர்களை வதம் செய்து அவர்கள் ரத்தத்தினால் பித்ருதர்பணம் செய்த தடாகங்கள்; அக்ரே = முன்பாக; பந்து ஜனங்ஙளொக்கெ = பந்துக்கள் யாவரும், அவிடெக் கூடி ஸுகிச்சொட்டுநாள் = அங்கு கூடி பலநாட்கள் சுகமாக இருந்து; அச்சன்டெ = அப்பாவின்; யஜனம் = யாகம்; புரியில் போரும் = த்வாரகாபுரியில் திரும்பிவரும்; ஹரே பாஹிமாம் = ஸ்ரீஹரே என்னைக் காப்பாற்றுவாயாக.

அத்தருணத்தில் மிகவும் அபூர்வமாக நிகழும் முழு சூர்யக்ரஹண வேளையில் தனது பந்துக்கள் அனைவருடன் ஸமந்த பஞ்சகமஹா தீர்த்தத்தில் புண்யஸ்னானம் செய்து, தனது பிதாவான வசுதேவரால் பலவகையான யாகங்களைச் செய்வித்து, பந்துஜனங்களுடன் சிலகாலம் சந்தோஷமாக இருந்துவிட்டு மீண்டும் த்வாரகைக்குத் திரும்பிய ஸ்ரீஹரே! என்னைக் காக்க வேண்டுமே!

113. தங்கய்யீன்னு பறிச்சு கம்ஸனசுபம்
செய்தோரு பைதங்ஙளெஸ்
ஸந்தோஷத்தொடு காணகயில் குதுகமுண
டம்மக்கதும் கொண்டு நீ
தங்கல் பக்திமதாம் வரிஷ்டனசுரன்
வாமுன்ன லோகத்து போய்க்
கொண்டன்னு அம்மயனுக்ரஹிச்சது முதா
மூர்த்னா லபிச்சீடினான்.

தங்கய்யீன்னு = தன் கையிலிருந்து; பறிச்சு = பறித்த / பிடுங்கி எடுத்த; கம்ஸனசுபம் செய்தோரு பைதங்ஙளெ = கம்ஸன் துஷ்டத் தனமாக / கொடூரமாக வதம் செய்த குழந்தைகளை; சந்தோஷத்தொடு காணகயில் குதுகமுண்டம்மக்கு – தன் தாய்க்கு அவர்களை சந்தோஷமாக பார்ப்பதற்கு ஆக்ரகம் உள்ளது என்றறிந்து; தங்கல் = தன்மீது, பக்திமதாம் = பக்தியுடைய, வரிஷ்டனசுரன் = அசுரஸ்ரேஷ்டனான மஹாபலி; வாமுன்ன லோகத்துபோய் = வாழுகின்ற உலகத்துக்குச் சென்று (சுதலம்); கொண்டன்னு = கொண்டுவந்து; அம்மயனுகிரஹிச்சது முதாமூர்த்தனா = அம்மாவின் அனுக்கிரகத்தை சந்தோஷத்துடன் சிரம்தாழ்த்தி; லபிச்சீடினான் = ஏற்றுக் கொண்டான்.

தன் கரங்களிலிருந்து பிஞ்சு பாலகர்களைத் தட்டிப் பறித்து அநியாயமாக கம்சன் வதம் செய்த குழந்தைகளைப் பார்க்க தன் தாய் ஆசைப்படுகிறாள் என்பதையறிந்து, தன்மீது மாளா பக்தி பூண்ட மஹாபலியின் உலகுக்குச் சென்று அந்தக் குழந்தைகளை தாய்க்கு காட்டியபோது ஆனந்த பரவசமான தேவகி தன் மகனுக்கு அனுக்கிரக ஆசிகளை வாரி வழங்க, அவற்றை மிகவும் சந்தோஷத்துடன் தனது சிரம் தாழ்த்தி பகவான் ஏற்றுக் கொண்டார்.

114. பார்த்தன்னாத்மஸஹோதரீமழகுதாய்
ஸாத்யம் வருத்துன்னதும்
கத்தும் தீய்யதயச்ச துஷ்டனெயுமச்
சக்ரம் தஹிக்குன்னதும்
பக்தன்னஸ்ருத தேவனும் மிதிலனும்
மோக்ஷம் கொடுக்குன்னதும்
ப்ரீத்யா நின் சரிதங்ஙள் நித்யவுமஹோ
சித்தே லபிக்கேணமே.

பார்த்தனனு = அர்ஜுனனுக்கு; ஆத்மஸஹோதரீ = பிரியமான சுகோதரி; அழகுதாய் = அழகுடன், உசிதமாக; ஸாத்த்யம் வருத்துன்னதும் = பத்னியாக்கிக் கொள்ள வேண்டுமென்ற ஆசையை பூர்த்திசெய்து கொடுத்ததும்; கத்தும் தீய்யதயச்ச துஷ்டனெ = அக்னிரூபத்திலுள்ள துஷ்ட மூர்த்தியை அனுப்பின காசிராஜபுத்ரன் சுதக்ஷிணன்; சக்ரம் தஹிக்குன்னதும் = சுதர்சனச்சக்ரம் அதை தகனம் செய்ததும்; பக்தன்னஸ்ருததேவனும் மிதிலனும் = தனது பக்தனான ஸ்ருததேவன் என்ற ப்ராஹ்மணனுக்கும் மிதிலாபதியான பஹுலாச்வனுக்கும்; ப்ரீத்யா = ப்ரீதியுடன்; நின் சரிதங்ஙள் = உனது திவ்ய சரிதங்களை; நித்யவும் = எப்பொழுதும்; சித்தே லஸிக்கேணமே = மனதில் உதிக்க வேண்டுமே.

தனது ப்ரிய சோதரியான ஸுபத்ரையை விவாஹம் செய்ய வேண்டும் என்று ஆசைகொண்ட பார்த்தனுக்கு நல்ல விதமாக அவளைத் திருமணம் செய்து கொடுத்ததும், தன்னைப் போலவே வேஷம் தரித்த பௌண்ட்ரகனின் தோழனான காசிராஜாவினை வதம் செய்தபோது அவனது மகனான ஸுதக்ஷிணன் என்பவன் அக்னிரூபத்தில் ஒரு துஷ்டமூர்த்தியைக் க்ருஷ்ணனை நோக்கியனுப்ப, துஷ்டமூர்த்தியானது தன்னை ஏவிவிட்ட ஸுதக்ஷிணனையே தாக்கிக் கொன்றதையும், பகவானின் பக்தர்களான ஸ்ருததேவன் என்கின்ற பிராமணனுக்கும் பஹுலாச்வன் என்ற மிதிலாதிபதிக்கும் மோக்ஷம் கொடுத்து அருள் பாலித்ததுமான உன்னுடைய அனேக விதமான, அத்புதமான சரிதங்கள் எனது மனதில் எப்போதும் உதிக்க வேண்டுமே.

**115. ப்ருத்வீ தேவன்டெ பத்தாம் தனயனுடலொடே**
**மாஞ்ஞுபோதர்ஜுனன்தான்**
**அக்னெள சாடீடுமென்னாயது பொழுதவனும்**
**தானுமந்தர்ம்மலே போய்**
**ப்ரீத்யா வைகுண்டலோகத்தெழுன்னருளி யதா**
**பூர்வமாகத்ய பாலான்**
**ப்ரத்யேகம் பார்த்தனெக் கொண்டழகினொடு**
**கொடுப்பிச்ச துப்யம் நமோஸ்து.**

ப்ருத்வீதேவன்டெ = பூசுரனுடைய (ப்ராஹ்மணனுடைய); பத்தாம் தனயன் = பத்தாவது புத்ரன்; உடலோடெ மாஞ்ஞுபோது = உடலுடன்

மறைந்தபோது; அக்னௌ = அக்னியில்; சாடீடுமென்னாயது பொழுது = குதித்து விடுவான் என்று ஆன நிலையில்; அவனும் தானும் = அர்ஜுனனும் ஸ்ரீக்ருஷ்ணனுமாக; அந்தர்ம்மலே போய் = அந்தரீக்ஷத்தின் வழியாக / ஆகாயமார்க்கமாக; ப்ரீத்யா = ப்ரீதியுடன்; வைகுண்டலோகத்தெழுன்னருளி = வைகுண்டலோகத்தில் எழுந்தருளி; யதாபூர்வம் ஆகத்ய = போனபடியே (விஷ்ணுவால் கொடுக்கப் பட்ட பத்து குழந்தைகளுடன்) திரும்பி வந்து; பாலான் யதாவூர்வம் ப்ரத்யேகம் = ஒவ்வொரு குழந்தையையும் அவரவர்கள் வயதுக்கேற்ற அவஸ்தையில்; அழகினொடு கொடுப்பிச்ச = பார்த்தனைக் கொண்டே அழகாக கொடுக்க வைத்த; துப்யம் நமோஸ்து = உனக்கு நமஸ்காரம் பவிக்கட்டும் / உரித்தாகுக.

ஒரு பிராமணரின் பத்தாவது குழந்தையும் உடலுடன் மறைந்த போது; அக்குழந்தையைக் காப்பாற்றிக் கொடுக்கின்றேன் என்று வாக்கு கொடுத்த அர்ஜுனன் தன் வார்த்தையைக் காப்பாற்ற முடியாமல் தோல்வியடைந்தபோது அக்னியில் குதித்து தன்னை மாய்த்துக் கொள்ள எண்ணினான். அப்போது பகவான் க்ருஷ்ணன் அர்ஜுனனையும் அழைத்துக் கொண்டு ஆகாயமார்க்கமாக வைகுண்டம் சென்று மஹாவிஷ்ணுவிடமிருந்து எல்லாக் குழந்தைகளையும் திரும்பப் பெற்று, அவரவர் எந்தெந்த வயதில் இருந்திருப்பார்களோ அதே வளர்ந்த நிலையில் அவர்களை ப்ராமணருக்கு அர்ஜுனன் மூலமாகவே திரும்பக் கொடுக்க வைத்த ப்ரபோ! உனக்கு நமஸ்காரம்.

**116. ஏறேப்போரும் ப்ரபுக்கள்க்குஷஸி துயிலுணர்த்**
**தும் சிலர்க்கென்னபோலெ**
**யோக ஸ்ரீநித்ரயென்னும் ப்ரளயமவதியாம்**
**காலமானந்தமூர்த்தே!**
**ஏகாந்தே போய் ஸ்துதிக்கும் ஸ்ருதிகளவிடெயன்**
**னுள்ள திவ்யாக்ஷரங்ஙள்க்**
**கோரோன்னே ஸன்னமிப்பான் க்ருப தரிகவிபோ**
**வாமகேஹாதிநாதா!**

ஏறேப்போரும் = பெரிய ப்ரதாபங்களையுடைய; உஷஸி துயிலுணர்த்தும் = உஷக்காலத்தில் துயில் உணர்த்த சுப்ரபாதம் பாடுவதுபோல்; சிலர்க்கென்னபோலெ = சிலருக்கு என்றது போல்; யோக

ஸ்ரீநித்ரயென்னும் = ஸ்ரீயுடன் யோக நித்திரையில் லயித்திருந்து; ப்ரளயமவதியாம் = ப்ரளயகாலத்தின் காலாவதி தீரும் வேளையில்; ஆனந்தரூபாத்மே = ஆனந்தஸ்வரூபமாக இருப்பவனே, ஏகாந்தே = ஏகாந்தமாக இருக்கும் தறுவாயில்; ஸ்ருதிகளவிடெயென்னுள்ள திவ்யாக்ஷரங்ஙள் = வேதங்கள் பரம்பொருளைத் துதிக்கும் துதியின் திவ்யாக்ஷரங்கள்; ஓரோன்னே = ஒவ்வொரு அட்சரத்தையும்; ஸன்னமிப்பான் = ஸாஷ்டாங்கம் நமஸ்கரிக்க; க்ருப தரிக விபோ! = க்ருபையைத் தர வேண்டுமே விபோ! வாமகேஹாதிநாதா = இடத்துபுறத்தப்பா!

பெரிய ப்ரதாபங்களுடைய ப்ரபுக்களை காலை வேளையில் பள்ளியெழுச்சி பாடுவது போன்று; உஷத்காலத்தில், ப்ரளயகாலத்தின் காலாவதி தீரும் வேளையில் (மீண்டும் ஸ்ருஷ்டியைத் தொடர) ஆனந்தஸ்வரூபமாக யோக நித்திரையில் ஸ்ரீயுடன் ஏகாந்தத்தில் இருக்கும் உன்னைத் துயிலுணர்த்த வேதங்கள் எழுப்பும் ஸ்ருதி கீதை அல்லது வேதஸ்துதியின் திவ்யாக்ஷரங்கள், ஒவ்வொன்றையும் தனித்தனியே ஸாஷ்டாங்கப்ரணாமம் செய்ய க்ருபை அருள வேண்டுமே ஹே! இடத்துபிறத்தப்பா!

**117. பள்ளிக்குறப்பு மரமென்னகணக்கெ நின்மைப்**
**பிள்ளய்க்குறப்பு ஜனனீவ ஸமாஸ்ரயம் மே**
**உள்ளில் கறப்பு களவான் திருவுள்ளமோடேப்**
**பள்ளிக்குறுப்புணர வேணமனந்தசாயின்!**

பள்ளிக்குறப்பு = கட்டடத்திற்கு பலம்; மரம் என்ன கணக்கெ = மரம்தான் என்ற மாதிரி; பிள்ளய்க்குறப்பு = குழந்தைக்கு ஆஸ்ரயம்; ஜனனீவ = தாய்தான் என்பதுபோல்; ஸமாஸ்ரயம் மே = எனது ஏக ஆஸ்ரயம்; நின்மை = உனது ரூபம் / நீயாகிய உண்மை; உள்ளில் கறப்பு = மனதிலுள்ள அழுக்கு / அஞ்ஞானம்; களவான் = களைய; திருவுள்ளமோடெ = கருணை ப்ரஸாதங்களுடன்; அனந்தசாயின் = சேஷன்மேல் பள்ளி கொண்டிருக்கும்; பள்ளிக்குறுப்புணர வேணம் = திருப்பள்ளியெழுச்சி பண்ணவேண்டும்.

ஒரு கட்டடத்துக்கு எப்படி அதில் இருக்கும் மரவேலைகள் பலத்தைக் கொடுக்கின்றதோ, எப்படி ஒரு குழந்தைக்கு அதன் தாய் தான் ஏக ஆதாரமோ அப்படியே நீயாகிய சத்தியம் உனது திவ்யரூபம் மட்டுமே எனக்கு ஏக ஆஸ்ரயம் ஆக உள்ளது. என் உள்ளத்திலிருக்கும்

அழுக்குகளையெல்லாம் துடைத்து / அஞ்ஞானத்தை விலக்கி மெய்ஞ் ஞானத்தை அருள ஹே யோக நித்திரையில் இருக்கும் அனந்தசாயின் திருவுள்ளம் கொண்டு திருப்பள்ளியெழுச்சி செய்ய வேண்டும் பகவானே!

118. **ஸ்ரீ நீலகண்ட பதபாம்சுலவப்ரஸாதால்**
**ஸ்ரீக்ருஷ்ண லீலகளிவண்ணமொரோன்னு சொன்னேன்**
**ஸ்ரீமான்முகுந்த ஜய வாமபுராதிநாதா!**
**ஸ்ரீபாதபக்தி அருளீடுக நாளுதோறும்.**

ஸ்ரீ நீலகண்ட பதபாம்சுலவப்ரஸாதால் = ஸ்ரீ நீலகண்டன் என்ற எனது குருநாதரின் பாததூளியின் ஒரு தரி (துளி)யின் ப்ரஸாதத்தால்; ஸ்ரீக்ருஷ்ண லீலகளிவண்ணம் = பகவான் ஸ்ரீக்ருஷ்ணனின் லீலாவிலாஸங்களை இப்படியாக; ஓரோன்னு சொன்னேன் = ஒவ்வொன்றாகச் சொன்னேன்; ஸ்ரீமான் = ஸ்ரீயோடு கூடின (மஹாலக்ஷ்மியுடனான); முகுந்த ஜய வாமபுராதிநாதா = முகுந்தா! ஜயஜய! இடத்துபுறத்தப்பா! ஸ்ரீபாதபக்தியருளீடுக = உனது திருப்பாதங்களில் பக்தியை அருள்வாயாக; நாளுதோறும் = நாள்தோறும்.

ஸ்ரீநீலகண்டன் என்ற எனது குருநாதரின் பாத தூளியின் ஒருதுளி ப்ரஸாதமாகக் கிடைக்கப்பட்டதின் பயனாக பகவான் ஸ்ரீக்ருஷ்ணனின் லீலா விலாசங்களை இப்படியாக ஒவ்வொன்றையும் சொன்னேன். ஸ்ரீயுடன் கூடின முகுந்தா! ஜய! ஜய! ஹே இடத்துபுறத்தப்பா! நாள்தோறும் ஒவ்வொரு நாளும் எனக்கு உனது ஸ்ரீபாதமான திருவடிகளில் பக்தியைத் தந்து அருள வேண்டுமே!

119. **க்ரமத்திலாக்கீடின சூலபாணி**
**ஸ்ரமத்தினாலித்தமதீவ சித்ரம்**
**ஸ்ரவிச்சு பாஷா ஸ்ரவணாம்ருதம் மே**
**ரமிச்சுகொள்க அச்சுத பாதமூலே!**

க்ரமத்திலாக்கீடின = ஒரு க்ரமமாக (சிதறிக் கிடந்த ஸ்லோகங்களைச் சிட்டைப் படுத்திய) சூலபாணி = சூலபாணி என்ற ஸகா / சிஷ்யன் (அல்லது ஸாக்ஷாத் ஸர்வேச்வரன் பரமசிவன் என்றும் கொள்ளலாம்); ஸ்ரமத்தினாலித்தமதீவசித்ரம் = அவரது பரிஸ்ரமத்தினால் ஒரு அழகான ரூபம் கிடைத்து; ஸ்ரவிச்சு = ஸ்ரவணம் செய்து; பாஷாஸ்ரவணாம்ருதம் = மலையாள பாஷையிலுள்ள செவிக்கு

அமிர்தமாகவுள்ள; ரமிச்சுகொள்க = ஸந்தோஷமாக வாழுங்கள்; அச்சுத பாதயுகலே = பகவான் ஸ்ரீக்ருஷ்ணனின் திருப்பாதங்களின் அடியில்.

பரமேச்வரனின் அருள்கொண்டு / சூலபாணியின் சிரமத்தால் ஒரு ரூபம் வந்த இந்த க்ருதியை பக்திஸ்ரத்தையுடன் ஸ்ரவணம் செய்து, மலையாள பாஷையிலுள்ள செவிக்கமுதமான இந்த கர்ணாம்ருதத்தைக் கேட்டு பக்தஜனங்கள் அனைவரும் அச்சுதனின் பாதாரவிந்தங்களில் சந்தோஷமாக வாழுங்கள்.

**லீலாம்ருதம் ஸமாப்தம்**



## பாகம் 2
# நாமாம்ருதம்

**120. எள்ளில் கலர்ன்னியலுமெண்ண கணக்கெயாத்மா**
**வெல்லார்க்குமென்னதறியாதெ மயங்ஙினேன் ஞான்**
**தள்ளிக்களஞ்ஞு ஸகலம் மம கன்மஷம் நீ**
**உள்ளில் தெளிஞ்ஞுணர வேணமுதாரகீர்த்தே!**

எள்ளில் கலர்ன்னு இயலும் எண்ணகணக்கெ = எள்ளில் எண்ணை எவ்வாறு ஸர்வ வ்யாபகமாக ஆனால் அஸ்பஷ்டமாக கலர்ந்திருக்கின்றதோ அவ்வாறு; ஆத்மாவெல்லார்க்குமென்னதறியாதெ = ஒரே ஜீவசைதன்யம் தான் எல்லோரிலும் உள்ளது என்பதையறியாமல்; மயங்ஙினேன் ஞான் = நான் மயங்கினேன்; தள்ளிக்களஞ்ஞு = தள்ளிக் களைந்து; ஸகலம் = அனைத்தும்; மம கன்மஷம் = எனது கல்மஷங்களை (மன மாசினை); உள்ளில் தெளிஞ்ஞுணரவேணம் = என்னுள்ளில் தெளிந்து உணரவேண்டும்; உதாரகீர்த்தே = மஹத்தான கீர்த்தியை உடையவனே!

எள்ளில் எவ்வாறு மறைமுகமாக எண்ணை வ்யாபித்திருக்கின்றதோ அதே போல் ஸமஸ்த ஜீவராசிகளிலும் அந்தர்யாமியாக மறைந்திருப்பது ஏக சைதன்யம் தான் என்பதை அறியாமல் நான் மயங்கியிருந்தேன்! எனது அஞ்ஞானத்தைப் போக்கி, மனமாசை அகற்றி எனது உள்ளம் தெளிந்து ப்ரகாசிக்க வேண்டுமே, ஹே உதாரமூர்த்தே!

**121. மன்னில்ப்பிறன்னு மதியுள்ள மனுஷ்யனாயா**
**லுண்ணித்தமாய்க் கழியுமாதியிலுள்ள காலம்**
**பொண்ணத்தமாயதுமிதும் கருதீட்டசேஷம்**
**தன்னெத்திரஞ்ஞறிகயென்னதஸாத்யமத்ரே.**

மன்னில்ப்பிறன்னு மதியுள்ள மனுஷ்யனாயால் = இந்த நரலோகத்தில் புத்தியுள்ள உத்க்ருஷ்டமான நரஜன்மம் கிடைத்தால்கூட; உண்ணித்தமாய் கழியும் = பாலசேஷ்டைகளில் கழிந்துவிடும்; பொண்ணத்தமாய் = ஆத்மப்ரசம்சை செய்து கொண்டு / கர்வத்துடன் /

நிஷ்பலமாக; அதுமிதும் கருதீட்டு = அதுமிதும் கருதிக்கொண்டு (வேண்டாத சிந்தனைகள் வளர்த்துக்கொண்டு), தன்னெத்திரஞ்ஞறிகயென்னது = தன்னைத்தான் உணர்ந்து ஆத்மவிசாரம் செய்வது என்பது; அசேஷம் அஸாத்யமத்ரே = கொஞ்சம் கூட சாத்தியமில்லை என்றாகின்றது.

பூலோகத்தில் கிடைத்தற்கரிய மனுஷ்யஜன்மம் வாய்த்தாலும் ஆதிகாலத்தில் குழந்தைப் பருவத்தின் சேஷ்டைகளிலும், மீதியுள்ள காலம் அர்த்தமில்லாமல் எதையெதையோ நினைந்து கொண்டு தற்பெருமையடித்துக்கொண்டு காலம் விரயமாகின்றது. ஆகையால் தன்னைத்தானே அறிந்து ஆத்மவிசாரம் செய்து ஞானம் பெறுவது என்பது சாத்தியமில்லாமல் போய்விடுகின்றது.

**122. ஸூனம்தான் ப்ரீதி நானாவித மஹிதகதா**
**நாமஸங்கீர்த்தனம் தான்**
**அனன்யஸ்ரத்தயுள்ளோர்க்குமதுவிதமா**
**யுண்டு வேதாந்தவாக்யம்,**
**ஞானும் த்வல்பாதஸந்தர்சனமொருவிதமங்**
**ஙாஸ்வதிப்பானிரிப்போன்**
**ஆனந்தப்ராப்தியானக்கருளின பகவானல்**
**லயோ நீ க்ருபாப்தே!**

ஸூனம்தானதும் = ஒருபூவாகிலும் (பத்ரம், புஷ்பம், பலம், தோயம்); ப்ரீதி = ப்ரியம்; நானாவித மஹித கதா நாமஸங்கீர்த்தனம் தான் = பலவிதமான உனது மஹிமையேறின கதைகளை ஸ்ரவணம் செய்தல் உனது திருநாமங்களை கீர்த்தனம் செய்தல் ஆகியவை; அனன்யஸ்ரத்தயுள்ளோர்க்கு = வேறு விஷயங்களில் மனதை அலையவிடாமல் ஒருமித்த சிந்தையுடன்; அதுவிதமாய் = அந்த ஸ்ரத்தையின் தன்மைக்கேற்ப; வேதாந்த வாக்யம் உண்டு = வேதங்களின் அந்தமான உபனிஷத் ப்ரம்மசூத்ரம், பகவத்கீதை என்ற ப்ரஸ்தானத்ரயியில் உள்ளது; த்வல்பாத ஸந்தர்சனம் = உனது திருவடிகளை நன்கு தர்சிக்க; ஒருவிதம் அங்ஙாஸ்வதிப்பான் = மேல்சொன்ன ஏதேனும் ஒருவிதத்தில் ஆஸ்வதிக்க; இரிப்போன் = காத்திருக்கின்றேன்; க்ருபாப்தே = கருணாஸாகரா; ஆனக்கானந்தப்ராப்தியருளின = யானைக்கு (கஜேந்திரனுக்கு) ஆனந்தமான மோட்சத்தை அருளின; பகவானல்லயோ நீ = பகவானில்லையா நீ.

எளிமையாக ஒரு புஷ்பத்தைச் சமர்ப்பித்தல், உனது நானாவிதமான குணாதியங்களை வர்ணிக்கும் கதைகளைக் கேட்டல், உனது திருநாம திவ்யநாமங்களைக் கீர்த்தனம் செய்தல் போன்று அனன்ய பக்தி ஸ்ரத்தையுடன் செய்வோருக்கு அதற்கேற்ப பகவானின் அருள் கிடைக்கும் என்று வேதாந்த வாக்கியங்கள் கூறுகின்றன. மேற்கூறிய வழிகளில் ஏதேனும் ஒன்றன் மூலமாக உனது திருப்பாதங்களைத் தரிசனம் செய்யும் பாக்கியத்துக்காகக் காத்து இருக்கின்றவன் நான். ஓர் யானைக்குக் கூட ஆனந்தமான மோட்சஸாம்ராஜ்யத்தை அருளினவனல்லவா நீ, ஹே கருணாஸாகரனே!

**123. கண்ணும் கறுத்தமலபோலெ யமன்டெ தூதர்**
**கண்ணும் மிழிச்சலறியோடி வருன்ன நேரம்**
**கண்ணன் களிச்சகளி கீர்த்தனமொன்னு கேட்டப்**
**பொண்ணன் மலச்சு மறியுன்னது காண்மனோ ஞான்**

கண்ணும் கறுத்த மல போலெ = கன்னங்கரேலென்று கறுத்த கண்களையுடைய மலைபோன்ற உருவம் கொண்ட; யமன்டெ தூதர் = யமனுடைய தூதர்கள்; கண்ணும் மிழிச்சலறியோடி வருன்ன நேரம் = கண்களை உருட்டி அலறிக்கொண்டு ஓடிவரும் தறுவாயில்; கண்ணன் களிச்சகளி = கண்ணனுடைய லீலாவிலாசங்களை; கீர்த்தனமொன்னு கேட்டு = ஒரு கீர்த்தனத்தைக்கேட்டு; பொண்ணன் = தடியன்; மலச்சு மறியுன்னது = மலைத்து குப்புறவிழுவதை; காண்மனோ ஞான் = நான் பார்ப்பேனா?

கோரரூபத்தையுடைய யமதூதர்கள் ப்ராணன் பிரியும் தறுவாயில், அலறிக்கொண்டு ஓடிவரும் வேளையில் கண்ணனுடைய லீலாவிலாசங்களைச் சொல்வது கேட்டு யமதூதர்கள் பயந்து குப்புற விழுவதை நான் பார்ப்பேனா? (மரண காலத்தில் உனது திருநாமத்தைச் சொல்லி யமபயம் அற்றவனாக ஆவேனா என்றும் அஜாமிளன் பெற்ற பாக்கியம் எனக்கும் கிடைக்குமா என்றும் தாத்பர்யம்).

**124. ஒன்னிச்சிருன்ன மகள் மக்களுடப்பிறன்னோ**
**ரின்னிச்சிரிக்குமவரென்னறியாதெ மோஹால்**
**மந்திச்ச மானஸமொரந்தத பூண்டிருப்போர்**
**என்னெக்குறிச்சருள்க நீ க்ருப வாசுதேவா!**

ஒன்னிச்சிருன்ன = ஒன்றாக இருந்த; மகள் மக்களுடப் பிறன்னோர் = மகள், அவளின் மக்கள், உடன் பிறந்தோர் ஆகிய பந்துக்கள்; இன்னிச்சிரிக்கும் = ஒருநாள் இல்லாமல்ப் போய்விடுவர் என்று; அறியாதெ மோஹால் = அறியாமல் மோஹத்தினால்; மந்திச்ச மானஸம் = மாயையில் உழல்கின்ற மனது; அந்தத பூண்டிருப்போர் = அஞ்ஞானத்தில் தோய்ந்து இருட்டாக இருக்கும்போது; என்னெக்குறிச்சு = என்பொருட்டு; நீ க்ருப அருள்க = நீ க்ருபை செய்ய வேண்டுமே.

புத்ர பௌத்ராதிகள், உடன் பிறந்தோர் என்று பந்துக்களுடன் கூடி வாழும்போது ஒருநாள் இந்த பந்தங்களெல்லாம் இல்லாமல் ஆகிவிடும் என்பதை உணராமல் மோஹாந்தகாரத்தில் உழலுகின்ற என் போன்றோரை நினைத்து நீ அருள்புரிய வேண்டும் கருணாஸாகரனான வாசுதேவா!

125. **ஓணம் வருன்னு விஷுவுண்டு பிறன்ன நாளுண்**
**டானந்தமிங்ஙினெயொராண்டிலஹோ ஜனானாம்**
**காணுன்னு நித்யவுமநித்யமிதென்னு செம்மே**
**வேணம் குறஞ்ஞொரு விசாரமகக்குருன்னில்**

ஓணம் வருன்னு = ஓணம் பண்டிகை வருகின்றது; விஷுவுண்டு = விஷுப் பண்டிகைக்கு விருந்துண்டு மகிழ்ந்து; பிறன்னாளுண்டு = பிறந்தநாளுக்கும் விருந்துண்டு; ஆனந்தமிங்ஙினெ = இப்படியாக ஆனந்தம் ஓராண்டில்; காணுன்னு = காண்கின்ற; நித்யம் செம்மெக் காணுன்னு = தினம் தினம் நன்றாக பார்க்கின்றோம்; அநித்யமிதென்னு = சாச்வதம் அல்ல என்பதை; வேணம் குறஞ்ஞொரு விசாரம் = சிறிதாகிலும் ஆத்மவிசாரம் வேண்டும்; அகக்குருன்னில் = மனதின் உள்ளே.

ஓணம் பண்டிகை, விஷுபண்டிகை, பிறந்தநாள் கொண்டாட்டங்கள் என்று ஒரு வருடத்தில் எத்தனையோ ஆனந்தமான தருணங்கள் வருகின்றபோதும் இவையெல்லாம் வந்ததுபோலவே போய் விடுபவை. சாச்வதமற்றவை என்பதை தினம் தினம் பார்த்துக் கொண்டிருந்தாலும் மனதின் உள்ளில் சிறிதேனும் ஆத்மவிசாரம் இருத்தல் வேண்டும்.

126. **நாளெத்துடங்ஙணமிதென்னு நினச்சிருன்னால்**
**நாளெக்கு நாளெயதினில்லொருடுக்கமென்னும்**
**நாளீகநேத்ர சரணாம்புஜஸேவ செய்வா**
**னாளாகிலப்பொழே துடங்ஙணமப்ரகாரம்.**

நாளெத்துடங்ஙணம் = நாளைக்கு ஆரம்பிக்க வேண்டும்; என்னு நினச்சிருன்னால் = என்று நினைத்துக் கொண்டிருந்தால்; நாளெக்குநாளெ = நாளை மறுநாள்; அதினில்லொருடுக்கமென்னும் = அதற்கு ஒரு முடிவேயில்லாமல்; நாளீகநேத்ரன் = தாமரைக் கண்ணன்; சரணாம்புஜ ஸேவ செய்வான் = சரணாரவிந்தங்களில் ஸேவை (பூஜை) செய்ய; ஆளாகில் = சந்தர்ப்பம் கிடைக்கும்போது; அப்பொழுது துடங்ஙணம் = அப்போதைக்கப்போதே ஆரம்பிக்கவேண்டும்.

பகவானை உபாஸனை செய்ய இன்றைக்கு, நாளைக்கு, நாளை மறுநாள் என்று நீட்டிக்கொண்டே போனோமேயானால் அதற்கு முடிவேயில்லை. ஆகையால் தாமரைக்கண்ணனாம் பகவானின் பாதஸேவை செய்ய சந்தர்ப்பம் அமையும்போது ஒரு வினாடிகூடத் தாமதியாமல் உடனடியாகச் செய்யவேண்டும்.

**127. மன்னாசயாலும் மதனாசயாலும்**
**பொன்னாசயாலும் மறுகுன்னு லோகம்**
**நின்னாச கண்டீலொருவர்க்குமய்யோ**
**கண்ணா! சமம் நல்குக மானஸே மே.**

மன்னாச = மண்ணாசை; மதனாச = காமமோஹம்; பொன்னாச = பொன்னாசை; மறுகுன்னு = மூழ்கி உழல்கின்றனர்; நின்னாச = உன்மேல் ஆசை (பக்தி); கண்டீலொருவர்க்குமய்யோ = ஒருவருக்குமே காணவில்லையே அய்யோ; சமம் நல்குக = ஸமாதானம் / சாந்தியைக் கொடுக்க/நல்க வேண்டுமே, மானஸே மே = எனது மனதில்.

மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை ஆகியவற்றில் அனைவரும் உழல்கின்றனரே, ஒருவர் கூட உன்பேரில் பக்தியைக் கொண்டவர்களாக இல்லையே ஹே கண்ணா! (இவற்றால் பாதிப்படையாமல்) என் மனதுக்குச் சாந்தியைத் தர வேண்டுமே.

**128. மோஹத்தினாலுமத! காமவசாலுமோரோ**
**நாகத்தினாய் அனுகரிப்பிது கர்மமேதல்**
**தாபிஞ்சமஞ்சரியொடொத்த களேபரம் நீ**
**பாவிச்சுகொள்கழகில், நந்தகுமாரகஸ்ய**

மோஹத்தினாலுமதகாமத்தினாலுமோரோ = ஓரோரோ மோஹங்களினாலோ அல்லது காமபூர்த்திக்காகவோ, நாகத்தினாய் =

அடையாதே. வெட்கப்படாதே; தவ வேண்டதுள்ளு = நீ செய்யவேண்டியது அதுமட்டுமே.

நாவே! உனக்கு என்னுடைய உபதேசம்/வேண்டுகோள் என்னவென்றால், நான் எப்போதெல்லாம் ஹரிநாமஸங்கீர்த்தனம் செய்ய முற்படுகின்றேனோ அப்போதெல்லாம் அந்த பகவன் நாமாவை வெட்கப்படாமல் உச்சஸ்தாயியில் சத்தமாகச் சொல்ல மறந்துவிடாதே.

132. **ஏணீத்ருசாம் வதனவும் பணவும் நினச்சிட்**
**டானந்த மூர்த்தியெ மறாய்க மனக்குருன்னே!**
**ப்ராணன் தளர்ன்னு தமகாதிகளாய்ச் சமஞ்ஞால்**
**வேண்டுன்னதொன்னுமெளுதல்ல நமுக்கறிஞ்ஞால்**

ஏணீத்ருசாம் வதனவும் = மான்பேடையின் கண்கள்போன்று கண்களுடைய சுந்தரிமார்; பணவும் நினச்சிட்டு = தனத்தையும் நினைத்துக் கொண்டு; ஆனந்தமூர்த்தியெ மறாய்க = ஆனந்த ஸ்வரூபனான பகவானை மறவாமலிரு; மனக்குருன்னே = சஞ்சலமான மனமே; ப்ராணன் தளர்ன்னு = சரீரம் தளர்ந்து ப்ராணன் அவதிப்படும்போது; தமகாதிகளாய்ச் சமஞ்ஞால் = தமகன், க்ஷுத்ரன்; சின்னன், மஹான், ஊர்த்துவன் என்று ப்ராணவாயுவானது மரணவாயுக்களாக மாறும்பொழுது; நமுக்கறிஞ்ஞால் வேண்டுன்னதொன்னும் = நாம் செய்ய வேண்டும் என்று நினைக்கும் எதையும்; எளுதல்ல = எளிதல்ல / சாத்தியமில்லை.

மான்பேடையின் கண்களைப்போன்ற கண்கள் உடைய சுந்தரிகளின் அழகில் மயங்கி அவர்களையும், சேர்த்து வைத்த தனத்தையும் நினைத்துக் கொண்டு காலத்தை கடத்திவிட்டு ஆனந்த ஸ்வரூபனான பகவானின் திருமுகத்தை மறந்துவிடாதே ஹே மனமே. உடல் சக்தியை இழந்து, ப்ராணவாயு தளர்ந்துபோகும் தருணத்தில் நாம் ஸத்கார்யம் செய்ய வேண்டும் என்று நினைத்தால் கூட செய்ய இயலாமல் போய்விடும் என்பதை அறிவாயாக.

133. **கோணிக்கல் நின்னு கரயுன்ன கிடாங்ஙள் போலெ**
**தோணிக்கல் நின்னு வலயும் வழிபோக்கர் போலெ**
**காணிக்ஷணம் பொழுதுபோலுமுபேக்ஷியாதே**
**காணித்தமென் தொழில் க்ருபாம் குரு வாசுதேவா!**

கோணிக்கல் நின்னு = மாடிப்படிக்கட்டுகளின் கீழ் நின்றுகொண்டு; கரயுன்ன = அழுகின்ற; கிடாங்ஙள்போலெ = குழந்தைகளைப்போல்; தோணிக்கல் = தோணிக்கடவு; நின்னுவலயும் = நின்று கொண்டு கஷ்டப்படும், வழிபோக்கர் = யாத்ரீகர்; காணிக்ஷணம் போலும் = ஒரு வினாடி கூட; உபேக்ஷியாதே = களையாமல், தாமதியாமல்; என் இத்தம் கருத்தில்கொண்டு, வாசுதேவர் க்ருபாம் குரு = வசுதேவ மைந்தனான ஹே! க்ருஷ்ணா என் மேல் க்ருபையைச் செய்.

மாடிப்படிக்கட்டுகளின் கீழ் நின்று கொண்டு அழும் குழந்தைகளைப்போல், படகுத்துறையில் நின்று கொண்டு அவதிப்படும் வழிபோக்கர்போலும் (இரண்டு தரப்பினரும் ஆதரவு தேடுபவர்கள் என்று தாத்பர்யம்) அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் என் நிலைமையை கருத்தில் கொண்டு ஒருவினாடி கூட தாமதியாமல், ஹே வசுதேவ மைந்தனாம் க்ருஷ்ணா, என்மேல் கருணை காட்டுவாயாக.

**134. வம்பேறுன்னஸுரர்க்கு டம்பு களவா**
**னம்பேறுமம்பாடியில்**
**பைம்பால் வெண்ண பகர்ன்னு கும்பமுடனே**
**ஸம்பித்ய மேவும் விபோ!**
**அம்போஜத்தினு ஸம்ப்ரமார்த்தியருளும்**
**நின் பாதமம்பீடினோ**
**ரென்பாபத்தினு கம்பமேகுக நிலிம்**
**பாராதிஸம்பேஷணா**

வம்பேறுன்ன அசுரர்க்கு = துஷ்டத்தனம் அதிகரித்துக் கொண்டுள்ள அசுரர்களின்; டம்பு களவான் = அஹம்காரம் நசிப்பிக்க; அன்பேறும் அம்பாடியில் = அன்பு, ப்ரேமை ஆகியவை நிறைந்திருக்கும் ஆயர்பாடியில், கோகுலத்தில்; பைம்பால் வெண்ண பகர்ன்னு = பசுவின்பால், புதுவெண்ணை ஆகியவற்றைக் கவர்ந்து உண்டபிறகு; உடனே கும்பம் ஸம்பித்யமேவும் = குடங்களை தட்டியுடைத்து அனைவரது இதயங்களையும் கொள்ளை கொள்ளும்; அம்போஜத்தினு = தாமரைக்கு; ஸம்ப்ரமார்த்தியருளும் = தாமரையை அசூயையினால் பாதிக்கச்செய்து; அன்பீடின = அன்புடன்; நிலிம்பாராதிஸம்பேஷணா = தேவர்களின் சத்ருக்களை மர்தனம் செய்தவனே.

துஷ்டர்களான அசுரர்களின் அஹங்காரத்தை நாசம் செய்யும் எண்ணத்துடன், அன்பும் ப்ரேமையும் நிறைந்த ஆயர்பாடியில் அவதரித்து, பசும்பால் வெண்ணை ஆகியவற்றைத் திருடித்தின்று குடங்களையெல்லாம் தட்டியுடைத்து அங்குள்ள அனைவரது இதயங்களையும் கொள்ளை கொண்ட ஹே விபோ! அழகிய தாமரைப் பூவிற்கும் உன்னை பார்த்துப் பொறாமையுண்டாகும் விதம் அழகார்ந்த உனது திருவடிகளில் அபயம் அடைந்த எனது பாபங்களைக் களைய வேண்டுமே அசுரமர்தனனான பகவானே!

135. நிர்மாயம் நிஜதர்மமாஸ்தயொடு செய்
தாகுன்ன ஸல்க்கர்மவும்
பெண்மாயத்திலகப்பெடாதெ மருவீ
டென்னாகில் நன்னாய் வரும்
கர்மாகர்ம விகர்ம மர்மமறிவா
னாளல்ல, நாமாம்ருதம்
நம்மாலாவது ஸேவ செய்க ஸுகமே
த்ருக்காலொடெத்தீடுவான்.

நிர்மாயம் =நிஜமான, ஆத்மார்த்தமான; நிஜதர்மம் = சொந்த வர்ணாஸ்ரம தர்மம்; ஆஸ்தயொடு = ஸ்ரத்தையுடன் கூட; பெண்மாயத் தகப்பெடாதெ = பெண்களில் மோஹமடையாமல்; மருவீடென்னாகில் = வாழ்ந்தோமேயானால்; நன்னாய் வரும் = சதுர்விதபுருஷார்த்தங்களும் கைகூடும்; கர்மாகர்ம விகர்கமர்மம் அறிவான் = கர்மம், அகர்மம், விகர்மம் ஆகியவற்றின் மர்மத்தை / தாத்பரியத்தை அறிய; ஆளல்லா = என்னால் இயலாது; நம்மாலாவது ஸேவ செய்க ஸுகமே = நம்மால் இயன்ற அளவு பகவத் சேவை சுகமாக செய்துகொண்டு; த்ருக்காலொடெத்தீடுவான் = திருப்பாதங்களைச் சென்று அடைய

ஆத்மார்த்தமான பக்தி ஸ்ரத்தையுடன் வர்ணாஸ்ரம தர்மங்களை அனுஷ்டித்துக் கொண்டு, ஸத்கர்மங்கள் செய்து கொண்டு பெண்ணாசையில் அகப்படாமல் வாழ்ந்தோமேயானால் ஸகல புருஷார்த்தங்களும் கைகூடும். கர்மம், அகர்மம், விகர்மம் ஆகியவற்றின் மர்மத்தை அறியும் திறன் எனக்கில்லையப்பா! நம்மால் இயன்ற அளவு நாமசங்கீர்த்தனம் செய்து கொண்டிருந்தோமேயானால் பகவானின் திருப்பாதங்களில் சேரமுடியும்.

**136. சித்தம் மறன்னு விஷயங்ஙளொரோன்னு நோக்கிச்**
**சத்தும் பிறன்னுமுழலாய்க மனக்குருன்னே!**
**விச்வம் நிறஞ்ஞு விளயாடின தம்புரானே!**
**சித்தே கலர்ன்னனுபவிப்பதினோர்த்துகொள் நீ.**

சித்தம் மறன்னு = ஆத்மாவை மறந்து; விஷயங்ஙளோரோன்னு நோக்கி = விஷயவஸ்த்துக்களைத் தேடிப்போய்; சத்தும் பிறன்னும் உழலாய்க = இறந்தும் பிறந்தும் உழலாமல் (புனரபி ஜனனம் புனரபி மரணம்); மனக்குருன்னே = ஹே சஞ்சலமான மனமே, விச்வம் நிறஞ்ஞு விளயாடின தம்புரானெ = ஜகத் முழுதும் வியாபித்து லீலைகள் புரிந்த. தம்புரான் = ஸர்வேச்வரன், மஹாப்ரபு; சித்தே கலர்ன்னு = மனதில் கலந்து; அனுபவிப்பதின்னோர்த்துகொள்நீ = பரமானந்தத்தை அனுபவிக்க பழகிக்கொள்.

ஹே சஞ்சலமான எனது மனமே, ஆத்மாவை மறந்து விஷயவஸ்த்துகளைத் தேடிப்போய், இறந்து, பிறந்து என்று உழலாமல், ஜகத்தில் முழுவதும் நிறைந்து லீலைகள் புரியும் அந்த ஸர்வேச்வரனை, பரப்ரஹ்மத்தை உன் மனதினுள்ளே வைத்து அனுபவிக்கப் பழகிக்கொள்.

**137. நோக்காவதாணு மனமே! மனுஜன்னு தன்னான்**
**நீக்காவதல்ல பவிதவ்யமொடுங்ஙுவோளம்**
**ஆக்கம் குறஞ்ஞனுபவங்ஙள் பகர்ன்னு காணாம்**
**வீர்க்குன்ன வீர்ப்பவிடெ நேர்த்து வரும் க்ரமேண.**

நோக்காவதாணு = சாத்தியமாகும்(பார்க்கமுடியும்); மனுஜன்னுதன்னால் = மனுஷயனால்; நீக்காவதல்ல = நீக்க இயலாது/ தவிர்க்க இயலாது; பவிதவ்யம் = கர்மபலம்; ஒடுங்ஙுவோளம் = அனுபவித்துத் தீரும்வரை; அனுபவங்ஙள் ஆக்கம் பகர்ன்னு குறஞ்ஞுகாணாம் = சுகதுக்க அனுபவங்கள் காலப்போக்கில் வீரியம் குறைந்து வருவதைக் காணலாம்; வீர்க்குன்ன வீர்ப்பு = ஜீவசுவாசம்; நேர்த்து வரும் க்ரமேண = படிப்படியாக குறைந்து விடும்.

136ஆம் ஸ்லோகத்தில் சொன்னபடி வாழ்வது, மனமே, சாத்தியமானதுதான். கர்மபலங்களை அனுபவித்துத் தீரும்வரை அவற்றைத் தவிர்க்க இயலாது. எனினும் காலப்போக்கில் படிப்படியாக அவற்றின் வீரியம் குறைந்து, அப்புறம் ஜீவசுவாசமும் மெதுவாக நீர்த்துப்போய், மோட்சத்தை அடையலாம்.

138. **போஷ்க்கும் பறஞ்ஞு பவனங்ஙளிலங்கனானாம்**
**போய்க்கூடுமப்பரிசு ராப்பகலுள்ளதெல்லாம்**
**நீர்ப்போள போலெ மருவுன்ன களேபராந்தே**
**சீர்ப்புண்டதும் நியதமல்ல நினய்க்கெடொ நீ.**

போஷ்க்கும் பறஞ்ஞு = வீண் வார்த்தைகள் சொல்லிக்கொண்டு; அங்கனானாம் = ஸ்த்ரீகளின்; பவனங்ஙளில் = வீடுகளில்; போய்க்கூடும் பரிசு = பொழுதைக் களைந்து; ராப்பகலுள்ளதெல்லாம் = இரவு பகல் முழுக்க; நீர்ப்போள போலெ = நீர்க்குமிளிபோல்; மருவுன்ன = நச்வரமான; களேபராந்தே = சரீரத்தின் உள்ளே; சீர்ப்புண்டதும் = சுவாஸம் உள்ளதும்; நியதமல்ல = சாசுவதம் இல்லை; நினய்க்கெடொ நீ = ஹே மனமே நீ நினைத்துப்பார்.

வெட்டிப்பேச்சு பேசிக்கொண்டு பெண்களின் வீடுகளில் இரவுபகல் பொழுதைக் கழிக்கும் போது ஹே மனமே, நீர்க்குமிழி போன்ற வழிந்துபோகக் கூடிய இந்த சரீரத்தில் உள்ளேயிருக்கின்ற சுவாசம் சாச்வதமல்ல என்பதை நினைத்துப்பார்.

139. **கன்யாகுப்ஜந்திலல்லாய்கயோ ஜனனமதோ**
**தாஸியெக் காமியாஞ்ஞோ,**
**த்வன் நாமத்தினுமிப்போள் கலியுகமதுகொண்**
**டுள்ள வீர்யம் குறஞ்ஞோ,**
**என்னோ நாலக்ஷரம்தான் முழுவனருததில்**
**குற்றமென்னில் பிணஞ்ஞோ**
**த்வன் நாமம் நானறிஞ்ஞிட்டனுதினமுரசெய்**
**தென்னதோ வாசுதேவா!**

கன்யாகுப்ஜத்திலல்லாய்கயோ ஜனனம் =எனது ஜனனம் கன்யாகுப்ஜத்தில் அல்லாததினாலா; அதோ = அல்லது; தாஸியெக்காமியாஞ்ஞோ = நான் தாஸியை காமிக்காத்ததினாலா; த்வன்நாமத்தினுமிப்போள் = உனது நாமத்திற்கும் இப்பொழுது; வீர்யம் குறஞ்ஞோ = வீர்யம் / மகிமை குறைந்ததா; கலியுகமது கொண்டுள்ள = இப்போது கலியுகம் என்பதால்; நாலக்ஷரந்தான் = நாலு அக்ஷரமுடைய நாராயணா என்ற நாமம்; முழுவன்ருததில் = முழுமையாகச் சொல்ல விடாமல்; என்னில் என்னோ குற்றம் பிணஞ்ஞோ = என் மேல் ஏதேனும்

குற்றம் இருந்தது அதனால் நீ என்னுடன் பூசல் கொண்டாயா; தவன் நாமம் ஞானறிஞ்ஞிட்டு = உனது திருநாமம் என்று தெரிந்தே; அனுதினம் = தினம் தோறும்; உரசெய்தென்னதோ = கீர்த்தனம் செய்தேன் என்பதாலா?

அஜாமிளன் பிறந்த கன்யாகுப்ஜத்தில் பிறக்காததாலா, தாஸியைக் காமிக்காததாலா, அல்லது இப்போது கலியுகமாகையால் உனது திருநாமத்திற்கு வைபவம் குறைந்து விட்டதா, அனுதினமும் உனது நாலெழுத்துத் திருமந்திரமான 'நாராயணா' என்னும் நாமத்தை முழுவதுமாகச் சொல்ல விடாமல் என்னிடம் என்ன குற்றம் குறை கண்டாய்? உனது திருநாமம் என்று தெரிந்தே அனுதினமும் உரைத்ததற் காகவா, எதற்காக என்னிடம் பூசல் கொண்டாய் ஹே வாசுதேவா!

**140. ஆர்க்கெங்கிலும் போருமி நாமமாத்ரம்**
**கீர்த்திக்க ஜன்மத்திலொரிக்கலென்னும்**
**சாஸ்த்ரங்ஙள் சொல்லும் த்ருட நிச்சயம் கேள்**
**போஷ்க்கென்னு வன்னீடொல நந்தஸுனோ.**

ஆர்க்கெங்கிலும் =யாருக்காக இருந்தாலும்; போருமி நாமமாத்ரம் = இந்த நாமம் (சங்கீர்த்தனம்) மட்டுமே போதும்; கீர்த்திக்க ஜன்மத்தி லொரிக்கலென்னும் = ஜன்மாவில் / வாழ்நாளில் ஒருமுறையேனும் கீர்த்தனம் செய்தால்; சாஸ்த்ரங்ஙள் சொல்லும் = சாத்திரங்கள் சொல்கின்றது; த்ருட நிச்சயம் கேள் = வேதவேதாந்த புராணங்களில் ஸர்வ நிச்சயமாகச் சொல்வதைக் கேள்; நந்தஸுனோ = ஹே நந்தகுமாரா; போஷ்க்கென்னு வன்னீடொல = அவையொன்றும் அஸத்யமாக ஆகி விடக் கூடாதே.

யாராக இருந்தாலும் வாழ்நாளில் ஒருமுறையேனும் உனது திருநாமத்தை பக்தியுடன் உரைத்தால் போதும், ஸம்ஸாரமுக்தியை அடையலாம் என்று சாத்திரங்கள் ஸர்வநிச்சயமாகச் சொன்னதெல்லாம் (என் விஷயதில்) பொய்யாகப் போய்விடக் கூடாதே ஹே நந்தபுத்ரா!

**141. புல்லாதியாயுள்ள சரீரமோரோன்**
**னெல்லாற்றிலும் புக்கு புறத்து போன்னேன்**
**நல்லோரு ஜன்மம் நரஜன்மமிப்போள்**
**வல்லாதெயாக்கீடொல தம்புரானே!**

புல்லாதியாயுள்ள = புல் பூண்டு முதலான; சரீரமோரோன்னெல்லாற்றிலும் = ஒவ்வொரு சரீரத்திலும் எல்லாவற்றிலும்; புக்கு = புகுந்து; புறத்து போன்னேன் = வெளியே வந்தேன்; நல்லோரு ஜன்மம் நரஜன்மமிப்போள் = தற்போது ஒரு நல்ல நரஜன்மம் கிடைத்திருக்கின்றது; வல்லாதெயாக்கீடொல = அதை வியர்த்தமாக ஆக்கிடாமல்; தம்புரானெ = பிரபுவே! ஸர்வேச்வரா!

புல் பூண்டிலிருந்து எத்தனையோ சரீரங்களில் புகுந்து வெளிவந்து பலவிதமான ஜன்மாக்களை எடுத்து, பின்பு தற்போது கைவல்யப்ராப்திக்கு மிகவும் ஏற்றதான நல்லதொரு மனுஷ்ய ஜன்மா கிடைக்கப் பெற்றேன். அதை வ்யர்த்தமாக ஆக்கிடாமல் பார்த்துக் கொள்ள வேண்டுமே ஸர்வேச்வரா!

**142. நெல்லாதியாயுள்ள பதார்த்தமோரோன்**
**னில்லத்துமில்லாஞ்ஞுழலுன்னதெல்லாம்**
**நல்லோரு நாமாம்ருதமாஸ்வதிச்சால்**
**தெல்லும் வரும் திய்யதுமென்னு வேண்டா**

நெல்லாதியாயுள்ள = நெல்முதலான; பதார்த்தமோரோன்னு = ஒவ்வொரு பொருளும் (வாழ்க்கைக்கு அவசியமான அனைத்துப் பொருள்களும்); இல்லத்து = க்ருஹத்தில்; இல்லாஞ்ஞு = இல்லாமல்; உழலுன்னதெல்லாம் = கஷ்டப்படுவதெல்லாம்; நல்லோரு நாமாம்ருதம் ஆஸ்வதிச்சால் = நன்மை விளைவிக்கும் திவ்யநாமம் என்னும் அமுதத்தைப் பருகினால்; தெல்லும் வரும் = நிமித்த மாத்திரத்தில் கிடைக்கப்பெறும்; என்னுவேண்டா = அதுமட்டுமல்ல; திய்யதும் = நெருப்பு கூட கிடைக்கப்பெறும் (சமைத்து உண்ண).

வாழ்க்கையைச் செவ்வனே வாழத் தேவையான அனைத்துப் பொருள்களும், எவையெவை நம் க்ருஹத்தில் இல்லாமல் அவதிப்படுகின்றோமோ, அவை அனைத்தும் பகவானின் திவ்யநாம வைபவத்தால் கிடைக்கப் பெறுவோம்.

**143. நன்னாயதும் திய்யதுமோர்த்து செய்தால்**
**நன்னாய்வரும் நித்யமவன்னு நூனம்**
**த்வன் நாமஸங்கீர்த்தனமாஸ்வதிச்சால்**
**ஒன்னாய் வரும் ஜீவபரப்ரபஞ்சம்**

நன்னாயதும் = லாப இச்சையைப் பற்றிக் கருதாமல் செய்யும் கர்மங்கள்; திய்யதும் = அவிஹிதகர்மங்கள்; ஓர்த்துசெய்தால் = இரண்டையும் வேர்பிரித்தறிந்து செய்தல்; அவனு நித்யம் நன்னாய் வரும் = அவனுக்கு எப்பொழுதும் நன்மை மட்டுமே நடக்கும்; நூனம் = நிச்சயமாக; த்வன் நாமஸங்கீர்த்தனமாஸ்வதிச்சால் = உன்னுடைய திருநாமஸங்கீர்த்தனத்தை சுத்த மனஸுடன் உச்சரித்தால்; ஒன்னாய் வரும் ஜீவபரப்ரபஞ்சம் = ஜீவாத்மா பரமாத்மா இரண்டும் ஒன்று தான் என்ற அத்வைத அனுபூதி ஸித்திக்கும்.

ஸத்கர்மங்கள் தீயகர்மங்கள் ஆகியவற்றை இனம் கண்டு கொண்டு, தனது சுயலாபத்தைக் கருதாமல், ஸ்வதர்மத்தைச் செய்து வந்தால் நிச்சயமாக அவனுக்கு எப்போதும் நல்லதே நடக்கும். அதேபோல் இடைவிடாது பகவானின் திருநாமஸங்கீர்த்தனத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்தால் ஜீவாத்மா பரமாத்மா ஐக்கியம் என்ற அத்வைத அனுபூதியும் சித்திக்கும்.

**144. நினக்கு நூறாயிரம் ஆசயுண்டென்**
**னிரிக்கிலும் கேள்க்கு மனக்குருன்னே**
**தனிக்குதான் போன்னவர் சொன்னதெல்லாம்**
**நினக்கு நன்னாயது நித்யமாயி.**

மனக்குருன்னே = சஞ்சலமான மனமே; நினக்கு நூறாயிரம் ஆச உண்டென்னிரிக்கிலும் = உனக்கு நூறாயிரம் ஆசைகள் உண்டு என்றாலும் கூட; கேள்க்கு = கேள்; தனிக்குதான் போன்னவர் = எல்லாவற்றிற்கும் ப்ராப்தரானவர்கள் (ஞானிகள்); சொன்னதெல்லாம் = உபதேசித்ததெல்லாம்; நினக்கு நன்னாயது = உன்னுடைய நன்மைக்காக; நித்யமாயி = சாச்வதமான.

ஹே சஞ்சலமான எனது மனமே; உனக்கு நூறாயிரம் ஆசைகள் இருக்கலாம். ஆனால் ஸர்வஞ்ஞர்களான மஹான்கள், ஞானிகள் ஆகியோரின் உபதேசங்களைக் கேட்டு, அதன்படி நடந்தாயானால் உனக்கு அது நித்யமான நன்மைகளைத் தரும் என்பதை அறிவாயாக.

**145. தண்ணீர் தாஹம் முழுத்துமடியனரிகெவன்**
**னந்தகன் தான் உரத்தும்**

**கண்ணீர்க்காராய் அடுத்துள்ளவர் தொழியுமொழிக்**
**காதெயொன்னிச்சு பார்த்தும்**
**தன்னெத்தானே மறன்னிட்டதி விவசதபூண்**
**டார்த்தனாய் வீர்த்துமக்கோப்**
**பென்னெக் கொண்டாக்கி வெச்சீடொல வரதவிபோ!**
**வாமகேஹாதி வாஸின்!**

தண்ணீர் தாஹம் முழுத்து = தண்ணீர் தாகத்தினால் தொண்டை வரண்டு; அடியனரிகெ = அடியேனின் அருகாமையில்; அந்தகன்தான் வன்னுரத்தும் = யமன் வந்து பயப்படுத்தும்போது; கண்ணீர்க்காராய் = கண்களில் தாரை தாரையாக கண்ணீரை வார்ப்பவர்கள்; அடுத்துள்ளவர் = உற்ற பந்துக்கள்; தொழியும் ஒழிக்காதெ = மார்பிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு அலறும்போது; ஒன்னிச்சு பார்த்தும் = சுற்றும் கூடி நின்று கொண்டும்; தன்னெத்தானெ மறன்னும் = தன்னையே மறந்து (புத்தியும் ஞாபகசக்தியும் அற்று); அதிவிவசத பூண்டு = மிகவும் பரவசனாக; வீர்த்தும் = ஊர்த்துவ சுவாசம் இழுத்துக் கொண்டும்; அக்கோப்பு = அந்தக்கோலம்; என்னெக் கொண்டாக்கி வெச்சீடொல = என்னை அந்த நிலைமயில் ஆக்கிவைத்து விடாதே; வாமகேஹாதிவாஸின் = இடத்துபுறத்தப்பா, வரதவிபோ! வரங்களை வாரி வழங்கும் ப்ரபுவே!

ஹே! இடத்துபுறத்தப்பா, வரதவிபோ! வாழ்க்கையின் கடைசித் தருணத்தில் தண்ணீர் தாஹம் தாங்கமுடியாமல் நாவு / தொண்டை வரண்டு, சுற்றமெல்லாம் கண்களில் கண்ணீர் மல்க மார்பிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு அழுது புலம்பும் வேளையில், என்னைத்தானே அறிந்து கொள்ள இயலாத புத்தி ஞாபகம் ஆகியவை அற்ற நிலையில், மரண சுவாசம் இழுக்கின்ற கோரமான ஓர் அவஸ்தைக்கு என்னைத் தள்ளிவிடாதேயப்பா!

146. **வேணுன்னீலொன்னுமோரோன்னிவயனுதிவஸம்**
**தன்னெ தானே நினச்சேன்**
**வேணுன்னு முற்றுமொன்னுண்டிதினு குருக்ருபா**
**பூரமே பந்துவுள்ளு**
**ப்ராணன் போவானடுத்துள்ளொரு ஸமயமதென்**
**னாகிலும் மே வரும் நாள்**

காணேணம் கோபநாரீகரதளிரில் நடக்
குன்னொரு ஆனந்த ப்ருங்கம்.

அனுதிவஸம் = தினம் தோறும்; இவயோரோன்னு = சுகதுக்க அனுபவங்கள் ஒன்றன் பின் ஒன்றாக; தன்னெதானெ நினச்சேன = வந்து போய்க் கொண்டிருக்கும் தாற்காலிக பந்தங்களாக; ஒன்னும் வேணுன்னில்ல = ஒன்றும் வேண்டியவையில்லை; முற்றும் வேணுன்ன ஒன்னுண்டு = மிகவும் வேண்டியது ஒன்றுண்டு – (மோட்சம்); அதினு = அதற்கு. குருக்ருபா பூரமே = பரிபூர்ணமான குருக்ருபை / குருவின் அருள். பந்துவுள்ளு = பந்துவாக உள்ளது; ப்ராணன் போவானடுத்துள்ளொரு ஸமயம் வரும்நாள் = உயிர் போகப்போகும் நேரம் நெருங்கும் தினம்; அதென்னாகிலும் = அது எப்போது என்றாலும்; கோபீநாரீகரதளிரில் நடக்குன்ன = கோபிகைகளின் கரங்களாகும் புஷ்பங்களில் மாறி மாறி நடக்கின்ற / பறக்கின்ற; ஓரானந்த ப்ருங்கம் = ஓர் ஆனந்தமயமான வண்டினை; மே காணணம் = எனக்குப் பார்க்க வேண்டும்.

தினம்தோறும் மாறி மாறி வந்து போய்க்கொண்டிருக்கும் சுகதுக்க அனுபவங்கள் ஒன்றுமே எனக்கு வேண்டியிருக்கவில்லை. ஆனால் நான் வேண்டுவது ஒன்று உண்டு. அதுதான் மோட்ச நிலை. அதை அடைவதற்கு குருவின் பரிபூர்ணக்ருபை மட்டுமே உற்ற பந்து. மரணபயம் நெருங்கும் வேளையில், அது என்றைக்கு வேண்டுமானாலும் இருக்கட்டும். அப்போது கோபிகைகளின் கர பங்கஜங்களில் மாறிமாறிப் பறந்து கொண்டிருக்கும் ஆனந்த மயமான வண்டான ஹே! பகவானே! உன்னை நான் காண வேண்டுமே.

**147. என்னே துடங்ஙியுதயாஸ்தமயங்ஙள்தோறும்**
**பிண்டென்னுறங்ஙியுமுணர்ன்னுமுடுத்துமுண்டும்**
**நந்திச்சு நந்ததனயன்டெ பதாம்புஜத்தில்**
**சேர்ன்னாவு நாவதினு கௌதுகமெந்திதாவூ.**

என்னே துடங்ஙி = என்றோ துடங்கியது, உதயாஸ்தமங்ஙள் = உதயம் அஸ்தமனம் ஆகியவை அடங்கிய பல ஜன்மங்கள்; பிண்டென்னு = சட்டென்று (நொடிப்பொழுதில்); உறங்ஙியுமுணர்ன்னுமுடுத்துமுண்டும் = உறங்கியும், உணர்ந்தும் / விழித்தும், உடுத்தும், உண்டும் (சாப்பிட்டும்); நந்திச்சு = வந்தனம் செய்து, நந்ததனயன்டெ பதாம்புஜத்தில் = நந்தகுமாரனின் பத கமலங்களில்; சேர்ன்னாவூ = சேர்ந்திருந்தேன் என்றால்; நாவதினு – நாவுக்கு; கௌதுகமெந்திதாவு = ஆசை என்றைக்கு வருமோ?

பலப்பல ஜன்மாக்கள் கடந்து வந்து, சூர்யோதயம், அஸ்தமனம் பார்த்து, தூங்கி, விழித்து, துணிகள் உடுத்து, பலவிதமான ஆஹாரம் சாப்பிட்டு, வாழ்நாள் சட்டென்று ஒரு நொடியில் போய் விடுகின்றதே. நந்தபுத்ரனாம் ஸ்ரீக்ருஷ்ணனின் பதகமலங்களை நினைந்து வந்தனம் செய்து, அவனது மலரடியில் சேர்ந்திருக்கும் நிலையில் என்றால் (ஏக்கத்தை வெளிப்படுத்துகின்றார்) அம்பாடிக் கண்ணனின் நாமங்களைக் கீர்த்தனம் செய்ய இந்த நாக்கு என்றைக்குத் தான் ஆசைப்படுமோ?

**148. கண்ணன் களிக்கும் களிக்கோப்பு காண்மான்**
**என்னே கொதிக்குன்னு தயாம்புராசே!**
**த்வன் நாம ஸங்கீர்த்தன மெண்ணியெண்ணித்**
**தொண்ணூறடுத்து பரிவல்ஸரம் மே!**

கண்ணன் களிக்கும் களிக்கோப்பு = கண்ணன் வைத்து விளை யாடும் சாமான்களைப் பார்க்க (கண்ணனின் திருவிளையாடல்களைக் காண); என்னே கொதிக்குன்னு = எவ்வளவு நாட்களாக ஏங்குகின்றேன்; தயாம்புராசே = தயாஸாகரனே / கருணைக்கடலே; த்வன் நாமஸங் கீர்த்தனமெண்ணி யெண்ணி = உனது திவ்ய நாம ஸம்கீர்த்தனத்தை நினைந்து நினைந்து; தொண்ணூறடுத்து பரிவல்ஸரம் மே = எனக்கு வயதும் தொண்ணூறை நெருங்கிவிட்டது.

ஸ்ரீக்ருஷ்ணனின் திருவிளையாடல்களை / லீலைகளைப் பார்க்க எவ்வளவு நாட்களாக நான் ஏங்கிக் கொண்டிருக்கின்றேன்? உனது திவ்ய நாமங்களை அனுதினமும் கீர்த்தனம் செய்தே எனக்கு வயதும் தொண்ணூறை நெருங்கிவிட்டது.

**149. நந்திச்சுகொள்க தவ வன்னதுகொண்டு நித்யம்**
**நிந்திக்க வேண்ட கதிபேதமொரோன்னு கண்டால்**
**வந்திச்சுகொள்க ஸகலாத்மகம் ஈச்வரம் தம்**
**மந்திச்சு போகருதஜஸ்ரம் அகக்குன்னே!**

அகக்குருன்னே = ஹே மனமே; நந்திச்சுகொள்க தவ வன்னது கொண்டு நித்யம் = ஒவ்வொரு தினமும் என்னென்னக் கிடைக்கின்றதோ அதைவைத்துக் கொண்டு திருப்தியடை, நிந்திக்கவேண்ட = நிந்தனை (தூஷணை) செய்ய வேண்டாம்; கதிபேதம் = க்ரஹப்பிழைகள் /

துக்கக்காரணங்கள்; ஓரோன்னு கண்டால் = ஒவ்வொன்றும் பார்க்கும் பொழுது; வந்திச்சு கொள்க = வந்தனம் செய்துகொள்; ஏகாத்மகம் தம் ஈச்வரம் = ஸர்வ சராசரங்களிலும் நிறைந்திருக்கும் ஏகாத்மாவான ஸர்வேச்வரனை; அஜஸ்ரம் = இடைவிடாமல்; மந்திச்சு போகருது = மந்தமாக / அஜாக்ரதையாக இருந்துவிடாதே.

ஹே மனமே! ஒவ்வொரு நாளும் என்ன கிடைக்கின்றதோ, என்ன அனுபவம் ஏற்படுகின்றதோ அதை வைத்துக் கொண்டு த்ருப்தியாக இரு. கிரஹப்பிழைகள் அல்லது துக்கமான ஸம்பவங்கள் நிகழும்போது எவரையும் எதையும் தூஷணை செய்ய வேண்டாம். சுகம் துக்கம் இரண்டையும் சமமாகப் பார்க்கப் பழகிக்கொள். ஸர்வ ஜீவராசிகளிலும் அந்தராத்மாவாக விளங்குகின்ற ஸர்வேச்வரனை இடைவிடாமல் வந்தனம் செய்து கொண்டிரு. இந்த விஷயத்தில் சற்றும் மந்தமாக / அஜாக்கிரதையாக / அசட்டையாக இருந்து விடாதே.

**150. நாவே நீ சொல்லியாஞ்ஞால் அகிலமபலமென்**
**னக்ர லோகே ப்ரஸித்தம்**
**நாவாலொன்னுச்சரிச்சாலவனம்ருதஹரன்**
**பின்னெயென்னும் ப்ரஸித்தம்**
**நாவே! நாணம் வருன்னு மனஸி வெளிவராஞ்**
**ஞிங்ஙினேயெண்ணியெண்ணீச்**
**சாவானோ நாமஸங்கீர்த்தன மஜித விபோ!**
**தேஹி தேஹி ப்ரஸாதம்.**

அஜிதநாமஸங்கீர்த்தனம் = பகவன் நாமஸங்கீர்த்தனம்; நீ சொல்லியாஞ்ஞால் = நீ பக்தியுடன் சொல்வதில்லையென்றால்; அகிலம் அபலம் = மற்றவையெல்லாமும் நிஷ்பலம்; என்னு லோகே ப்ரஸித்தம் = என்றும் உலகம் முழுதும்ப்ரஸித்தம்; நாவால் ஒன்றுச்சரிச்சால்ப் பின்னே = நாவினால் ஒருமுறை சொன்னால் அதன் பிறகு; அவன் அம்ருதஹரன் என்னும் ப்ரஸித்தம் = அப்படிப்பட்டவன் அமிர்தத்தை அடைந்தவன் / ஜனன மரணங்களிலிருந்து விடுபட்டவன் என்றும் ப்ரஸித்தம்; நாவே நாணம் வருன்னு = நாவே எனக்கு உன்னுடைய அசட்டையைக் கண்டு வெட்கமாக இருக்கின்றது; மனஸா வெளிவராஞ்ஞு = மனதில் ஞானம் வராமல்; இங்ஙினெயெண்ணியெண்ணிச் சாவானோ = இப்படி தினங்களை

எண்ணி எண்ணி வாழ்நாளை வீணடிக்கவோ; அஜித = யாராலும் ஜெயிக்க முடியாதவன்; விபோ =ப்ரபோ, தேஹிதேஹி ப்ரஸாதம் = உனது பிரசாதத்தை மீண்டும் மீண்டும் கொடு.

ஹே நாவே! பகவானின் குணகணங்களை நன்றாகக் கீர்த்தனம் செய்யவில்லையென்றால் மற்ற எல்லா கர்மானுஷ்டானங்களும் நிஷ்பலம் என்பது உலகப் ப்ரஸித்தமல்லவா? அதேபோன்று பகவன் நாமத்தை ஒருமுறையேனும் பக்தியுடன் ஒருவன் கீர்த்தனம் செய்தானேயானால் அதன் பிறகு அவனுக்கு ஜனனமரண பயம் இல்லாமல் போய்விடும் என்பதும் உலகப் ப்ரஸித்தம். நாவே, பகவன் நாமாவைச் சொல்ல நீ காட்டும் அசட்டையைப் பார்த்தால் எனக்கு வெட்கமாக இருக்கின்றது. மனதில் ஞானம் உதிக்காமல் வீணாக நாட்களையெண்ணியெண்ணி வாழ்க்கையை வீணடிக்கவா நீ உத்தேசித்திருக்கின்றாய்? ஹே ப்ரபோ! எனக்கு உன்னுடைய நாமாம்ருதமான ப்ரஸாதத்தைக் கொடுப்பாயாக!

**151. ராதாஸ்தனங்ஙளிலொளிச்சுருளுன்ன நின்மை**
**பேதாஸ்ரயம் மம விடுத்தருள் மோஹமெல்லாம்**
**போதாஸ்ரயம் தவ களேபரமோர்த்து கொள்வான்**
**ஏதல்ப்ரபோ! பஹுவிரோதகமாய் வருன்னு.**

ராதாஸ்தனங்ஙளில் = ராதையின் குசங்களில்; ஒளிச்சு = ஒளிந்துகொண்டு; அருளுன்ன நின்மை = அருளுகின்ற நினது திருமெய்; பேதாஸ்ரயம் = வேறொரு ஆஸ்ரயம் / சரணம்; மம = எனக்கு; விடுத்து = விடுவித்து; போதாஸ்ரயம் = நானற்றத்தற்க்கான ஏக ஆஸ்ரயம்; களேபரம் = திருவுடல்; ஓர்த்துகொள்வான் = நினைவில் வைத்துக் கொள்ள, பஹுவிரோதகமாய் வருன்னு = மிகவும் வைருத்தியமாக ஆகின்றது; ஏதல் = இப்படியாகவுள்ள.

ராதாதேவியின் ஸ்தனங்களில் ஒளிந்து கொண்டிருப்பவன் என்ற பாவனையிலுள்ள உன்னுடைய ரூபம், சுத்த ஞானஸ்வரூபமான உனது ஸச்சிதானந்த ஸ்வரூபம் ஆகியவை தியானிப்பதற்கு சற்று விரோதமாக உள்ளது. எனது மனதிலுள்ள அந்தகாரங்கள் / மோஹங்களையெல்லாம் அகற்றி அடியேனுக்கு அனுக்கிரகம் செய்யவேண்டுமே.

**152. நாளத்தில் தடயுன்னதும் நடநடே**
**நில்க்குன்ன வாயுக்கள் போய்**

**ஓளத்தில்க் குறுகுன்னதும் சில பிழச்**
**சோடும் மனோவ்ருத்தியும்**
**நீளத்தில் கயறும் பிடிச்சு யமனும்**
**நீரோடெ பந்துக்களும்**
**நாளத்தெத் தொழிலிப்ரகாரமருளாய்**
**கென் போற்றி நாராயணா!**

நாளத்தில் தடயுன்னதும் = கண்டநாளத்தில் கஃபம் கட்டியதால் நெருடுகின்ற; நடநடெ நில்க்குன்ன வாயுக்கள் = ஜனனம் முதற்கொண்டுள்ள ப்ராணவாயுக்கள்; ஓளத்தில் போய் குறுகுன்னதும் = ஒவ்வொன்றாக ஓய்ந்து போவதும்; பிழச்சோடும் சில மனோவருத்தியும் = தாறுமாறாக ஓடுகின்ற மனோ விகாரங்களும்; நீளத்தில் கயறும் பிடிச்சு யமனும் =நீளமான கயிறுடன் யமனும்; நீரோடெ பந்துக்களும் = கண்ணீருடன் பந்து ஜனங்களும்; நாளத்தெ = வரவிருக்கின்ற; தொழில் = மனோசரீர சேஷ்டைகள்; இப்ரகாரம் = இந்த மாதிரி; அருளாய்க = வராமல் இருக்க வேண்டுமே; என் போற்றி நாராயணா = அடியேனுடைய ஏக ஆஸ்ரயமாகவுள்ள ஸ்ரீமன் நாராயணா!

கண்டநாளத்தில் தடைப்படுகின்ற ப்ராணவாயுக்களில், சிலது ஓய்ந்து போவதும், தாறுமாறாக ஓடிக்கொண்டிருக்கும் மனோ வ்ருத்தியுமாக நான் அல்லல்படும் போது யமனின் தூதர்கள் காலபாசத்துடன் வருவதும், பந்து ஜனங்கள் கண்ணீர் விடுவதும் ஆக, வரவிருக்கின்ற சித்த சரீர உபாதைகளிலிருந்து என்னைக் காக்க வேண்டுமே, நாராயணா!

**153. நாவில்லாதெ ஜனிக்கயோ நடநடே**
**யுள்ளோரிளக்காய்கயோ**
**நாமத்தெப் படியாய்கயோ நரகமென்**
**னோர்த்தால் குளுர்ப்பாகயோ**
**நாவில் துர்கடமாகயோ நரகுலத்தில்**
**ஜன்மமில்லாய்கயோ**
**நாமோச்சாரணமெந்து பந்தமறிவுள்**
**ளோரும் த்யஜிச்சீடுவான்.**

நாவில்லாதெ ஜனிக்கயோ = ஜன்மனா நாவில்லாமல் (ஊமையாக) பிறந்ததாலா; நடநடேயுள்ளோர் = வழிவழியாக வந்த மூதாதையர்;

இளக்காய்கயோ = ஸதுபதேசம் கொடுக்காததினாலா; நாமத்தெப் படியாய்கயோ = திருநாமத்தைப் படித்துத்தெரிந்து கொள்ளாததாலா; நரகமென்னோர்த்தால் குளுர்ப்பாகயோ = நரகத்தைக் குறித்த பயம் இல்லாமல் குளிர்விட்டுப்போனதாலா; நாவில் துர்கடமாகயோ = நாக்கில் நாமாக்கள் நுழையாததாலா (வழங்காததாலா); நரகுலத்தில் ஜன்மமில்லாய்கயோ = இது துர்லபமான மனுஷ்ய ஜன்மம் என்ற அறிவில்லாததினாலா; அறிவுள்ளோரும் =அறிவுடையோரும்; நாமோச்சாரணமெந்து பந்தம் த்யஜிச்சீடுவான் = நாமோச்சாரணத்தைக் கைவிட என்ன காரணம்?

ஜன்மனா ஊமையாகப் பிறந்ததாலா, மூத்தோர் சரியாக உபதேசங்கள் வழங்காததாலா, திருநாமத்தைச் சரியாகப் படிக்காததாலா, நரகத்தைக் குறித்த பயம் விட்டுப் போனதாலா, நாமம் நாவில் வழங்காததாலா அல்லது மானுட ஜன்மம் கிடைத்ததின் பெருமையை உணராததாலா, என்ன காரணத்தினால் அறிவுள்ளவர்கள் கூட நாமஸங்கீர்த்தனம் செய்வதை உதாசீனப்படுத்துகின்றனர்?

**154. நாமோச்சாரணமொன்னு கொண்டு கதி**
**வன்னு பண்டு தாஸீபதேர்**
**நாமோச்சாரணமொன்னு கொண்டு முனியாய்**
**வால்மீகி பண்டே துலோம்**
**நாமோச்சாரணமொன்னு தன்னெ மதியென்**
**னோதுன்னு வேதாந்தவும்**
**நாமோச்சாரணமென்னதெங்கலருளீ**
**டானந்த பாதோநிதே.**

நாமோச்சாரணமொன்னு கொண்டு = ஒருமுறை நாராயணா என்ற நாமத்தைச் சொன்னதால்; கதிவன்னு பண்டு தாஸீபதேர் = முன்பு தாஸியின் பதியாக இருந்த அஜாமிளனுக்கு ஸத்கதி வந்தது; முனியாய் வால்மீகி பண்டேதுலோம் = வேடனாக இருந்தவன் ராமநாம மஹிமையினால் வால்மீகியாக முனிவனானதும் ப்ரஸித்தம்; மதியென்னோதுன்னு வேதாந்தவும் = நாம உச்சாரணம் ஒன்று மட்டுமே போதுமென்று வேதாந்தவும் சொல்கின்றது; எங்கலருளீடு = எனக்கு அருளிச்செய்; ஆனந்த பாதோநிதே = ஆனந்த ஸாகரமே.

முன்பு தாஸியின் பதியாக இருந்த அஜாமிளனுக்கு நாராயணா என்ற ஒருநாமத்தை ஜபித்த மாத்திரத்திலேயே ஸத்கதியைக் கொடுத்ததும்; வேடனாக இருந்த வால்மீகிக்கு ராமா என்ற நாமத்தை ஜபித்ததாலேயே அவரை முனிவனாக்கியதும், நாமஜபம் ஒன்று மட்டும் போதும் மேல்கதியை அடைய என்று வேதாந்தங்களும் - கோஷிக்கின்ற நாமோச்சாரணத்தை ஹே! ஆனந்த ஸாகரனான பகவானே, எனக்கு அருள வேண்டுமே.

**155. நாமாம்ருதம் நாவிலிரிக்குமப்போள்**
**ஸோமாம்ருதம் விஸ்ம்ருதமாய் வருன்னு**
**நாமாம்ருதம் பார்த்து நிறச்சு கொண்டால்**
**நாமாம்ருதம் காணம்ருதம் ம்ருதானாம்**

நாமாம்ருதம் = திருநாமம் என்கின்ற அமுதம்; நாவிலிரிக்கு மப்போள் = நாவால் ஜபித்துக் கொண்டிருந்தால்; ஸோமாம்ருதம் = சோமரசமாகும் அமுதம்; விஸ்ம்ருதமாய் வருன்னு = மறந்து விடுகின்றது; நாமாம்ருதம் பார்த்து நிறச்சு கொண்டால் = நாமரசத்தை ஸ்ரத்தையுடன் க்ரஹித்துக் கொண்டால்; காணம்ருதம் = அம்ருதம் என்று காண்; ம்ருதானாம் = மர்த்யானாம் / மானுடர்க்கு.

பகவானது திருநாமங்களைச் சதா ஜபித்துக் கொண்டிருந்தால் தேவர்களின் பானமான அமுதத்தின் (தேவபீயூஷம்) சுவை கூட மறந்து விடும். பக்தி ஸ்ரத்தையுடன் நாமரசத்தைப் பருகினோமேயானால் அதுவே மானுடர்க்கு அமிர்தமாகும்.

**156. நாவின்னொரித்திரி விகல்ப்பமதென்னிரிப்பூ**
**நாமின்னியேதொரு விஜாதியில் வன்னு ஞாயம்**
**நாமின்னு தன்னெயறியேணமறிஞ்ஞுகொள்வா**
**னாமித்திரிப்பு திருநாமவுமென்னுவெப்பூ.**

நவின்னொரித்திரி = நாவிற்கு லவலேசமாவது; விகல்ப்பம தென்னிரீப்பூ = சந்தேகம் உண்டு என்றால் (ஜபம் செய்ய தயங்கினால்) இன்னி = இதுமுதல் (அடுத்த ஜன்மாவில்); நாம் வன்னு ஞாயம் = நாம் முறையாக (கர்மானுஸரம்) ஜனிப்போம்; நாமின்னு தன்னெயறியேணம் = நாம் இன்றே அறிந்துகொள்ள வேண்டும்; அறிஞ்ஞுகொள்வான் =

அறிந்து கொள்ள; ஆமித்திரிப்பு = (ஆம் இதிஇரிப்பு) அவ்வாறே ஆகட்டும் என்று. திருநாமவும் என்னு வெப்பூ = திருநாமத்தையும் காத்திருந்து.

நாமஸங்கீர்த்தனம் செய்ய நம் நாவு வழங்கவில்லை என்றால் அடுத்த பிறவியில் எப்படிப் பிறப்போம் என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும் (நாவால் பேசமுடியாத பிறவியாக இருக்கலாம் என்று தாத்பர்யம்); அப்படிப்பட்ட ஒரு பிறவியில் நாமஜபம் செய்ய முடியுமா என்று ஏங்கிக் காத்திருக்கும் நிலை வந்துவிடும் என்று இன்றே உணருதல் வேண்டும் (அசுரபாலகர்களுக்கு ப்ரஹ்லாதனின் உபதேசம்)

**157. கண்ணில் கூத்தாடுவானொருவக, செவியில்**
**பாட்டுபாடான் களிப்பான்**
**கண்ணுந்திக்கொண்டு வேறே ஸததமிவரொடே**
**நின்னு போராடுவானும்**
**கண்ணா நின்மேனியாகுன்னது கருதி முதா**
**நாமமோதீடுவானும்**
**காணுன்னேனில்லுபாயம் தவ கருணயொழிஞ்**
**ஞொன்னும் இந்தீவராக்ஷா!**

கண்ணில் கூத்தாடுவானுண்டொருவக = கண் என்னும் இந்திரியத்தை வசப்படுத்த பலதும் உண்டு; செவியில் பாட்டு பாடான் = கர்ணேந்திரியத்தை வசப்படுத்த பலதரமான பாடல்கள்; கண்ணுந்திக் கொண்டு களிப்பான் = அத்புதப்படுத்துகின்ற வேறு பலதும் (கர்மேந்திரியங்கள் வசப்படுவன); ஸததம் = எப்பொழுதும்; அவரொடெநின்னு போராடுவானும்; அவற்றையெல்லாம் வைராக்கியத்துடன் நேரிடவும்; நின் மேனியாகுன்னது கருதி = உனது திருமேனி என்று நினைத்து; இந்தீவராக்ஷா = தாமரைக்கண்ணா; தவ = உன்னுடைய; கருணயொழிஞ்ஞொன்னும் = கருணையைத் தவிர மற்றொன்றும்; காணுன்னேனில்ல உபாயம் = உபாயம் ஒன்றும் காணவில்லை.

கர்மேந்திரியங்களையும் ஞானேந்திரியங்களையும் தம் வசப்படுத்தும் எத்தனையோ தீயன உள்ளதினால், அவற்றையெல்லாம் இடைவிடாது வைராக்கியத்துடன் எதிர்கொள்ள திருநாமஸங்கீர்த்தனம் ஒன்று மட்டுமே ஏக அவலம்பம். அதற்கு உனது கருணை வேண்டுமே *தாமரைக்கண்ணனாம் க்ருஷ்ணா!*

158. தேஹத்தின்மேல் தறக்குன்னது கிமபி பறிக்
கில்ல முள்ளும், மஹாத்மா
தேஹத்தின்மேல் சொறிஞ்ஞீடினதொரிடமொதுக்
காவதல்ல நினக்கோ
ஸோஹம் பாவத்தினூற்றம் பலவழி தெளிவாய்க்
காட்டி மற்றுள்ளவர்க்கும்
மோஹம் தீர்க்கும் ஸதானந்தித பரமசிவப்
ப்ரஹ்மமே தே நமோஸ்து.

மஹாத்மா = மஹான்; தேஹத்தின்மேல் தறக்குன்னது கிமபி முள்ளும் பறிக்கில்லா = உடம்பில் குத்தும் முள்ளைக் கூட பறித் தெடுக்க மாட்டார்கள்; தேஹத்தின்மேல் = சரீரத்தில்; சொறிஞ்ஞீடினதொரிடம் ஒதுக்காவத்ல்லீ = ஓரிடத்தில் அரிப்பு எடுத்தால் அதை சொறிந்து கொள் வதாலும் ஆச்வாசமாக ஆகாது (ஸ்வகர்ம பலத்தை அனுபவித்துத்தான் தீர்க்க வேண்டும் இதரகர்மங்கள் ப்ராயச்சித்தமாகா என்று தாத்பர்யம்); நினக்கோ = உனக்கும் கூட; ஸோஹம் பாவத்தினு = அந்த பரப்ரஹ்மமே நான்தான் என்ற பாவனை (சிவோஹம், அஹம் ப்ரஹ்மாஸ்மி); ஊற்றம் = சக்தி பலவழி தெளிவாய்க்காட்டி = பலவிதமான வழிகளைக் காட்டி; மற்றுள்ளவர்க்கும் மோஹம்தீர்க்கும் = மற்றவர்களின் ஸம்ஸார மோகத் திற்கு முடிவைக் கொடுக்கின்ற; ஸதானந்தித = ஸதா ஆனந்த ரூபமாகவுள்ள; பரமசிவ = பரமமங்கள ஸ்வரூபனே; ப்ரம்மே = ப்ரம்மமே = ப்ரம்மானந்தஸ்வரூபனே; தே நமோஸ்து உனக்கு நமஸ்காரம் உரித்தாகுக.

இந்த தேகமல்ல நான் என்ற ஞானமுள்ள மஹான்கள் சரீரப்ரக்ஞை சிறிதுமில்லாமல் இருப்பார்கள். மேலும் கர்மாக்களின் பலன்களை அனுபவித்துத் தான் தீருமே தவிர இதர ப்ராயச்சித்தங்களினால் அவை தீருவதில்லை. பகவானால் கூட அதைத் தடுக்க இயலாத நிலையில், ஸோஹம், அஹம் ப்ரஹ்மாஸ்மி, சிவோஹம் என்று பலவிதமாக ப்ரம்மஸாக்ஷாத்க்காரத்திற்கு வழிகாட்டி, மற்றவர்களின் ஸம்ஸார மோஹங்களைத் தீர்த்து வைக்கும் ஹே பரமசிவ பரப்ரம்மமே உனக்கு எனது நமஸ்காரங்கள் உரித்தாகுக.

159. ஹா க்ருஷ்ண ஹா க்ருஷ்ண க்ருபாம்புராசே!
ஹே க்ருஷ்ண ஹே க்ருஷ்ண ஸ்ருணுஷ்வ விஷ்ணோ!
ஹீ க்ருஷ்ண ஹீ க்ருஷ்ண மஹத்யுபேக்ஷா
மாக்ருஷ்ண மாக்ருஷ்ண பரித்யஜாஸ்மான்.

ஹா = துக்கஸூசனமான ஸம்போதனம்; க்ருபாம்புராசே = கருணைக்கடலே; ஹே = கூப்பிடுதல்; ஸ்ருணுஷ்வ விஷ்ணோ = விஷ்ணுவேயான நீ கேட்க வேண்டும்; ஹா = க்ஷீணமாக தீனமாக விளித்தல்; மஹதி உபேக்ஷாம் = என் புத்தியிலுள்ள உதாசீனபாவத்தை; ஆ = அகற்ற வேண்டுமே; பரித்யஜாஸ்மான் = அடியன்களை உதறித்தள்ளி விடாதே.

துக்கபரவசனான, தீனனான என்னையும் (எல்லோரையும் சேர்த்து) க்ருஷ்ணா, சாக்ஷாத் மஹாவிஷ்ணு ஸ்வரூபனாகவும் கருணைக் கடலாகவு முள்ள நீ அடியார்களின் ஏங்கல்களையும் கேட்க வேண்டுமே, எங்களை கைவிட்டுவிடாதே பகவானே!

**160. தேஹத்தில் ஸூகமே கடிச்ச மசகாதி**
**அஞ்ஞானமாதௌ ததா**
**தேஹத்தின்னு விசப்புதாஹமறியாய்**
**கென்னுண்டு ரண்டாமதும்**
**தேஹத்தெக் கஷணிக்கிலும் விஹதியில்**
**லென்னங்நு மூன்னாமதும்**
**ஸோஹம்பாவ த்ருடானுபூதியருளீடா**
**னந்த பாதோநிதே!**

ஆதௌ = முதலாவதாக; தேஹத்தில் ஸூகமே கடிச்ச மசகாதி ததா = உடம்பில் கடிக்கும் கொசு ஆகியவைபோல;ரண்டாமதும் = இரண்டாவது வகை; தேஹத்தின்னு விசப்பு தாஹமறியாய்கென்னு = சரீரத்தில் பசி, தாஹம் போன்ற அவஸ்தைகள் ஆத்மாவை பாதிக்காது என்பதுபோல், மூன்னாமதும் = மூன்றாவது வகை; தேஹத்தைக் கஷணிக்கிலும் = உடம்பை துண்டு துண்டாக வெட்டினாலும்; விஹதியில்லென்னு = ஆத்மாவிற்கு நாசம் இல்லையென்றும்; ஸோஹம் பாவ த்ருடானுபூதி = ப்ரஹ்மஸாக்ஷாத்கார அனுபூதியை; அருளீடு = அருளிச்செய்; ஆனந்த பாதோநிதே = ஆனந்த ஸாகரமே!

ஆரம்பத்தில் அஞ்ஞானரூபமாக இருந்து கொண்டு, பிறகு முதல் படியாக உடம்பில் கொசு கடித்தாலும் அதைப் பொருட்படுத்தாமல் இருக்கும் நிலையை அடைந்து, இரண்டாவதாக பசி, தாஹம் போன்ற சரீர உபாதைகள் ஒருபோதும் ஆத்மாவைப் பாதிக்காமல் இருக்கும் நிலையை அடைந்து,

பிறகு மூன்றாவதாக சரீரத்தைக் கணுக்கணுவாக வெட்டினால்க் கூட ஆத்மாவிற்கு நாசமில்லை என்கின்ற நிலைக்கு உயர்ந்து, ப்ரம்மஸாக்ஷாத்காரம் என்ற திவ்யானுபூதியை எனக்கு அருளவேண்டுமே ஹே ஆனந்தஸாகரனான பகவானே!

**161. தேஹத்தில் சொறியும் ஸஹிக்கருததிக்**
**க்ரூரம் விசப்பொட்டுமே**
**மோஹத்தில் கலருன்ன ஞானது வ்ருதா**
**மோஹிப்பதெந்தெந்துவான்**
**ஸ்நேஹத்தோடெ யசோத புல்கின கிசோ**
**ரன் தானொழிஞ்ஞேகதா**
**ஸ்நேஹிப்பீலது போருமென்னு மனஸா**
**நாமங்ஙள் ஓதீடினேன்.**

தேஹத்தில் சொறியும் ஸஹிக்கருது = சரீர துக்கங்கள் உடம்பில் ஏற்படும் அரிப்பு போல் சொறிந்து கொண்டால் அஸுகம் (வியாதி) அதிகமாகுமே தவிர குறையாது (அதுபோல் கர்மபலன்கள் அனுபவித்துத்தான் தீர்க்க வேண்டும் என்று தாத்பர்யம்); அதிக்ரூரம் விசப்பொட்டுமே = ரொம்ப க்ரூரமான / கஷ்டமான பசி தாஹம் ஆகியவை கொஞ்சம் கூட அடக்க முடியாதவை; மோஹத்தில் கலருன்ன = ஸம்ஸாரத்தில் உழலுகின்ற; ஞான் = நான்; அது வ்ருதாமோஹிப் பதெந்தெந்துவான் = எதற்காக இம்மாதிரியான நிஷ்ப்ரயோஜனமான வற்றிற்காக ஆசைப்படுகின்றேன்; ஸ்நேஹத்தோடெ = அன்புடன்; யசோதபுல்கின = யசோதை அணைத்துக்கொண்ட; கிசோரன் = குழந்தை, பாலரூபம்; தானொழிஞ்ஞேகதா = உன்னைத் தவிரவேறு; ஸ்நேஹிப்பீல = அன்புசெலுத்த மாட்டேன் (பக்திசெய்யமாட்டேன்); மனஸா நாமங்ஙளோதீடினேன் = மனத்தால் நாமங்களைச் ஓதுகின்றேன்.

உடம்பிற்கு ஏற்படுகின்ற அனேகவிதமான தொல்லைகள், பசி, தாகம் போன்று கொடுமையான உபாதைகள், இவையெல்லாம் மாயை என்று அறிந்திருந்தும் நான் ஏன் அந்த மோஹங்களில் அகப்பட்டு உழல்கின்றேன்? அன்புடன் யசோதை அரவணைத்துக் கொண்ட பிஞ்சுபாலகன் கண்ணனைத் தவிர வேறு எவரையும் நான் பஜிப்பதில்லை. அந்த க்ருஷ்ணபக்தியொன்றே போதும் என்னும் நினைப்பில் நான் மானஸீகமாக நாமஸங்கீர்த்தனம் செய்கின்றேன்.

162. சொல்லேணம் நாமமென்னுள்ளது பலருமறிஞ்
ஞும் பறஞ்ஞும் கழிஞ்ஞால்ச்
சொல்லீடுன்னோர் கணக்கெக்குறயுமது மஹா
பாபமென்னும் ப்ரஸித்தம்
சொல்லீட்டெந்தென்னு மற்றுள்ளவர்கள் பரிஹஸிச்
சால் நமுக்கல்ல துக்கம்
சொல்லேறும் வ்யாஸனும் பார்த்தனுரததுரகம்
மேச்சு மேவும் நினக்கும்!

நாமம் சொல்லேணமென்னுள்ளது = திருநாமம் சொல்லவேண்டும் என்பதை; பலருமறிஞ்ஞும் பறஞ்ஞும் கழிஞ்ஞால் = பலரும் அறிந்தும் பிறர்க்கு உபதேசம் செய்தும்; சொல்லிடுன்னோர் கணக்கெக்குறயும் = நாமம் சொல்பவர்கள் மிகவும் குறைவுதான்; அது மஹாபாபமென்னும் ப்ரஸித்தம் = நாமத்தின் மஹிமையைத் தெரிந்திருந்தும் சொல்லாமல் விட்டுவிட்டால் அது பெரிய பாபம் என்பது உலக ப்ரஸித்தம்; சொல்லீட்டெந்தென்னு பரிஹஸிச்சால் = மற்றவர்கள் நாம ஜபம் செய்து என்ன பயன் என்று பரிஹாசம் செய்தால்; நமுக்கல்ல துக்கம் = அதனால் ஏற்படும் துக்கம் / நஷ்டம் நமக்கல்ல / எனக்கல்ல; சொல்லேறும் = கீர்த்திமான்களான; ரததுரகம் = குதிரைகளுடனான தேர்; மேச்சு மேவும் நினக்கும் = தேரோட்டியான உனக்கும்.

திருநாமஸங்கீர்த்தனத்தின் மஹிமையினைப் பலரும் அறிந்தும், மற்றவர்களுக்கு உபதேசித்தும் வந்தாலும் கூட உண்மையான பக்தியுடன் நாம பாராயணம் செய்வோர் மிகக் குறைவுதான். மஹிமையை அறிந்தும் நாமஜபம் செய்யாமல் அசட்டையாக விட்டுவிட்டால் அது பெரிய பாபம் என்று ப்ரஸித்தம். அதனால் நாமஜபம் செய்வதால் பயன் என்ன என்று மற்றவர்கள் பரிகாசம் செய்யும்போது அதன் அபக்யாதி எனக்கல்ல ப்ரபுவே. நாமஜபத்தின் சிறப்பினைக் குறித்து ஸ்ருதி ஸ்ம்ருதிகளில் சொன்ன வ்யாஸமுனிவருக்கும், பார்த்தனுக்குத் தேரோட்டிய வேளையில் கீதையை உபதேசித்த உனக்கும் தான் அதன் அபக்யாதி.

163. ஆர்க்கானும் வழிபோலெயுண்டு மடி
கூடாதெ மனஸ்ஸெங்கிலோ
கீர்த்திக்காமதினாயனேக விதமாய்
தீர்த்தோரு ஸங்கீர்த்தனம்

**பார்த்தாலொக்கெ வ்ருதாப்ரயத்னரஹிதம்**
**கீர்த்திப்பதின்னாக்ரஹம்**
**பேர்த்தும் மேலிது நாஸ்தியாய் வருமதின்**
**மும்பே மரிக்கேணமே.**

ஆர்க்கானும் மடிகூடாதே வழி போலெயுண்டு மனஸ்ஸெங்கிலோ = யார் வேண்டுமானாலும் கூசாமல் வந்துபோகக் கூடிய பொது இடம் போல் மனம் இருக்குமேயானால்; கீர்த்திக்காம் அதினாய் அனேக விதமாய் தீர்த்தோரு ஸங்கீர்த்தனம் = அம்மாதிரியான மனதை அனேகவிதமான நாமஸங்கீர்த்தனங்களினால் சுத்தமாக்கலாமே; பார்த்தாலொக்கெ = ஆழ்ந்து நோக்கினோமேயானால் எல்லாம்; வ்ருதா = வெறுமை; ப்ரயத்னரஹிதம் பேர்த்தும் கீர்த்திப்பதின்னாக்ரஹம் = சற்றும் சிரமமில்லாத நாமஸங்கீர்த்தனம் செய்ய ஆவல்; மேல்இது நாஸ்தியாய் வருமதின் முன்பே = இந்த ஆவலானது இல்லாமல்ப் போய் விடும் ஒருநிலை வருவதற்குமுன்னர்; மரிக்கேணமே = நான் இறந்துவிடவேண்டுமே.

எந்தவிதமான கட்டுப்பாடுகளுமில்லாமல் தறிகெட்டு அலையும் மனம் தன்னை சீர்படுத்த அனேக விதமான நாமஸங்கீர்த்தனங்கள் செய்து மனதை தூய்மைப்படுத்தலாமே. ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தோமேயானால் கீர்த்தனம் செய்யும் ஜீவாத்மாவும் கீர்த்திக்கப் படுகின்ற மூர்த்திபாவமும், கீர்த்தனம் கூடவும் ஒரு மித்தியை தானே? ஆனாலும் மிகவும் சுலபமான, ப்ரயத்தினமில்லாமல் சாதிக்கக் கூடிய நாம ஸங்கீர்த்தனத்தில் எனக்கு விருப்பமில்லாமல்போகும் நிலை வருவதற்கு முன்னரே நான் இறந்து விடவேண்டுமே, பகவானே (வாழ்நாளில் கடைசித் தருணம் வரையில் நாமம் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும் என்று ப்ரார்த்தனை)

164. **நாவும் நாராயணேத்யக்ஷரவுமொருதினம்**
**தம்மிலேகீபவிச்சால்**
**சாவுன்னேரத்து நோவான் கழிவர யமனும்**
**தூரே நின்னீடுமல்லோ**
**நாவே நாலக்ஷரம் நீயொருபொழுதுமுபே**
**க்ஷிக்கொலா, தைவயோகால்**
**ஈவண்ணம் வன்னதென்னாலம்ருத மனுபவிச்**
**சீடு நாராயணேதி.**

ஒருதினம் = ஒருநாள் (எப்போதாவது); நாவும் நாராயணேத்யக்ஷரவும் தம்மிலேகீபவிச்சால் = நாக்கும் நாராயணா என்ற அக்ஷரமும் ஒன்றோடொன்று இணைந்தால்; சாவுன்னேரத்து = இறக்கும் தறுவாயில் (மரண சமயத்தில்); நோவான் = நோவிப்பிக்க / வேதனைப் படுத்த); கழிவா = இயலாது; யமனும் தூரே நின்னீடுமல்லோ = காலன் தூரமாக தொலைவில் நின்றிடுவானே; நாவே நாலக்ஷரம் ஒருபொழுது முபேக்ஷிக்கொலா = நாவே, நாராயணா என்ற நான்கு எழுத்தினை நீ ஒருபொழுதும் கைவிடாதே; தைவயோகால் = தெய்வானுக்ரகம் காரணமாக; ஈவண்ணம் வன்னது = இந்த மாதிரி அவசரம் கிடைத்தது; அம்ருதமனுபவிச்சீடு = அமுதத்தைப் பருகு; நாராயணேதி = நாராயணா என்ற.

உடம்பைவிட்டு உயிர் பிரியும் தறுவாயில் நாவும் நாராயணா என்ற திவ்யநாமமும் ஒன்றாக இணைந்துவிட்டால் யமன்கூட கிட்டெ வருவதற்கு அஞ்சி தூரே நின்று விடுவான். நாவே! நாராயணா என்ற நாலக்ஷரங்களை நீ ஒரு பொழுதும் கைவிடாதே. தெய்வானுக்கிரகத்தால் உனக்கு அப்படியொரு வாய்ப்புக் கிடைத்தால் அந்த திவ்யமான நாராயணா என்கின்ற அமுதத்தை அள்ளியள்ளிப்பருகு.

**165. மேகச்யாமளமங்கவும் மகுடவும்**
**பூவும் செவித்தோடயும்**
**ராகாசந்த்ரனு நாணமாம் வதனவும்**
**மார்மாலயும் முத்ரயும்**
**ஆகும் வண்ணமனேக பூஷணயுதம்**
**நின்மை குறிக்கொண்டு ஞான்**
**போருன்னேன் பகவன் ஜனார்த்தன பவல்க்**
**காருண்ய பாதேயவான்!**

மேகச்யாமளமங்கவும் = மேகம்போன்று சியாமள நிறமுள்ள அங்கமும்; மகுடவும் = கிரீடமும்; பூவும் = கரதலத்தில் விளங்கும் தாமரைப்பூவும்; செவித்தோடயும் = காதுகளில் குண்டலங்களும்; ராகாசந்திரனு நாணமாம் வதனவும் = பௌர்ணமிச்சந்திரன் பார்த்து வெட்கப்படும் முககமலமும்; மார்மாலயும் = மார்பில் முத்து மாலைகளும்; முத்ரயும் = மார்பில் ஸ்ரீவத்ஸமென்ற மச்சமும்; அனேக பூஷணயுதம் = அனேக பூஷணங்களுடன் (சுதர்சன சக்கரம், பாஞ்சஜன்யம் என்கின்ற

சங்கம், கௌமோதகீ என்ற கதை, நந்தகீ என்ற வாள், அங்கத, வளை, தளை, நூபுரகாஞ்சீ ஆகின்ற திருஆபரணங்கள்); ஆகும் வண்ணம் = என்னால் இயன்ற அளவு; நின்மை குறிகொண்டு = உனது திருமேனியை மனதில் தியானித்து, ஞான் போருன்னேன் = நான் ஜீவிதயாத்திரையைத் தொடர்ந்து கொண்டிருக்கின்றேன்; பவல் காருண்ய பாதேயவான் = உனது காருண்யமான / பாதேயம் (மார்க்கமத்யே சாப்பிட உபயோகப்படுத்தும் உணவுப் பொட்டலம்.)

நீலமேகச்யாமள வண்ணனாக, கிரீடம், குண்டலம், கைகளில் தாமரைப்பூ, பூர்ணசந்திரனையும் வெட்கமடையச் செய்யும் உனது வதனாரவிந்தம், முத்துமாலைகள், கௌஸ்துபமணி, ஸ்ரீவத்ஸமென்ற மச்சம், சங்கு, சக்கரம், கதை, பலவிதமான ஆபரணங்கள் என்று ஸர்வாலங்கார பூஷிதனான உனது திருமேனியை என்னால் இயன்ற அளவு மனதில் தியானம் செய்து கொண்டு, உனது காருண்யம் என்னும் மார்க்கத்தில் சாப்பிடக்கூடிய உணவுப் பொட்டலத்துடன் (கட்டுச் சாதத்துடன்) எனது ஜீவித யாத்திரையைத் தொடர்கின்றேன், ஹே! பகவன், ஜனார்த்தனா!

**166. ஸ்ரீபாதம் வாழ்க வாமாலயநிலய! பவல்**
**ஸ்ரீபதாம்போருஹத்தெ**
**ஸ்ரீநாமம் கொண்டு நித்யம் நிரவதி பரமானந்**
**தமூர்த்தே நிஷேவே**
**ஸ்ரீமூர்த்திம் கண்டு கண்டாத்மனி ஸததமு**
**றப்பிச்சு தேஹம் த்யஜிச்சிட்டீ**
**மூர்த்திக்கைக்யமேகீடுக குரு கருணா**
**வாரிதே வாரிஜாக்ஷா!**

வாமாலயநிலயா = ஸ்ரீஇடத்துபுறத்தப்பா; ஸ்ரீபாதம் வாழ்க = உனது திருப்பாதம் வாழ்க; பவல் ஸ்ரீ பதாம்போருஹத்தெ = உனது தாமரைத்திருவடிகளை; நித்யம் = தினமும்; நீநாமம் கொண்டு = உனது திருநாமம் கொண்டு; நிரவதிநிஷேவே = இடைவிடாது சேவிக்கின்றேன்; பரமானந்தமூர்த்தே = ஸச்சிதானந்தஸ்வரூபா; ஸ்ரீமூர்த்திம் கண்டு கண்டு = உனது திருவுடலை தினமும் தியானித்துக் கொண்டு; ஆத்மனி ஸததம் உறப்பிச்சு = மனதில் த்ருடமாக ஸ்தாபித்து; தேஹம் த்யஜிச்சிட்டு = சரீரத்தை விட்டு விட்டு; ஈமூர்த்திக்கு ஐக்யமேகீடுக = இந்த ஜீவாத்மாவிற்கு

ஸாயுஜ்யத்தைக் கொடுக்க வேண்டுமே; குருகருணாவாரிதே வாரிஜாக்ஷா = அபாரகருணா ஸிந்தோ தாமரைக்கண்ணா!

ஹே இடத்துபுறத்தப்பா! உனது திருப்பாதங்கள் வாழ்க; உனது திருப்பாதகமலங்களை நித்தியமும் திருநாமஸங்கீர்த்தனங்கள் கொண்டு இடைவிடாமல் சேவிக்கின்றேன். பரமானந்த ஸ்வரூபமே, உனது திருவுருவத்தை நித்தம் மனதில் தியானம் செய்து, த்ருடமாக ஸ்தாபித்துக் கொண்டே இந்த பௌதிக சரீரத்தை விட்டுவிட்டு கருணாஸாகரனான உன்னுடன் இரண்டறக் கலக்கும் கைவல்யத்தை அடியேனுக்கு அருள வேண்டுமே! கருணைக்கடலான தாமரைக்கண்ணா, வாரிஜாக்ஷா!

**167. பூஷா வர்ணாதியாலீ புவனமகிலவும்**
**ஹந்த! மோஹிச்சு ராகத்**
**வேஷாபூர்ணம் விகூர்ண்ணம் சிவ!சிவ!பறயா**
**வல்ல மாயாவிலாஸம்**
**பாஷாகர்ணாம்ருதம் மே ஸுக்ரதமிது ஸதா**
**நாவுகொண்டாஸ்வதிச்சால்**
**நூழா கர்மாவலிவல்லிகளிலூடவன்**
**பின்னே முன்னேதுபோலெ.**

பூஷாவர்ணாதியால் = அலங்காரம், சோபை, வர்ணபேதங்கள் என்று இந்திரியங்களை ஆகர்ஷிக்கும் வைவித்யங்களாலெ; ஈ புவனமகிலவும் = இந்தப் பிரபஞ்சம் முழுவதும்; ஹந்த! கஷ்டம்; மோஹிச்சு ராகத்வேஷா பூர்ணம் விகூர்ண்ணம் = ராகத்வேஷாதிகளினால் அஹங்காரம் கொண்டு மதிமயங்கி; பறயாவல்ல மாயாவிலாஸம் = பகவானின் மாயா விலாசங்கள் சொல்லி மாளாது; மே ஸுக்ருதம் = என்னால் சிரத்தையுடன் ரசிக்கப்பட்ட; இது பாஷா கர்ணாம்ருதம் = மலையாள பாஷையில் அமைந்த, காதுகளால் கேட்க அம்ருததுல்யமாகவுள்ள; ஸதா நாவுகொண்டாஸ்வதிச்சால் = எப்போதும் நாவினால் கீர்த்தனம் செய்து ரசித்தால்; முன்னேதுபோலெ = பண்டுபோல்; உடன்பின்னெ அவன் = பிறகு அப்படிக் கீர்த்தனம் செய்பவர் தாமதமின்றி; கர்மாவலீவல்லிகளில் = கர்மவாசனை பிடித்திழுக்கின்ற பாசவலைகளில்; நூழா = நுழைந்து அவதிப்பட மாட்டார்கள்.

இந்திரியங்களைப் பிடித்திழுக்கின்ற பலவிதமான முரண்பாடுகள் அடங்கின இந்தப் ப்ரபஞ்சத்தில் ராகத்வேஷாதி அஹங்கார குணங்களில்

மதிமயங்கி சித்தப்ரமம் வருத்தும் பகவானின் மாயா விலாசங்களைச் சொல்லி மாளாது. நான் மிகுந்த பக்திஸ்ரத்தையுடன் மலையாள பாஷையில் இயற்றிய இந்த கர்ணாம்ருதத்தை எப்போதும் பக்தியுடன் கீர்த்தனம் செய்துவந்தால், அவ்வாறு கீர்த்திப்பவர்கள் கர்மவாசனைகள் பிடித்து இழுத்து விடுகின்ற பந்தபாசங்களில் அகப்படமாட்டார்கள்.

**168. உண்ணிக்கிடாங்ஙள் களியாயொருகாலுவெச்சால்**
**எண்ணாவதல்லதினஹோ குதுகம் பித்ரூணாம்**
**என்னெக்கணக்கெ நடயுள்ளவர்கள்க்கிதெல்லாம்**
**என்னால் க்ருதம் கிமபி கௌதுகமாய் வரேணம்.**

உண்ணிக்கிடாங்ஙள் = பிஞ்சுக்குழந்தைகள்; களியாயொரு காலுவெச்சால் = விளையாட்டாக முதல் அடி எடுத்து வைக்கும்போது; எண்ணாவதில்லதினஹோ குதுகம் = அதைப் பார்க்கும்போது ஏற்படும் ஸந்தோஷம் எண்ணில் அடங்காதது / அளவிடமுடியாது; பித்ரூணாம் = மாதா பிதாக்களுக்கு; என்ன கணக்கெ = என்ற கணக்கில் / விதத்தில்; என்னால் க்ருதம் இதெல்லாம் = என்னால் இயற்றப்பட்ட இந்த க்ருதியானது; நடயுள்ளவர்கள்கு = இந்தப் பாதையில் நடந்து பழகியோருக்கு (அதாவது இதர பக்த கவிஸ்ரேஷ்டர்களுக்கு என்று தாத்பர்யம்) கிமபி = எந்த விதத்திலாகவாவது; கௌதுகமாய் வரேணம் = சந்தோஷப்ரதமாக ஆகவேண்டும்.

சிறுகுழந்தை முதல் அடியெடுத்து வைத்து நடக்க ஆரம்பிக்கும்போது அவனது பெற்றோருக்கு (பித்ருக்களையும் சேர்த்துக் கொள்ளலாம்) எத்தனை ஆனந்தம் உண்டாகும் என்பதை அளவிட முடியாது. அதேபோல் என்னால் இயற்றப்பட்ட இந்த க்ருதியானது எனது முன்னோர்களுக்கும் இதர பக்த கவிஸ்ரேஷ்டர்களுக்கும் சந்தோஷத்தைக் கொடுக்கட்டும்.

**169. பீதாம்பரப்ரோல்லஸிதாகிலாம்சம்**
**ஹேமாங்கதோத்பாஸித பாஹுதண்டம்**
**ஸோமாம்புஜ ஸ்ரீவதனாரவிந்தம்**
**வாமாலயஸ்தம் பஜ வாசுதேவம்.**

பீதாம்பரம் = மஞ்சள்பட்டு; ப்ரோல்லஸிதம் = சோபையுடன் கூடிய; அகிலாம்சம் = அனைவருக்கும் ஆஸ்ரயமானவன்; ஹேமாங்கதம் =

தங்கத்தில் ஆன தோள்வளை; உத்பாஸிதம் = ப்ரகாசமான; பாஹு தண்டம் = கைத்தண்டை; ஸோமாம்புஜ ஸ்ரீவதனாரவிந்தம் = சந்திரனையும் தாமரையையும் ஒத்த வதனகமலம்; வாமாலயஸ்தம் = வாமாலயத்தில் குடிகொண்டுள்ள ஸ்ரீ இடத்துபுறத்தப்பன்; பஜவாசுதேவம் = வாசுதேவனை பஜிக்கின்றேன்.

அழகான மஞ்சள் பட்டு வஸ்த்ரம் / பீதாம்பரம், தங்கத்தினாலான தோள்வளைகள், கைத்தண்டைகள், சந்திரனையும் தாமரையையும் ஒத்த திருமுக கமலம் ஆகியவைகளுடன் சோபிக்கின்ற ஹே! வாமாலயேசா, இடத்துபுறத்தப்பா ஹரே ஸ்ரீக்ருஷ்ணா உன்னை நான் தாழ்மையுடன் பஜிக்கின்றேன்.

ஸ்ரீக்ருஷ்ணகர்ணாம்ருதம் ஸமாப்தம்

சுபம்.

ஓம்.



# பிரார்த்தனை

ஹரி ஸ்ரீ கணபதயே நம : அவிக்னமஸ்து
ஸ்ரீ குருப்யோ நம :

**பரமேச்வரன் ஓரான தன் வேஷமாய்**
**பரமேச்வரி நல்ல பிடியானயுமாய்**
**கானநத்தில்க் களிச்சு நடக்கும்போள்**
**கரிதன்முகன் பிறன்னீடினான்.**

பரமேச்வரன் ஓரான தன்வேஷமாய் –பரமேச்வரன் ஓர் யானையின் வடிவாக; பரமேச்வரி நல்ல பிடியானயுமாய் = பரமேச்வரி நல்ல பெண்யானையுமாக; கானநத்தில்க் களிச்சு நடக்கும்போள் = கானகத்தில் விளையாடும் தருணத்தில்; கரிதன்முகன் பிறன்னீடினான் = கரிமுகன் என்ற கஜமுகனாம் விநாயகன் அவதாரம் செய்தார்.

பர்மேச்வரன் ஓர் ஆண்யானையாகவும் பரமேச்வரி ஒரு பெண்யானையாகவும் வனத்தில் விளையாடிக் கொண்டிருந்த வேளையில், கரிமுகனாம் யானைமுகன், விநாயகன் அவதாரம் செய்தார்.

**தும்பிக்கையோடுளவாய பைதல்க்கு**
**நன்மயோடுள்ள காய்கனி நல்குவான்**
**வரிக்கச்சுள நல்ல வறுத்தரி**
**நறுநை தேனும் நீலக்கரிம்புகள்**

தும்பிக்கையோடுளவாய பைதல்க்கு = தும்பிக்கையுடன் அவதரித்த பாலகனுக்கு; நன்மயோடுள்ள காய்கனி நல்குவான் = நல்ல காய்கள் பழங்கள் ஆகியவற்றை அளிக்க; நன்கு தித்திக்கின்ற பலாச்சுளை, நன்கு

---

★ ஞானப்பானயின் ஒருசில பதிப்புகளில் இந்த பிரார்த்தனை சேர்க்கப்பட்டுள்ளது. சிலவற்றில் இல்லை.

வறுத்த வாசனையான கைக்குத்தல் அரிசி; நறுநைதேனும் நீலக்கரிம்புகள் = நறுமணத்துடனான புத்துருக்கு நெய் மற்றும் முதிர்ந்த கரும்புகள்;

தும்பிக்கையுடன் அவதரித்த பாலகனுக்கு நிவேதிக்க ருசி மிகுந்த காயகனிகள், நன்கு தித்திக்கின்ற பலாச்சுளைகள், வறுத்த, வாசனையுடனான கைக்குத்தல் அரிசி, நறுமணத்துடன் கூடிய புத்துருக்கு நெய், முற்றிய கரும்புகள் ஆகியவையும்,

**கொட்டத்தேங்ஙயும் சர்க்கர வெல்லவும்**
**பஞ்சஸாரயும் நல்லொரு பாயஸம்**
**ஆலங்ஙா செறுநாரங்ஙா என்னிவ**
**மாம்பழம் நல்ல முந்திரிங்ஙப்பழம்**

கொட்டத்தேங்ஙயும் சர்க்கரவெல்லவும் = கொப்பரைத் தேங்காயும் இனிப்பான வெல்லமும்; பஞ்சஸாரயும் நல்லொருபாயஸம் = வெள்ளைச் சர்க்கரையும் நல்ல பாயசமும்; ஆலங்ஙா செறுநாரங்ஙா என்னிவ = ஆலங்காய் (மலையாளத்தில் அம்பாழங்ஙா என்றும் சொல்வார்கள்) எலுமிச்சம்பழம் மற்றும் மாம்பழம் நல்ல முந்திரிங்ஙப்பழம் = மாம்பழம் மற்றும் திராட்சைப்பழம்;

கொப்பரைத் தேங்காய், இனிப்பான வெல்லம், வெள்ளைச் சர்க்கரை, ருசியான பாயசம், ஆலங்காய், எலுமிச்சை, மாம்பழம் மற்றும் திராட்சைப் பழங்கள் ஆகியவற்றை;

**சிவமோட்டியன் வச்சு கூப்புன்னேன்**
**சிவபேரூரமரும் கணநாதா**
**அழகோடங்ஙு அம்ருது செய்தடியனெ**
**ஹிதமோடெ துணய்க்கேணம் பானய்க்கு**

சிவமோடடியன் வச்சு கூப்புன்னேன் = மேற்குறிப்பிட்ட மங்கல வஸ்துக்களை நின்முன் வைத்து அடியேன் கைவணங்குகின்றேன். சிவபேரூரமரும் கணநாதா = திருச்சிவ பேரூர் என்கின்ற திருச்சூர் என்னுமிடத்தில் எழுந்தருளியிருக்கும் கணநாதா; அழகோடங்ஙு அம்ருது செய்தடியனெ = அழகுடன் அமுது செய்து அடியனை; ஹிதமோடெ துணய்க்கணம் பானய்க்கு = ஹிதமாக அடியன் ஞானப்பான என்னும் க்ருதியை இயற்ற துணை செய்ய வேண்டுமே;

உன் முன்னால் வைத்து அடியேன் வணங்குகின்றேன். திருச்சிவ பேரூர் என்ற பெயருடைய திருச்சூர் என்னுமிடத்தில் அமர்ந்தருளும் கணநாதா! அழகுடன் இவற்றையெல்லாம் அமுது செய்து, இதமாக ஞானப்பான என்னும் க்ருதி இயற்ற அடியேனுக்குத் துணை செய்ய வேண்டும்.

**கமலோல்பவபாமினி யாகிய**
**கமலேக்ஷணே தேவி நமோ நம:**
**பான செய்வான் துணக்கேணம் தேவிநீ**
**பால் நிறமோடெ வாழுன்ன பாரதி**

கமலோல்பவபாமினியாகிய = பிரம்மாவின் பத்தினியாகிய; கமலேக்ஷணே தேவிநமோநம: = தாமரைக் கண்களையுடைய தேவி உனக்கு நமஸ்காரம் நமஸ்காரம்; பான செய்வான் துணக்கேணம் தேவி நீ = ஞானப்பான எழுத நீ துணை செய்யவேண்டுமே தேவி; பால் நிறமோடெ வாழுன்ன பாரதி = பால் நிறத்தில் விளங்கும் பாரதியாகிய ஸரஸ்வதீதேவி;

தாமரையில் உதித்த பிரம்மாவின் பத்தினியாம் மலர்விழியாளாம் ஸரஸ்வதித் தாயே! உனக்கு நமஸ்காரம்; பால் நிறத்தையுடைய பாரதி தேவியே! 'ஞானப்பான' எழுத துணை செய்ய வேண்டுமம்மா.

**வெள்ளத்தில் திரதள்ளிவரும் வண்ணம்**
**உள்ளத்தில் வன்னுதிக்கேணம் பானக்கு**
**அடியனுடெ நாவில் அனாரதம்**
**குடிபுக்கு வஸிக்க ஸரஸ்வதி**

வெள்ளத்தில் திரதள்ளி வரும் வண்ணம் = சமுத்திரத்தில் ஒன்றன்பின் ஒன்றாக தொடர்ச்சியாக வரும் திரைகள் போன்று; உள்ளத்தில் வன்னு உதிக்கேணம் = பானக்கு ஞானப்பான இயற்ற உதவும் வண்ணம் உள்ளத்தில் வந்து உதிக்கவேண்டும்; அடியனுடே நாவில் அனாரதம் = அடியேனின் நாக்கில் இடைவிடாது அனவரதமும்; குடிபுக்கு வஸிக்க ஸரஸ்வதி = குடிபுகுந்து வசிக்கவேண்டுமே ஸரஸ்வதித்தாயே.

ஸரஸ்வதி தேவியானவள், சமுத்திரத்தில் ஒன்றன் பின் ஒன்றாக, தொடர்ந்து வரும் திரைகள் போன்று 'ஞானப்பான' இயற்ற அடியேனின் நாவில் குடிபுகுந்து வசிக்க வேண்டும்.

# ஞானப்பான

கிருதிகளும் பொருளும்

1. **க்ருஷ்ண க்ருஷ்ண முகுந்தா ஜனார்த்தனா**
**க்ருஷ்ண கோவிந்த நாராயணா ஹரே**
**அச்சுதானந்த கோவிந்த மாதவா**
**ஸச்சிதானந்த நாராயணா ஹரே**

க்ருஷ்ண க்ருஷ்ண முகுந்தா ஜனார்த்தனா
க்ருஷ்ண கோவிந்த நாராயணா ஹரே
அச்சுதானந்த கோவிந்த மாதவா
ஸச்சிதானந்த நாராயணா ஹரே!

2. **குருநாதன் துணசெய்க ஸந்ததம்**
**திருநாமங்ஙள் நாவின்மேல் எப்பொழும்**
**பிரியாதெயிரிக்கேணம் நம்முடெ**
**நரஜன்மம் ஸபலமாயீடுவான்**

குருநாதன் துணை செய்க ஸந்ததம் = குருநாதன் எப்பொழுதும் துணை செய்ய வேண்டுமே; திருநாமங்ஙள் நாவின்மேலெப்பொழும் = திருநாமங்கள் எப்பொழுதும் நாவில் இருக்க; பிரியாதெயிரிக்கேணம் = நாவிலிருந்து நாமங்கள் பிரியாமல் இருக்கவேண்டும்; நம்முடெ நரஜன்மம் = நமது மானுடப்பிறவி; ஸஃபலமாக்கீடுவான் = ஸஃபலமாக ஆக.

3. **இன்னலேயோளம் எந்தென்னறிஞ்ஞீலா**
**இனி நாளேயும் எந்தென்னறிஞீசீலா**
**இன்னீக் கண்ட தடிக்கு வினாசவும்**
**இன்ன நேரம் என்னேதுமறிஞ்ஞீலா**

இன்னலேயோளம் = நேற்றுவரை; எந்தென்னறிஞ்ஞீல = என்ன நடக்கும் என்று அறியவில்லை; இனி நாளெயுமெந்தென்னறிஞ்ஞீல = இனிமேல் நாளைக்கு என்னவென்றும் தெரியவில்லை; இன்னீக்கண்ட = இன்று பார்த்துக் கொண்டிருக்கும்; தடிக்கு வினாசவும் = சரீரத்திற்கு வினாசம் (மரணம்); இன்னநேரம் என்னேது மறிஞ்ஞீல = இன்ன நேரத்தில் மரணம் சம்பவிக்கும் என்பதும் ஏதும் தெரியவில்லை.

**4. கண்டுகண்டங்ஙிரிக்கும் ஜனங்ஙளே**
**கண்டில்லென்னு வருத்துன்னதும் பவான்**
**ரண்டு நாலு தினம் கொண்டொருத்தனெ**
**தண்டிலேற்றி நடத்துன்னதும் பவான்**

கண்டுகண்டங்ஙிரிக்கும் = பார்த்துக்கொண்டேயிருக்கும்; ஜனங்ஙளெக்கண்டில்லென்னு வருத்துன்னதும் = ஜனங்களைப் பார்க்க முடியாமற்ச் செய்வதும்; பவான் = பகவான்; ரண்டு நாலு தினம் கொண்டொருத்தனெ = இரண்டு நான்கு தினங்கள் கொண்டு ஒருவனை; தண்டிலேற்றி நடத்துன்னதும் பவான் = பல்லக்கிலேற்றி அரசனாக ஆக்குவதும் பகவானே தான்.

**5. மாளிக முகளேறிய மன்னன்டே தோளில்**
**மாறாப்பு கேற்றுன்னதும் பவான்**
**கண்டால் ஒட்டறியுன்னு சிலரிது**
**கண்டாலும் திரியா சிலர்க்கேதுமே**

மாளிகமுகளேறிய = மாடமாளிகை மீது ஏறி அமர்ந்திருக்கும்; மன்னன்டே = மன்னனுடைய; தோளில் மாறாப்பு கேற்றுன்னதும் பவான் = தோளில் விழுப்புமூட்டை (பழைய துணிமூட்டை) ஏற்றி வைப்பதும் பகவான்தான்; கண்டாலொட்டறியுன்னு சிலரிது = சிலர் இதைப் பார்த்துத் தெரிந்து கொள்கின்றனர்; கண்டாலும் திரியா சிலர்க்கேதுமே = வேறு சிலர் பார்த்தும் தெரிந்து கொள்வதில்லை;

**6. கண்டதொன்னுமே ஸத்யமல்லென்னது**
**மும்பே கண்டங்ஙறியுன்னிது சிலர்**
**மனு ஜாதியில்த் தன்னெ பலவிதம்**
**மனஸ்ஸினு விசேஷமுண்டோர்க்கணம்**

கண்டதொன்னுமே ஸத்யமல்லென்னது = பார்ப்பது எதுவுமே நிஜமல்ல என்பதை; மும்பே கண்டங்ஙறியுன்னிது சிலர் = முன்பே பார்த்துத் தெரிந்து கொள்கின்றனர் ஒருசிலர்; மனுஜாதியில்த் தன்னே பலவிதம் = மானுட ஜாதியில் இப்படி பலவிதமாக; மனஸ்ஸினு = மனதிற்கு; விசேஷமுண்டு = விசேஷமான லட்சணங்கள்; ஓர்க்கணம் = ஞாபகத்தில் வைத்திருத்தல் வேண்டும்.

7. **பலர்க்கும் அறியேணமென்னிட்டல்லோ**
**பலஜாதி பறயுன்னு சாஸ்த்ரங்ஙள்**
**கர்மத்தில் அதிகாரி ஜனங்ஙள்க்கு**
**கர்மசாஸ்த்ரங்ஙளுண்டு பலவிதம்**

பலர்க்குமறியேணம் = பலரும் அறியவேண்டும்; என்னிட்டல்லோ = என்பதற்காகத்தானே; பலஜாதி பறயுன்னு சாஸ்த்ரங்ஙள் = பலவிதமான வர்ண தர்மங்களைச் சொல்கின்றன சாத்திரங்கள்; கர்மத்திலதிகாரி ஜனங்ஙள்க்கு = அவரவர் வர்ணபேதங்களை அனுசரித்து அதிகாரியாகவுள்ள ஜனங்களுக்கு; கர்மசாஸ்த்ரங்களுண்டு பலவிதம் = கர்மசாத்திரங்கள் பலவிதமாக உள்ளன.

8. **ஸாங்க்ய சாஸ்த்ரங்ஙள் யோகங்ஙளென்னிவ**
**ஸங்க்யயில்லது நில்க்கட்டே ஸர்வவும்**
**சுழுன்னீடுன்ன ஸம்ஸார சக்ரத்தில்**
**உழன்னீடும் நமுக்கறிஞ்ஞீடுவான்**

ஸாங்க்யசாஸ்த்ரங்ஙள் யோகங்ஙளென்னிவ = சாங்கியசாத்திரங்கள், யோகங்கள் ஆகியவை; ஸங்க்யயில்லது நில்க்கட்டெ = கணக்கிலடங்காதவை அது ஒருபுறம் இருக்கட்டும்; ஸர்வவும் = அனைத்தும்; சுழன்னீடுன்ன = சுழன்று கொண்டேயிருக்கின்ற; ஸம்ஸாரசக்ரத்திலுழன்னீடும் = சம்சாரமாகிய சக்கரத்தில் உழலுகின்ற; நமுக்கறிஞ்ஞீடுவான் = நம்மைப்போன்றோருக்கு அறிந்துகொள்ள;

9. **அறிவுள்ள மஹத்துக்களுண்டொரு**
**பரமார்த்தம் அருள் செய்திரிக்குன்னு**
**எளுதாயிட்டு முக்தி லபிப்பானாய்**
**செவி தன்னிது கேள்ப்பின் எல்லாவரும்**

அறிவுள்ள மஹத்துக்கள் = ஞானிகளாகவுள்ள மஹான்கள்; உண்டொரு பரமார்த்தம் = ஒரேயொரு பரம்பொருள் உண்டு என்பதை; அருள் செய்திரிக்குன்னு = அருள் செய்திருக்கின்றனர்; எளுதாயிட்டு = எளிதாக; முக்தி லபிப்பானாய் = முக்தி கிடைக்க; செவி தன்னிது = செவி கொடுத்து; கேள்ப்பினெல்லாவரும் = அனைவரும் கேளுங்கள்..

**10. நம்மெ ஒக்கேயும் பந்திச்ச சாதனம்**
**கர்மம் என்னறியேண்டது முன்பினால்**
**முன்னம் இக்கண்ட விச்வம் அசேஷவும்**
**ஒன்னாய் உள்ளொரு ஜோதிஸ்வரூபமாய்**

நம்மெயொக்கெயும் = நம் அனைவரையும்; பந்திச்ச ஸாதனம் = பந்தித்த (கட்டிப்போட்டிருக்கின்ற) ஸாதனம் = சாதனம்; கர்மமென்னறி யேண்டது மும்பினால் = கர்மம் தான் என்பதை முதலாவதாகத் தெரிந்து கொள்ள வேண்டும்; முன்னமிக்கண்ட = நம்முன்பாகக் காணப்படும்; விச்வம்சேஷவும் = விச்வம் முழுவதும்; ஒன்னாயுள்ளொரு = ஒன்றாகவுள்ள ஒரு; ஜோதிஸ்வரூபமாய் = ஜோதிஸ்வரூபமாக;

**11. ஒன்னும் சென்னங்ஙு தன்னோடு பற்றாதே**
**ஒன்னினும் சென்னு தானும் வலயாதே**
**ஒன்னொன்னாயி நினைக்கும் ஜனங்ஙள்க்கு**
**ஒன்னு கொண்டறிவாகுன்ன வஸ்துவாய்**

ஒன்னும் சென்னங்ஙு = ஒன்றுமே சென்று அங்கு; தன்னோடு பற்றாதே = அதனுடன் பற்றிக் கொள்ளாமல்; ஒன்னினும் சென்னு தானும் வலயாதே = வேறு ஒன்றினோடும் தானும் சென்று அண்டாமல்; ஒன்னொன்னாயி = ஒவ்வொன்றாக; நினக்கும் = நினைக்கின்ற; ஜனங்ஙள்க்கு = ஜனங்களுக்கு; ஒன்னுகொண்டறிவாகுன்ன வஸ்துவாய் = ஒன்றேயான வஸ்துவாக அறியத்தக்கது.

**12. ஒன்னிலும் உறக்காத்த ஜனங்ஙள்க்கு**
**ஒன்னுகொண்டும் திரியாத்த வஸ்துவாய்**
**ஒன்னுபோலெ ஒன்னில்லாதே உள்ளதின்னு**
**ஒன்னாய உள்ளொரு ஜீவஸ்வரூபமாய்**

ஒன்னிலும் உறக்காத்த ஜனங்ஙள்க்கு = ஏகமாக அறியாத ஜனங்களுக்கு; ஒன்னுகொண்டும் திரியாத்த வஸ்துவாய் = ஏகமாகத் தேடியறியப் படாத வஸ்துவாக; ஒன்னுபோலெ ஒன்னில்லாதெயுள்ளதின்னு = ஒன்றைப் போன்று வேறொன்று இல்லாததற்கு; ஒன்னாயுள்ளொரு ஜீவஸ்வரூபமாய் = ஒன்றாகவுள்ள ஜீவஸ்வரூபமாக;

13. **ஒன்னிலும் ஒரு பந்தமில்லாதேயாய்**
**நின்னு அவன்தன்னே விச்வம் சமச்சுபோல்**
**மூன்னுமொன்னில் அடங்ஙுன்னு பின்னேயும்**
**ஒன்னுமில்லபோல் விச்வம் அன்னேரத்து**

ஒன்னிலுமொரு பந்தமில்லாதெயாய் = ஒன்றோடொன்று பந்தமில்லாமல்; நின்னவன்தன்னெ = நின்றவன்தான்; விச்வம் சமச்சு போல் = இந்த பிரபஞ்சத்தை உண்டு பண்ணினான் போலும், மூன்ன மொன்னிலடங்ஙுன்னு பின்னெயும் = மீண்டும் அனைத்து பிரபஞ்சமும் ஒன்றேயான பரபிரம்மத்தில் அடங்குகின்றன (மகாபிரளயத்தில்); ஒன்றுமில்லபோல் விச்வமன்னேரத்து = அப்பொழுது விச்வமானது ஒன்றுமில்லாமல்போய் விடுமாம்.

14. **ஒன்னுகொண்டு சமச்சொரு விச்வத்தில்**
**மூன்னாயிட்டுள்ள கர்மங்ஙளொக்கேயும்**
**புண்ய கர்மங்ஙள் பாபகர்மங்ஙளும்**
**புண்ய பாபங்ஙள் மிஸ்ரமாம் கர்மவும்**

ஒன்னுகொண்டு சமச்சொருவிச்வத்தில் = ஒன்றை வைத்து உருவாக்கப்பட்ட இந்த பிரபஞ்சத்தில்; மூன்னாயிட்டுள்ள கர்மங்ஙளொக் கெயும் = மூன்றாக உள்ள கர்மங்களனைத்தும்; புண்யகர்மங்ஙள் பாபகர்மங்ஙளும் = புண்ணியகர்மங்களும் பாபகர்மங்களும்; புண்யபாபங்கள் மிஸ்ரமாம் கர்மவும் = புண்ணியம் பாபம் ஆகியவை இடைகலந்த கர்மாவும்;

15. **மூன்னு ஜாதி நிரூபிச்சு காணும்போள்**
**மூன்னு கொண்டும் தளய்க்குன்னு ஜீவனே**
**பொன்னின் சங்ஙல ஒன்னிப் பறஞ்ஞுதில்**
**ஒன்னிரும்பு கொண்டென்னத்ரே பேதங்ஙள்**

மூன்னுஜாதி நிரூபிச்சு காணும்போள் = இப்படி மூன்று விதமாக நினைத்துப் பார்க்கும்பொழுது; மூன்னு கொண்டும் தளய்க்குன்னு ஜீவனெ = மூன்று விதமாகவும் ஓர் ஜீவாத்மாவை கட்டிப்போடுகின்றது; பொன்னின் அங்ஙல ஒன்னிப்பறஞ்ஞதில் = இப்படிச் சொன்னதில் ஒன்று தங்கத்தினால் செய்யப்பட்ட சங்கிலி; ஒன்னிரும்பு கொண்டென்னத்ரே பேதங்ஙள் = ஒன்று இரும்பினால் செய்யப்பட்டது என்பதுதான் வித்தியாசம்;

**16. ரண்டினாலும் எடுத்து பணிசெய்த**
**சங்ஙலயல்லோ மிஸ்ரமாம் கர்மங்ஙள்**
**பிரஹ்மவாதியாய் ஈச்ச எறும்போளம்**
**கர்மபந்தன்மார் என்னது அறிஞ்ஞாலும்**

ரண்டினாலுமெடுத்து பணிசெய்த = இரண்டினாலும் (பொன் + இரும்பு) பணிசெய்யப்பட்ட; சங்ஙலயல்லோ மிஸ்ரமாம் கர்மவும் = சங்கிலிதானெ மிஸ்ரமான கர்மங்களும்; ப்ரம்மவாதியாய் ஈச்ச யெறும்போளம் = பிரமன் முதல் ஈ, எறும்பு என்று அனைத்து ஜீவராசிகளும்; கர்மபந்தன்மார் என்னதறிஞ்ஞாலும் = கர்மத்தால் பிணைக்கப்பட்டவர்கள் என்பதை அறியுங்கள்.

**17. புவனங்ஙளெ ஸ்ருஷ்டிக்கயென்னது**
**புவனாந்த்ய ப்ரளயம் கழிவோளம்**
**கர்மபாசத்தெ லங்கிக்கயென்னது**
**பிரம்மாவின்னும் எளிதல்ல நிர்ணயம்**

புவனங்ஙளெ ஸ்ருஷ்டிக்கயென்னது = புவனங்களை படைத்தல் என்பது, புவனாந்த்யப்ரளயம் கழிவோளம் = புவனங்களின் அந்தியமான மஹா பிரளயம் முடியும்வரை; கர்மபாசத்தெ லங்கிக்கயென்னது = கர்மபாசத்தை உடைத்தெறிவது என்பது; ப்ரம்மாவின்னுமெளுதல்ல = பிரம்மாவிற்கும் கூட எளிதல்ல; நிர்ணயம் = நிச்சயமாக, நிர்ணயமாக.

**18. திக்பாலகன்மாரும் அவ்வண்ணம் ஓரோரோ**
**திக்குதோறும் தளச்சு கிடக்குன்னு**
**அல்பகர்மிகளாகிய நாமெல்லாம்**
**அல்பகாலம் கொண்டோரோரோ ஜந்துக்கள்**

திக்பாலன்மாருமவ்வண்ணம் = இதேபோன்று திக்பாலகர்கள்கூட; ஓரோரோ திக்கு தோறும் = ஒவ்வொரு திக்கிலும் (திசையிலும்); தளச்சு கிடக்குன்னு = கட்டுப்பட்டுக் கிடக்கின்றனர்; அல்ப கர்மிகளாகிய நாமெல்லாம் = அல்பகர்மிகள் ஆகிய மானுடர்களான நாமெல்லோரும்; அல்பகாலம் கொண்டோரோரோ ஜந்துக்கள் = அல்பகால ஜீவிக்கும் ஒவ்வொருவித ஜந்துக்கள்.

19. **கர்ப பாத்ரத்தில் புக்கும் புறப்பெட்டும்**
**கர்மம் கொண்டு கழிக்குன்னதிங்ஙனெ**
**நரகத்தில் கிடக்குன்ன ஜீவன் போய்**
**துரிதங்ஙள் ஒடுங்ஙி மனஸ்ஸின்டே**

கர்பபாத்ரத்தில் புக்கும் புறப்பெட்டும் = கர்பத்தில் புகுந்தும் வெளிவந்தும்; கர்மம்கொண்டு களிக்குன்னதிங்ஙனெ = கர்ம பலத்தினால் இவ்வாறு விளையாடிக் கொண்டிருக்கின்றோம் (புனரபிஜனனம் புனரபி மரணம் புனரபி ஜனனீ ஜடரே சயனம்); நரகத்தில் கிடக்குன்ன ஜீவன்போய் = நரகத்திலே கிடக்கின்ற ஜீவனானது; துரிதங்ஙள் ஒடுங்ஙி = துரிதங்கள் ஒடுங்கி; மனஸ்ஸின்டெ = மனதினுடைய;

20. **பரிபாகவும் வன்னு க்ரமத்தாலே**
**நரஜாதியில் வன்னு பிறன்னிட்டு**
**ஸுக்ருதம் செய்து மேல்ப்போட்டு போயவர்**
**ஸ்வர்கத்திங்கலிரின்னு ஸுகிக்குன்னு**

பரிபாகவும் வன்னு = பக்குவம் அடைந்து; க்ரமத்தாலே = படிப்படியாக; நரஜாதியில் வன்னு பிறன்னிட்டு = மானுடனாக வந்து பிறந்த பிறகு; ஸுக்ருதம் செய்து = புண்ணியகர்மங்கள் செய்து; மேல்போட்டு போயவர் = மேல்கதியை அடைந்தவர்கள்; ஸ்வர்கத்திங்கலிருன்னு = ஸொர்க்கவாசம் செய்து; ஸுகிக்குன்னு = ஸுகமாக / சௌக்கியமாக வாழுகின்றனர்.

21. **ஸுக்ருதங்ஙள் ஒக்கே ஒடுங்ஙும்போள்**
**பரிபாகவும் எள்ளோளம் இல்லவர்**
**பரிசோடங்ஙு இருன்னிட்டு பூமியில்**
**ஜாதராய் துரிதம்செய்து சத்தவர்**

ஸுக்ருதங்ஙளுமொக்கெயொடுங்ஙும்போள் = அவர்களின் புண்ணிய கர்மங்களின் பலன்கள் தீர்ந்துபோகும்போது; பரிபாகவுமெள்ளோளமில்லவர் = எள்ளளவு கூட பரிபாகம் ஆகாமல் அவர்கள்; பரிசோடங்ஙிருன்னிட்டு = ஸுகமாக அங்கே இருந்துவிட்டு; பூமியில் ஜாதராய் = பூமியில் பிறந்து; துரிதம் செய்து சத்தவர் = பாபகர்மங்ஙள் செய்து அவர்கள் மரணமடைகின்றனர்;

22. **வன்னொரத்துரிதத்தின் பலமாயி**
**பின்னேப்போய் நரகங்ஙளில் வீழுன்னு**
**ஸுரலோகத்தில் நின்னொரு ஜீவன்போய்**
**நரலோக மஹீஸுரனாகுன்னு**

வன்னொரத்துரிதத்தின் பலமாயி = வந்து அந்த துரிதத்தின் பலமாக; பின்னெப்போய் நரகங்ஙளில் விழுன்னு = மீண்டும் நரகத்தில் வீழுகின்றனர்; ஸுரலோகத்தில் நின்னொரு ஜீவன்போய் = தேவலோகத்திலிருந்து ஒரு ஜீவனானது போய்; நரலோக மஹு ஸுரனாகுன்னு = நரலோகமாம் பூமியில் ஒரு பிராமணனாக ஆகின்றது;

23. **சண்டகர்மங்ஙள் செய்தவர் சாகும்போள்**
**சண்டால குலத்திங்கல் பிறக்குன்னு**
**அஸுரன்மார் ஸுரன்மார் ஆயீடுன்னு**
**அமரன்மார் மரங்ஙளாயிடுன்னு**

சண்ட கர்மங்ஙள செய்தவர் சாகும்போள் = அவர்கள் துஷ்கர் மங்கள் / பாபங்கள் செய்து மரணமடையும்பொழுது; சண்டால குலத் திங்கல்ப் பிறக்குன்னு = சண்டாள குலத்தில் பிறக்கின்றனர்; அஸுரன்மார் ஸுரன்மாராயிடுன்னு = அஸுரர்கள் தேவர்களாக ஆகின்றனர்; அமரன்மார் மரங்ஙளாயிடுன்னு = தேவர்கள் மரங்களாக ஆகின்றனர்;

24. **அஜம் சத்து கஜமாய் பிறக்குன்னு**
**கஜம் சத்து அங்ஙு அஜவும் ஆயீடுன்னு**
**நரிசத்து நரனாய் பிறக்குன்னு**
**நாரிசத்து உடன் ஓரியாய் போகுன்னு**

அஜம்சத்து கஜமாய்ப் பிறக்குன்னு = ஆடு இறந்து யானையாகப் பிறக்கின்றது; கஜம் சத்தங்ஙுஅஜவுமாயிடுன்னு = யானை இறந்து பின் ஆடாக ஆகின்றது; நரி சத்து நரனாய்ப் பிறக்குன்னு = நரியானது இறந்து மனுஷ்யனாகப் பிறக்கின்றது; நாரிசத்துடன் ஓரியாய்ப் போகுன்னு = பெண்ணாக இருந்தவள் இறந்த பின் பேயாகப் பிறக்கின்றாள்.

25. **க்ருப கூடாதே பீடிப்பிச்சீடுன்ன**
**ந்ருபன் சத்து க்ருமியாய்ப் பிறக்குன்னு**
**ஈச்ச சத்து ஒரு பூச்சயாயீடுன்னு**
**ஈச்வரன்டெ விலாஸங்ஙளிங்ஙனே**

க்ருபகூடாதே பீடிப்பிச்சீடுன்ன = கருணையில்லாமல் இப்படித் துன்பப் படுத்துகின்ற; ந்ருபன் சத்து க்ருமியாய்ப் பிறக்குன்னு = அரசன் இறந்த பின் க்ருமியாகப் (புழுவாக) பிறக்கின்றான்; ஈச்ச சத்தொரு பூச்சயாயாயீடுன்னு = ஈ இறந்து ஒரு பூனையாக ஆகின்றது; ஈஸ்வரன்டெ விலாஸங்ஙளிங்னெ = ஈச்வரனின் லீலாவிலாசங்கள் இப்படி;

26. **கீழ்மேல் இங்ஙனே மண்டுன்ன ஜீவன்மார்**
**பூமியீன்னத்ரே நேடுன்னு கர்மங்ஙள்**
**ஸீமயில்லாதோளம் பல கர்மங்ஙள்**
**பூமியீன்னத்ரே நேடுன்னு ஜீவன்மார்**

கீழ்மேலிங்ஙனெ = கீழும் மேலுமாக இவ்வாறு; மண்டுன்ன = உழலுகின்ற; ஜீவன்மார் = ஜீவராசிகள்; பூமியீன்னத்ரே = பூமியிலிருந்து தானாம்; நேடுன்னு கர்மங்கள் = கர்மங்களை தேடிக்கொள்கின்றனர்; ஸீமயில்லாதோளம் = கரைகடந்த / எல்லையற்றவையான;

27. **அங்ஙனே செய்து நேடி மரிச்சுடன்**
**அன்ய லோகங்ஙள் ஓரோன்னில் ஓரோன்னில்**
**சென்னிருன்னு புஜிக்குன்னு ஜீவன்மார்**
**தங்ஙள் செய்தொரு கர்மங்ஙள் தன்பலம்**

அங்ஙனெ செய்து நேடி மரிச்சுடன் = அவ்வாறு செய்து கர்மங்கள் ஏற்றிக்கொண்டு, இறந்துஉடனடியாக; அன்ய லோகங்ஙளோரோன்னி

லோரோன்னில் = (பூமிதவிர) மற்ற ஏனைய லோகங்கள் ஒவ்வொன்றாக; சென்னிருன்னு = சென்றிருந்து; புஜிக்குன்னு ஜீவன்மார் = அனுபவிக்கின்றனர் ஜீவாத்மாக்கள்; தங்ஙள் செய்தொரு கர்மங்ஙள் தன் பலம் = அவரவர்கள் செய்த கர்மபலங்களை;

**28. ஒடுங்ஙீடும் அதொட்டு நாள் செல்லும்போள்**
**உடனே வன்னு நேடுன்னு பின்னேயும்**
**தன்டே தன்டே க்ருஹத்திங்கல் நின்னுடன்**
**கொண்டுபோன்ன தனம் கொண்டு நாமெல்லாம்**

ஓடுங்ஙீடுமதொட்டுநாள் செல்லும்போள் = பலநாட்கள் சென்ற பின் அவை (கர்மங்கள்) ஒடுங்கிவிடும்; உடனே வன்னு நேடுன்னு பின்னேயும் = உடனேயே வந்து மீண்டும் நேடுகின்றனர்; தன்டே தன்டே க்ருஹத்திங்கல் நின்னுடன் = அவனவன் க்ருஹத்திலிருந்து; கொண்டுபோன்ன தனம்கொண்டு நாமெல்லாம் = நாமெல்லோரும் கொண்டு வந்த தனத்தை;

**29. மற்றெங்ஙானும் ஒரெடத்திருன்னீட்டு**
**விற்றுண்ணுனென்னு பறயும் கணக்கினெ**
**கர்மங்ஙள்க்கு விளபூமியாகிய**
**ஜன்ம தேசம் இப்பூமி அறிஞ்ஞாலும்**

மற்றெங்ஙானுமொரேடத்திருன்னிட்டு = வேறு எங்கோ ஓரிடத்தில் அமர்ந்துகொண்டு; விற்றுண்ணுன்னென்னு = விற்றுச் சாப்பிடுகின்றோம் என்பதுபோல்; பறயும் கணக்கினெ = என்று சொல்லும்படியாக; கர்மங்ஙள்க்கு விளபூமியாகிய = கர்மங்களுக்கு விளைநிலமான; ஜன்மதேசமிப் பூமியறிஞ்ஞாலும் = ஜன்மதேசம் இந்தப் பூமியென்பதை அறிவாயாக;

**30. கர்மநாசம் வருத்தேணமெங்கிலும்**
**செம்மெ மற்றெங்ஙும் ஸாதியா நிர்ணயம்**
**பக்தன்மார்க்கும் முமுக்ஷு ஜனங்ஙள்க்கும்**
**ஸக்தராய விஷயி ஜனங்ஙள்க்கும்**

கர்மநாசம் வருத்தேணமெங்கிலும் = கர்மநாசம் ஏற்படவேண்டு மானால்கூட; செம்மே = நன்றாக; மற்றெங்ஙும் = வேறெங்கும்; ஸாதியா

= இயலாது. நிர்ணயம் = நிச்சயமாக; பக்தன்மார்க்கும் முமுக்ஷு ஜனங்ஙள்க்கும் = பக்தஜனங்களுக்கும் மோக்ஷத்தை இச்சிக்கின்ற ஜனங்களுக்கும்; ஸக்தராய விஷயி ஜனங்ஙள்க்கும் = விஷயாஸக்தியுள்ளவர்களுக்கும்;

31. இச்சிச்சீடுன்னதொக்கெ கொடுத்தீடும்
விச்வ மாதாவு பூமி சிவ சிவ!!
விச்வநாதன்டே மூல ப்ரக்ருதி தான்
ப்ரத்யக்ஷேண விளங்ஙுன்னு பூமியாய்

இச்சிச்சீடுன்னதொக்கெக் கொடுத்திடும் = ஆசைப்படுவதையெல்லாம் கொடுக்கின்ற; விச்வமாதாவு பூமிசிவசிவ = ஜகத்ஜனனியாம் பூமித்தாய் சிவசிவ; விச்வநாதன்டெ மூல ப்ரக்ருதிதான் = விச்வநாதன் ஆகிய ஜகன்நாதனுடைய மூல ப்ரக்ருதியே; ப்ரத்யக்ஷேண = பிரத்யக்ஷமாக/நிதர்சனமாக; விளங்ஙுன்னு பூமியாய் = விளங்குகின்றது பூமியாக;

32. அவனீதல பாலனத்தின்னல்லோ
அவதாரங்ஙளும் பலதோர்க்கும்போள்
அதுகொண்டு விசேஷிச்சும் பூலோகம்
பதினாலிலும் உத்தமம் என்னல்லோ

அவனீதலபாலநத்தின்னல்லோ = பூதலம் முழுவதையும் ரட்சிப்பதற்காகத்தானே; அவதாரங்ஙளும் பலதோர்க்கும்போள் = அவதாரங்கள் பல நிகழ்கின்றன என்பதை நினைக்கும்பொழுது; அதுகொண்டு = அதனால்; விசேஷிச்சும் பூலோகம் = விசேஷமானதாக பூலோகம்; பதினாலிலுமுத்தமமென்னல்லோ = ஈரேழு பதிநான்கு லோகங்களிலும் உத்தமமானதல்லவோ;

33. வேதவாதிகளாகிய முனிகளும்
வேதவும் பஹுமானிச்சு சொல்லுன்னு
லவணாம்புதி மத்யே விளங்ஙுன்ன
ஜம்பு த்வீபொரு யோஜன லக்ஷவும்

வேதவாதிகளாய முனிகளும் = வேதவித்துக்களான முனிவர்களும்; வேதவும் பஹுமானிச்சு சொல்லுன்னு = வேதமும்கூட மரியாதையுடன்

உரைக்கின்றது; லவணாம்புதிமத்யே விளங்ஙுன்ன = லவண சமுத்திரத்தின் நடுவில் விளங்குகின்ற; ஜம்புத்வீபொரு யோஜன லக்ஷவும் = ஜம்புத்வீபம் என்பது ஒரு லட்சம் யோஜனையானது;

**34. ஸப்தத்வீபுகள் உண்டதிலெத்ரயும்**
**உத்தமம் என்னு வாழ்த்துன்னு பின்னேயும்**
**பூபத்மத்தினு கர்ணிகயாயிட்டு**
**பூதரேந்திரன் அதிலல்லோ நில்க்குன்னு**

ஸப்தத்வீபுகளுண்டதிலெத்ரயும் = ஸப்தத்வீபங்கள் உள்ளவற்றில் மிகவும்; உத்தமமென்னு வாழ்த்துன்னு பின்னெயும் = உத்தமமானது என்று மீண்டும் வாழ்த்துகின்றன; பூபத்மத்தினு = பூமியை ஒரு தாமரையுடன் ஒப்பிட்டு; கர்ணிகயாயிட்டு = நடுநாயகமாக; பூதரேந்த்ரனிதிலல்லோ நில்க்குன்னு = பூதரேந்திரன் ஏழு பர்வதங்களில் மேன்மையான மேருபர்வதம் இங்குதானே நிற்கின்றது;

**35. இதில் ஒன்பது கண்டங்ஙளுண்டல்லோ**
**அதில் உத்தமம் பாரத பூதலம்**
**ஸன்மதராய மாமுனி ஸ்ரேஷ்டன்மார்**
**கர்ம க்ஷேத்ரமென்னல்லோ பறயுன்னு**

இதிலொன்பது கண்டங்ஙளுண்டல்லோ = இதில் ஒன்பது கண்டங்கள் உள்ளனவே; அதிலுத்தமம் பாரதபூதலம் = அவற்றில் உத்தமமானது பாரதபூமியாம்; ஸம்மதராய மாமுனிஸ்ரேஷ்டன்மார் = உத்தமர்களான மாமுனிவர்கள்; கர்மக்ஷேத்திரமென்னல்லோ பறயுன்னு = (பாரதபூமியை) கர்மக்ஷேத்திரம் என்று தானே சொல்கின்றனர்;

**36. கர்மபீஜம் அதீன்னுமுளய்கேண்டு**
**ப்ரம்ம லோகத்திரிய்க்குன்னவர்கள்க்கும்**
**கர்மபீஜம் வரட்டிக் களஞ்ஞுடன்**
**ஜன்ம நாசம் வருத்தேணம் எங்கிலும்**

கர்ம பீஜமதீன்னு முளய்க்கேண்டு = கர்மபீஜமானது (வித்தானது) இதிலிருந்துதான் முளைக்க வேண்டும்; ப்ரம்மலோகத்திரிக்குன்னவர்

கள்க்கும் = பிரம்மலோகத்திலுள்ளவர்களுக்கும்கூட; கர்மபீஜம் வரட்டிக் களஞ்னுடன் = கர்மபீஜத்தை ஒட்ட வரட்டியெடுத்துக்களைந்து; ஜன்மநாசம் வருத்தேணமெங்கிலும் = ஜன்மநாசம் வரவேண்டுமானால்கூட;

37. **பாரதமாய கண்டமொழிஞ்ஞுள்ள**
**பாரில் எங்நும் எளிதல்லா நிர்ணயம்**
**அத்ர முக்யமாயிட்டுள்ளொரு பாரதம்**
**இப்ரதேசம் என்னெல்லாரும் ஓர்க்கணம்**

பாரதமாய கண்டமொழிஞ்ஞுள்ள = பாரததேசம் தவிர இதர கண்டங்களுள்ளதில்; பாரிலெங்குமெளுதல்ல நிர்ணயம் = பாரில் வேறு எங்கும் எளிதானதல்ல நிச்சயமாக; அத்ர முக்யமாயீட்டுள்ள பாரதம் = அவ்வளவு முக்கியமானதான பாரததேசம்; இப்ரதேசமென்னெல்லாரும் ஓர்க்கணம் = இப்பிரதேசம் என்பதை எல்லோரும் நினைவில்கொள்ள வேண்டும்;

38. **யுகம் நாலிலும் நல்ல கலியுகம்**
**ஸுகமே தன்னே முக்தி வருத்துவான்**
**க்ருஷ்ண க்ருஷ்ணா முகுந்தா ஜனார்த்தனா**
**க்ருஷண கோவிந்த ராமா என்னிங்ஙனே**

யுகம்நாலிலும் நல்ல கலியுகம் = நான்கு யுகங்களில் ஸ்ரேஷ்டமானது கலியுகம்; ஸுகமே தன்னே முக்தி வருத்துவான் = ஸுகமாக / மிகஎளிதாக மோக்ஷம் / முக்தி கிடைக்க; க்ருஷ்ண க்ருஷ்ண முகுந்தா ஜனார்த்தனா க்ருஷ்ண கோவிந்த ராமா என்னிங்ஙனே = க்ருஷ்ண க்ருஷ்ணா முகுந்தா ஜனார்த்தனா க்ருஷ்ண கோவிந்த ராமா என்றிப்படி;

39. **திருநாமசம்கீர்த்தனம் என்னியே**
**மற்றில்லேதுமே யத்னம் அறிஞ்ஞாலும்**
**அதுசிந்திச்சு மற்றுள்ள லோகங்ஙள்**
**பதினுனிலும் உள்ள ஜனங்ஙளும்**

திருநாமஸங்கீர்த்தனமென்னியே = திருநாமஸங்கீர்த்தனத்தை தவிர; மற்றில்லேதுமே யத்னமறிஞ்ஞாலும் = வேறு எந்த பிரயத்தினமும் இல்லையென்பதை அறிந்துகொள்ளுங்கள்; அது சிந்திச்சு = அதைப்பற்றி

சிந்தித்து; மற்றுள்ள லோகங்கள் பதிமூன்னிலுமுள்ள ஜனங்ஙள் = மற்று பதிமூன்று லோகங்களிலுமுள்ள ஜனங்களும்;

40. **மற்று த்வீபுகள் ஆறிலும் உள்ளோரும்**
**மற்று கண்டங்ஙள் எட்டிலும் உள்ளோரும்**
**மற்றுமூன்னு யுகங்ஙளிலும் உள்ளோரும்**
**முக்தி தங்ஙள்க்கு ஸாத்த்யமல்லாய்கயால்**

மற்று த்வீபுகளாறிலுமுள்ளோரும் = மற்ற ஆறு த்வீபங்களிலுமுள்ளவர்களும்; மற்று கண்டங்ஙளெட்டிலுமுள்ளோரும் = மற்ற எட்டு கண்டங்களிலுமுள்ளவர்களும்; மற்றுமுன்னு யுகங்ஙளிலு முள்ளோரும் = மற்ற மூன்று யுகங்களிலுமுள்ளவர்களும்; முக்தி தங்ஙள்க்கு ஸாத்யமல்லாய்கயால் = தங்களுக்கு முக்தி (மோட்சம்) இயலாத தாகவுள்ளதால்;

41. **கலிகாலத்தெ பாரதகண்டத்தே**
**கலிதாதரம் கை வணங்ஙீடுன்னு**
**அதில் வன்னொரு புல்லாயிட்டெங்கிலும்**
**இதுகாலம் ஜனிச்சு கொண்டீடுவான்**

கலிகாலத்தெ பாரதகண்டத்தெ = கலிகாலத்தினை, பாரதகண்டத் தினை; கலிதாதரம் கைவணங்ஙீடுன்னு = மிகவும் ஆதரவுடன் வணங்குகின்றனர்; அதில் வன்னொரு புல்லாயிட்டெங்கிலும் = அதில் வந்து ஒரு புல்லாகவாவது; இதுகாலம் ஜனிச்சுகொண்டீடுவான் = இந்தக்காலத்தில் (கலியில்) ஜனிக்க வேண்டுமே என்று;

42. **யோக்யத வருத்தீடுவான் தக்கொரு**
**பாக்யம் போராதே போயல்லோ தெய்வமே!!**
**பாரத கண்டம் தன்னில் பிறன்னொரு**
**மானுஷர்க்கும் கலிக்கும் நமஸ்காரம்**

யோக்யத வருத்தீடுவான் தக்கொரு = யோக்கியதை வருவதற்குத் தகுந்ததான ஒரு; பாக்யம் போராதே போயல்லோ தைவமே = பாக்கியம் போதாமல்போய்விட்டதே தெய்வமே! பாரதகண்டம் தன்னில்

= கஷ்டம் கஷ்டம் என சிந்தனை செய்யாமல்; சுட்டு தின்னுன்னு ஜன்மம் பழுதே நாம் = நாம் நமக்கு ஏற்பட்ட துர்லபமான மானுட ஜன்மத்தை வீணடிக்கின்றோம்;

46. எத்ர ஜன்மம் ப்ரயாசப்பெட்டு இக்காலம்
அத்ர வன்னு பிறன்னு ஸுக்ருதத்தால்
எத்ர ஜன்மம் மலத்தில் கழிஞ்ஞதும்
எத்ர ஜன்மம் ம்ருகங்ஙள் பசுக்களாய்

எத்ரஜன்மம் = எவ்வளவு ஜன்மங்கள்; ப்ரயாசப்பெட்டிக்காலம் = பிரயாசைப்பட்டு இந்தக்காலத்தில்; அத்ரவன்னு பிறன்னு ஸுக்ருதத்தால் அவ்வளவு கஷ்டப்பட்டு சேவை பண்ணிய பலனால் வந்து பிறந்தோம்; எத்ர ஜன்மம் மலத்தில் கழிஞ்ஞதும் = எத்தனை ஜன்மங்கள் மலத்தில் அசுத்தத்தில் புழுவாக நெளிந்துகொண்டு கடந்துவிட்டது; எத்ர ஜன்மம் ஜலத்தில் கழிஞ்ஞதும் = எத்தனை ஜன்மம் ஜலத்தில் நீந்திக்கொண்டு கடந்துவிட்டது;

47. எத்ர ஜன்மங்ஙள் மண்ணில் கழிஞ்ஞதும்
எத்ர ஜன்மம் மரங்ஙளாய் நின்னதும்
எத்ர ஜன்மம் அரிச்சு நடன்னதும்
எத்ர ஜன்மம் ம்ருகங்ஙள் பசுக்களாய்

எத்ர ஜன்மங்கள் மண்ணில் கழிஞ்ஞதும் = எத்தனை ஜன்மங்கள் மண்ணில் கடந்துசென்றது; எத்ர ஜன்மம் மரங்ஙளாய் நின்னதும் = எத்தனை ஜன்மம் மரங்களாக நின்று கொண்டு கடந்துவிட்டது; எத்ர ஜன்மம் அரிச்சு நடன்னதும் = எத்தனை ஜன்மங்கள் ஊர்ந்து சென்று கடந்துவிட்டது; எத்ர ஜன்மம் ம்ருகங்ஙள் பசுக்களாய் = எத்தனை ஜன்மம் மிருகங்களாகவும் பசுக்களாகவும்;

48. அத்ர வன்னிட்டு இவ்வண்ணம் லபிச்சொரு
மாநுட ஜன்மத்தில் முன்பே கழிச்சு நாம
ஸ்ரேயம் பண்டேபெட்டு இங்ஙு மாதாவின்
கர்ப்பாத்ருத்தில் வீணதறிஞ்ஞாலும்

அத்ர வன்னிட்டிவண்ணம் லபிச்சொரு = அவ்வளவு பிரயாஸைப்பட்டுக் கிடைக்கப்பெற்ற ஒரு; மர்த்ய ஜன்மத்தின் மும்பே = மானுட ஜன்மம் கிடைப்பதற்கு முன்பாக; கழிச்சு நாம் = நாம் செலவழித்து வீணடித்து விட்டோம் நாம்; எத்ரயும் பணிப்பெட்டிங்நு = எவ்வளவோ கஷ்டப்பட்டு இங்கு; மாதாவின் = தாயின்; கர்ப்பபாத்ரத்தில் = கர்ப்பப்பையில், வீணதிலென்னாலும் = வந்து வீழ்ந்தோம் என்பதை அறியுங்கள்;

49. **பத்துமாஸம் வயிற்றில் கழிஞ்ஞுபோய்**
**பத்துபந்த்ராண்டு உண்ணியாயிட்டும்போய்**
**தன்னேத்தான் அபிமானிச்சு பின்னேடம்**
**தன்னேத்தான் அறியாதே கழியுன்னு**

பத்துமாஸம் வயிற்றில் கழிஞ்ஞுபோய் = பத்து மாதங்கள் தாயின் வயிற்றில் கடந்துபோய்விட்டது; பத்து பந்த்ராண்டு = பத்து பன்னிரண்டு ஆண்டுகாலம்; உண்ணியாயிட்டும் போய் = குழந்தைப் பருவத்திலும் போய்விட்டன; தன்னெத்தானெபிமானிச்சு = தான் உயர்ந்தவன் / பெரியவன் என்கின்ற அபிமானத்தில் / கர்வத்தில்; பின்னேடம் = பின்புவரும் ஆண்டுகளில்; தன்னெத்தானறியாதெ கழியுன்னு = நாம் யார் என்பதைத் தெரிந்து கொள்ளாமலேயே போய்விடுகின்றன.

50. **இத்ரகாலம் இரிக்குமினியென்னும்**
**ஸத்யமோ நமுக்குஏதும் ஒன்னில்லல்லோ**
**நீர்ப்போள போலேயுள்ளஒரு தேஹத்தில்**
**வீர்ப்பு மாத்ரமுண்டிங்ஙனே காணுன்னு**

இத்ரகாலமிரிக்குமினியென்னும் = இனிமேல் இத்தனை காலம் உயிருடனிருப்போம் என்பதும்; ஸத்யமோ = சத்தியம்; நமுக்கேதுமொன்னில்லல்லோ = நமக்கு எவ்வித உத்தரவாதமும் இல்லையே; நீர்ப்போள = நீர்க்குமிளி; போலுள்ள தேஹத்தில் = போன்ற சரீரத்தில்; வீர்ப்பு மாத்ரமுண்டிங்ஙினெ காணுன்னு = (வயோதிகத்தில்) உயிர்மூச்சு உடலை விடுகின்றது;

51. **ஓர்த்தறியாதே பாடுபெடுன்னேரம்**
**நேர்த்துபோகும் அதென்னே பறயாவூ**

**அத்ரமாத்ரம் இரிக்குன்ன நேரத்து**
**கீர்த்திச்சீடுன்னதில்லா திருநாமம்**

ஓர்த்தறியாதே = நம்மையறியாமல் / எதிர்பார்க்காதபோது; பாடுபெடுன்னேரம் = அவஸ்த்தைப்படும்போது; நேர்த்துபோகுமதென்னே பறயாவூ = அது (சுவாசமானது) நீர்த்துப்போகும் என்றுதான் சொல்ல வேண்டும்; அத்ரமாத்ரமிரிக்குன்ன நேரத்து = அவ்வளவு சொற்பமாகவுள்ள நேரத்தில்; கீர்த்திச்சீடுன்னில்ல திருநாமம் = பகவானின் திருநாமங்களைக் கீர்த்தனம் செய்வதில்லை;

52. **ஸ்தானமானங்ஙள் சொல்லி கலஹிச்சு**
**நாணம் கெட்டு நடக்குன்னிது சிலர்**
**மதமல்ஸரம் சிந்திச்சு சிந்திச்சு**
**மதிகெட்டு நடக்குன்னிது சிலர்**

ஸ்தானமானங்ஙள் = உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்கின்ற பாகுபாடுகள்; சொல்லிக்கலஹிச்சு = சொல்லி ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக்கொண்டு; நாணம் கெட்டு நடக்குன்னிது சிலர் = சிலர் வெட்கமில்லாமல் திரிகின்றனர்; மதமல்ஸரம் சிந்திச்சு சிந்திச்சு = போட்டி பொறாமையைப் பற்றியே சிந்தனை செய்துகொண்டு; மதிகெட்டு நடக்குன்னிது சிலர் = சிலரோ புத்தி கெட்டு நடக்கின்றனர்;

53. **சஞ்சலாக்ஷிமார் வீடுகளில் புக்கு**
**குஞ்சிராமனாயாடுன்னிது சிலர்**
**கோலகங்ஙளில் ஸேவகராயிட்டு**
**கோலம் கெட்டி ஞெளியுன்னிது சிலர்**

சஞ்சலாக்ஷிமார் வீடுகளில் புக்கு = துஷ்டஸ்த்ரீகளின் வீடுகளுக்குச் சென்று; குஞ்சிராமனாயாடுன்னிது சிலர் = சிலரோ குரங்குகளாக கேலிக்கூத்தாடுகின்றனர்; கோலகங்களில் = கொட்டாரங்களில் / அரண் மனைகளில்; சேவகம் செய்திட்டு = வேலைக்காரர்களாக பணிசெய்து; கோலம்கெட்டி ஞெளியுன்னிது சிலர் = சிலர் தான்தான் முதலாளி என்பதுபோல் துள்ளுகின்றனர்;

54. சாந்தி செய்து புலர்த்துவானாயிட்டு
சந்த்யயோளம் நடக்குன்னிது சிலர்
அம்மயக்கும் புனர் அச்சனும் பார்யக்கும்
உண்மான் போலும் கொடுக்குன்னில்ல சிலர்

சாந்தி செய்து = கோவில்களில் பணிசெய்து; புலர்த்துவானாயிட்டு = குடும்பத்தைக் காப்பாற்றவேண்டி; ஸந்த்யயோளம் நடக்குன்னிது சிலர் = சிலரோ ஸந்த்யாகாலம் வரையிலும் நடக்கின்றனர்; அம்மக்கும் புனரச்சனும் பார்யக்கும் = தாய், தந்தை, பத்தினி ஆகியோருக்கு; உண்மான்போலும் கொடுக்குன்னில சிலர் = சிலரோ சரியாக சாப்பாடு கூட கொடுப்பதில்லை;

55. அக்னி சாக்ஷியாயொரு பத்னியே
ஸ்வப்னத்தில் போலும் காணுன்னில்ல சிலர்
ஸத்துக்கள் கண்டு சிக்ஷிச்சு சொல்லும்போள்
சத்ருவேப்போலெ க்ருத்திக்குன்னு சிலர்

அக்னி ஸாக்ஷிணியாயொரு பத்னியே = அக்னி ஸாக்ஷியாக திருமணம் செய்து கொண்ட பத்தினியை; ஸ்வப்னத்தில்போலும் = கனவில்கூட; காணுன்னில் சிலர் = காண்பதில்லை சிலர்; ஸத்துக்கள் கண்டு சிக்ஷிச்சு சொல்லும்போள் = ஸத்தான ஸாதுக்கள் புத்திமதி சொன்னால்; சத்ருவெப்போலெ க்ருத்திக்குன்னு சிலர் = அவர்களை சத்துருவைப்போல் பார்த்துக் கோபித்துக்கொள்கின்றனர் வேறுசிலர்;

56. வந்திதன்மாரேக் காணுன்ன நேரத்து
நிந்திச்சத்ரே பறயுன்னிது சிலர்
காண்க, நம்முடெ ஸம்ஸாரம் கொண்டத்ரே
விச்வம் ஈவண்ணம் நில்பூ என்னும் சிலர்

வந்திதன்மாரெக் காணுன்ன நேரத்து = வணக்கத்துக்குரிய பெரியோர்களைப் பார்க்கும்பொழுது; நிந்திச்சத்ரே பறயுன்னிது சிலர் = அவர்களை நிந்தனை செய்கின்றனர் சிலர்; காண்க = பார்; நம்முடெ ஸம்ஸாரம் கொண்டத்ரே = என்னுடைய வாக்ஸாமர்த்தியத்தில்தான்; விச்வமீவண்ணம் நில்பூ என்னும் சிலர் = இந்த உலகமே இவ்வண்ணம் செயல்படுகின்றது என்று சிலர்;

57. ப்ராம்மண்யம் கொண்டு குந்திச்சு குந்திச்சு
ப்ரம்மாவும் எனிக்கொவ்வா என்னுசிலர்
அர்த்தாசக்கு விருது விளிப்பிப்பான்
அக்னிஹோத்ராதி செய்யுன்னிது சிலர்

ப்ராம்மண்யம் கொண்டு குந்திச்சு குந்திச்சு = பிராமணத்துவம் காரணமாகக் கொண்டு குதித்து குதித்து; ப்ரம்மாவுமெனிக் கொவ்வாயென்னுசிலர் = நான் பிரம்மனுக்குச் சமானமானவன் என்று சிலர்; அர்த்தாசக்கு விருது விளிப்பிப்பான் = பணத்தாசையை பூர்த்தி செய்து கொள்வதற்க்காக ; அக்னிஹோத்ராதி செய்யுன்னிது சிலர் = அக்னிஹோத்ரம் முதலான ஹோமங்களைச் செய்கின்றனர் சிலர்

58. ஸ்வர்ணங்ஙள் நவரத்னங்ஙளேக் கொண்டும்
எண்ணம் கூடாதே வில்க்குன்னிது சிலர்
மத்தேபம் கொண்டு கச்சவடம் செய்தும்
உத்தம துரகங்ஙள் அது கொண்டும்

ஸ்வர்ணங்ஙள் நவரத்னங்ஙளெக்கொண்டும் = தங்கம், நவரத்னங்கள் ஆகியவை கொண்டு; எண்ணம் கூடாதே வில்க்குன்னிது சிலர் = எண்ணிலடங்காமல் / கணக்கு வழக்கில்லாமல் விற்கின்றனர் சிலர்; மத்தேபம் கொண்டு கச்சவடம் செய்தும் = யானையின் மேல்வைத்து வியாபாரம் செய்தும்; உத்தம துரகங்களது கொண்டும் = உத்தமமான குதிரைகளின்மேல் வைத்துக் கொண்டும்;

59. அத்ரயுமல்லா கப்பல் வெப்பிச்சீட்டும்
எத்ர நேடுன்னிதர்த்தம் சிவசிவ!!
வ்ருத்தியும் கெட்டு தூர்த்தராய் எப்போழும்
அர்த்தத்தெ கொதிச்செதிர நசிக்குன்னு

அத்ரயுமல்ல = அதுவும் போதாதென்று; கப்பல்வெப்பிச்சிட்டும் = கப்பல் வைத்துக்கொண்டும்; எத்ர நேடுன்னிதர்த்தம் சிவ சிவ! எத்தனைதான் தனம் தேடுவார்களோ சிவ சிவ! வ்ருத்தியும்கெட்டு = ஆசார அனுஷ்டானங்களை கைவிட்டு; தூர்த்தராயெப்போழும் = எப்போதும் பெருத்த செலவாளிகளாக; அர்த்தத்தெக் கொதிச்சு =

பணத்துக்காக ஆசைப்பட்டு; எத்ர நசிக்குன்னு = எவ்வளவு நாசமடைகின்றனர்;

60. அர்த்தமெத்ர வளரெயுண்டாயாலும்
த்ருப்தியாகா மனஸ்ஸின்னொரு காலம்
பத்துகிட்டுகில் நூறு மதியென்னும்
சதமாகில் ஸஹஸ்ரம் மதியென்னும்

அர்த்தமெத்ர வளரெயுண்டாயாலும் = எவ்வளவுதான் பணம் கையிலிருந்தாலும்; த்ருப்தியாகா மனஸ்ஸின்னொரு காலம் = மனம் ஒருபோதும் திருப்தியடைவதில்லை; பத்து கிட்டுகில் நூறு மதியென்னும் = பத்துகிடைத்தால் நுறுவேண்டுமென்றும்; சதமாகில் ஸஹஸ்ரம் மதியென்னும் = நூறானால் ஆயிரம் வேண்டுமென்றும்;

61. ஆயிரம் பணம் கையில் உண்டாகும்போள்
அயுதம் ஆகில் ஆச்சர்யம் என்னதும்
ஆசயாயுள்ள பாசம் அதிங்கேன்னு
வேர்விடாதே கரேறுன்னு மேல்க்குமேல்

ஆயிரம் பணம் கையிலுண்டாகும்போள் = கையிருப்பு ஆயிரம் பணம் இருந்தால்; அயுதமாகில்லாச்சர்யம் என்னதும் = போதுமென்று தோன்றாதது தான் ஆச்சரியம்; ஆசயாயுள்ள = ஆசையாகின்ற; பாசமதிங் கேன்னு = பாசத்திலிருந்து; வேர்விடாதே= வேர்பிரியாமல்; கரேறுன்னு மேல்க்குமேல் = மேலும் மேலும் கட்டை இறுக்கிக் கொள்கின்றனர்;

62. ஸத்துக்கள் சென்னு இரன்னால் அர்த்தத்தில்
ஸ்வல்பமாத்ரம் கொடா சில துஷ்டன்மார்
சத்துபோம் நேரம் வஸ்த்ரமதுபோலும்
ஒத்திடா கொண்டுபோகான் ஒருத்தர்க்கும்

ஸத்துக்கள் = நல்லோர்கள்; சென்னிரன்னால் = சென்று யாசகமாகக் கேட்டால்; அர்த்தத்தில் ஸ்வல்பமாத்ரம் கொடா சில துஷ்டன்மார் = சில துஷ்டர்கள் அப்பணத்திலிருந்து சிறிதும் கொடுக்கமாட்டார்கள்; சத்துபோகும் நேரம்இறக்கும் தறுவாயில்; வஸ்த்ரமதுபோலும் = உடுத்த

துணி கூட; ஒத்திடா கொண்டு போவானொருத்தற்கும் = கொண்டுபோக ஒருவருக்கும் இயலாது;

**63. பச்சாத்தாபம் ஒரெள்ளோளம் இல்லாதே**
**விச்வாஸ பாதகத்தெக் கருதுன்னு**
**வித்தத்தில் ஆச பற்றுக ஹேதுவாய்**
**ஸத்யத்தே த்யஜிக்குன்னு சிலர் அஹோ**

பச்சாத்தாபமொரெள்ளோளமில்லாதெ = ஓர் எள்ளளவு கூட பச்சாதாபம் இல்லாமல்; விச்வாஸபாதகத்தெக் கருதுன்னு = விசுவாசவஞ்சனை செய்வது குறித்து நினைக்கின்றனர்; வித்தத்திலாச பற்றுக ஹேதுவாய் = பணத்திலுள்ள ஆசை காரணமாக; ஸத்யத்தே த்யஜிக்குன்னு சிலரஹோ = அஹோ கஷ்டம், சிலர் உண்மையை / சத்தியத்தைக் கைவிடுகின்றனர்;

**64. ஸத்யமென்னதும் ப்ரம்மமது தன்னே**
**ஸத்யமென்னு கருதுன்னு ஸத்துக்கள்**
**வித்ய கொண்டறியேண்டது அறியாதே**
**வித்வானென்னு நடிக்குன்னிது சிலர்**

ஸத்யமென்னது = சத்தியம் என்பது; ப்ரம்மமதுதன்னெ = பிரம்மம் என்பது தான்; ஸத்யமதென்னு கருதுன்னு ஸத்துக்கள் = ஸத்துக்களான ஸாதுக்கள் பிரம்மமே சத்தியம் என்று கருதுகின்றனர்; வித்யகொண்டறியேண்டதறியாதெ = வித்யையினால் அறியவேண்டியதை தெரிந்து கொள்ளாமல்; வித்வானென்னு நடிக்குன்னு சிலர் = சிலர் வித்வான் / அறிவாளி என்று நினைத்துக் கொள்கின்றனர்;

**65. குங்குமத்தின்டே கந்தமறியாதே**
**குங்குமம் சுமக்கும் போலெ கர்தபம்**
**க்ருஷ்ண க்ருஷ்ணா நிரூபிச்சு காணும்போள்**
**த்ருஷ்ண கொண்டே ப்ரமிக்குன்னிதொக்கேயும்**

குங்குமத்தின்டெ கந்தம் அறியாதெ = குங்குமத்தின் நறுமணத்தை யறியாமல்; குங்குமம் சுமக்கும்போலெ கர்தபம் = கழுதை குங்குமத்தைச்

சுமப்பதுபோல்; க்ருஷ்ண க்ருஷ்ணா நிரூபிச்சு காணும்போள் = க்ருஷ்ண க்ருஷ்ணா, நினைத்துப் பார்த்தால்; த்ருஷ்ண கொண்டே = அத்தியாசை கொண்டே; ப்ரமிக்குன்னுதொக்கெயும் = இவை எல்லாமுமே பிரமிப்பு ஏற்படும் விதமாக நடக்கின்றது;

66. **எண்ணியெண்ணிக் குறையுன்னதாயுஸ்ஸும்**
**மண்டி மண்டிக் கரேறுன்னு மோஹவும்**
**வன்னு ஓணம் கழிஞ்ஞு விஷுவென்னும்**
**வன்னில்லல்லோ திருவாதிரயென்னும்**

எண்ணியெண்ணிக்குறயுன்னதாயுஸ்ஸும் = எண்ணியெண்ணியே ஆயுளும் குறைந்து போகின்றது; மண்டி மண்டிக் கரேறுன்னு மோஹவும் = மோஹம் / ஆசையானது நாமறியாமலேயே ஏறிக்கொண்டே போகின்றது; வன்னுவோணம் கழிஞ்ஞு விஷுவென்னும் = ஓணம் பண்டிகை வந்து பிறகு விஷுப்பண்டிகையும் வந்தது; வன்னில்லல்லோ திருவாதிரயென்னும் = இன்னும் திருவாதிரைப் பண்டிகை வரவில்லையே என்றும்;

67. **கும்பமாஸத்திலாகுன்னு நம்முடெ**
**ஜன்ம நக்ஷத்ரம் அஸ்வதி நாளென்னும்**
**ஸ்ராத்தமுண்டஹோ வ்ருச்சிக மாஸத்தில்**
**ஸத்யயொன்னும் எளிதல்ல இனியென்னும்**

கும்பமாஸத்திலாகுன்னு நம்முடெ ஜன்மநக்ஷத்திரமச்வதி நாளென்னும் = நமது பிறந்தநாளானது கும்ப மாதத்தில் (மாசிமாதம்) அச்வதி நக்ஷத்திரத்தன்றல்லவோ என்றும்; ஸ்ராத்தமுண்டஹோ வ்ருஸ்ச்சிகமாஸத்தில் = கார்த்திகை மாதம் சிரார்த்தம் (திவசம்) உண்டே என்று; ஸத்யயொன்னுமெளுதல்லினியென்னும் = இனிமேல் / அதன்பிறகு விருந்துச் சாப்பாட்டிற்கு சுலபமான வழியில்லை யென்றும்;

68. **உண்ணியுண்டாயீ வேள்ப்பிச்சதில் ஒரு**
**உண்ணியுண்டாயி கண்டாவு ஞானென்னும்**
**கோணிக்கல்த்தன்னே வன்ன நிலம்இனிக்**
**காணமன்யன்னெடுப்பிக்கருதென்னும்**

உண்ணியுண்டாயி = குழந்தை பிறந்து; வேள்ப்பிச்சதிலொரு =(அக்குழந்தை வளர்ந்தபின்) திருமணம் செய்வித்து அதிலொரு; உண்ணியுண்டாயிக் கண்டாவு ஞானென்னும் = குழந்தை (பேரன் / பேத்தி) பிறந்து நான் பார்க்க வேண்டுமென்றும்; கோணிக்கல் தன்னெ வன்ன நிலமினி = வீட்டின் அருகாமையிலேயே கிடைத்த நிலத்தில் இனி; காணமன்யனனெடுப்பிக்கருதென்னும் = அன்யஜனங்கள் விளைச்சல் எடுக்கக்கூடாது என்றும்;

**69.** **இத்தம் ஓரோன்னு சிந்திச்சிரிக்கவே**
**சத்துபோதுன்னு பாவம் சிவ சிவ**
**எந்தினித்ர பறஞ்ஞு விசேஷிச்சும்**
**சிந்திச்சீடுவின் ஆவோளம் எல்லாரும்**

இத்தமோரோன்னு சிந்திச்சிரிக்கவே = இப்படி ஒவ்வொன்றைப் பற்றியும் சிந்தனை செய்துகொண்டிருக்கும்போது; சத்துபோகுன்னு பாவம் சிவசிவ! = சிவ சிவ பாவம் இறந்துபோகின்றனர்; எந்தினித்ர பறஞ்ஞு விசேஷிச்சும் = எதற்காக இவ்வளவு விசேஷமாக, விஸ்தாரமாகச் சொல்கின்றது என்றால்; சிந்திச்சீடுவீனாவோளமெல்லாரும் = எல்லோரும் நன்கு சிந்தனை செய்து பாருங்கள்;

**70.** **கர்மத்தின்டே வலிப்பவும் ஓரோரோ**
**ஜன்மங்ஙள் பலதும் கழிஞ்ஞென்னதும்**
**காலமின்னு கலியுகமாயதும்**
**பாரத கண்டத்தின்டே வலிப்பவும்**

கர்மத்தின்டெ வலிப்பவும் = கர்மத்தினுடைய வலிமையும்; ஒரோரோ = ஒவ்வொரு; ஜன்மங்ஙள் பலதும் கழிஞ்ஞென்னதும் = பலபல ஜன்மங்கள் முடிந்துபோய் விட்டன என்பதும்; காலமின்னு கலியுகமாயதும் = தற்போது நடப்பது கலியுகம் என்பதையும்; பாரதகண்டத்தின்டெ வலிப்பவும் = பாரதபூமியின் விஸ்தாரமும்;

**71.** **அதில் வன்னு பிறன்னதுமெத்ர நாள்**
**பழுதே தன்னே போய ப்ரகாரவும்**
**ஆயுஸ்ஸின்டே ப்ரமாணமில்லாததும்**
**ஆரோக்யத்தோடே இரிக்குன்னவஸ்தையும்**

அதில் வன்னு பிறன்னதுமெத்ர நாள் = அங்கு வந்து பிறந்த பிறகு எத்தனை நாட்கள்; பழுதே தன்னே போய ப்ரகாரமும் = வீணாக்கப்பட்ட நாட்கள் எத்தனை என்பதும்; ஆயுஸ்ஸின்டெ ப்ரமாணமில்லாத்ததும் = ஆயுட்காலத்துக்கு உத்தரவாதம் இல்லாததும்; ஆரோக்யத்தோடிரிக் குன்னவஸ்தயும் = ஆரோக்கியமாக இருப்போமா என்கின்ற நிலைமையும்;

72. **இன்னு நாமஸம்கீர்த்தனம் கொண்டுடன்**
**வன்னு கூடும் புருஷார்த்தமென்னதும்**
**இனியுள்ள நரகபயங்ஙளும்**
**இன்னு வேண்டும் நிரூபணம் ஒக்கேயும்**

இன்னு நாமஸங்கீர்த்தனம் கொண்டுடன் = இன்றைக்கு நாமஸங்கீர்த்தனத்தால் உடனேயே; வன்னு கூடும் = வந்தடையும்; புருஷார்த்தமென்னதும்; வாழ்க்கைக்குத் தேவையான அனைத்து புருஷார்த்தங்களும்; இனியுள்ள நரகபயங்ஙளும் = இனி வரவிருக்கின்ற நரகபயங்களும்; இன்னுவேண்டும் நிரூபணமொக்கெயும் = இன்றைக்குத் தேவையான சான்றுகளனைத்தும்;

73. **எந்தினு வ்ருதா காலம் களயுன்னு?**
**வைகுண்டத்தினு போய்க்கொள்வீன் எல்லாரும்**
**கூடியல்லா பிறக்குன்ன நேரத்தும்**
**கூடியல்லா மரிக்குன்ன நேரத்தும்**

எந்தினு = எதற்காக; வ்ருதா = வீணாக; காலம் களயுன்னு = காலத்தைப் போக்குகின்றீர்கள்; வைகுண்டத்தினு போய்க்கோள்வீனெல் லாரும் = எல்லோரும் வைகுண்டத்திற்குப் போய்க் கொள்ளுங்கள்; கூடியல்லா பிறக்குன்ன நேரத்தும் = பிறக்கும்போது சேர்ந்து பிறக்கவில்லை; கூடியல்லா மரிக்குன்ன நேரத்தும் = இறக்கும்போதும் சேர்ந்து இறப்பதில்லை;

74. **மத்யே இங்ஙனே காணுன்ன நேரத்து**
**மல்ஸரிக்குன்னதெந்தினு நாம் வ்ருதா**
**அர்த்தமோ புருஷார்த்தம் இரிக்கவே**
**அர்த்தத்தின்னு கொதிக்குன்னதெந்து நாம்**

மத்யேயிங்ஙனெ காணுன்ன நேரத்து = மத்தியில் / இடைப்பட்ட காலத்தில் இப்படிப் பார்த்துக் கொள்கின்ற காதைத்திலெ; மல்ஸரிக்குன்ன தென்தினு நாம் வ்ருதா = நாம் ஏன் வீணாக போட்டி போட வேண்டும்; அர்த்தமோ புருஷார்த்தமிரிக்கவே = புருஷார்த்தம் என்கின்ற பெரிய அர்த்தம் இருக்கும்பொழுது; அர்த்தத்தின்னு கொதிக்குன்னதெந்து நாம்? = நாம் ஏன் வீணாக பணத்திற்க்காக பேராசைப் படுகின்றோம்?;

**75. மத்யான்னார்க்க ப்ரகாசம் இரிக்கவே**
**கத்யோதத்தயோ மானிச்சு கொள்ளேண்டு?**
**உண்ணிக்ருஷ்ணன் மனஸ்ஸில் களிக்கும்போள்**
**உண்ணிகள் மற்று வேணமோ மக்களாய்?**

மத்யான்னார்க்கப் பரகாசமிரிக்கவே = சூரியன் உச்சத்திலுள்ள மத்தியானவேளை பிரகாசம் இருக்கும்பொழுது; கத்யோதத்தயோ = மின்மினிப்பூச்சியை; மானிச்சுகொள்ளேண்டு = பெரிதாகக் கருதலாமா; உண்ணிக்ருஷ்ணன் மனஸ்ஸில் களிக்கும்போள் = உண்ணிக்கண்ணன் மனதில் விளையாடும்பொழுது; உண்ணிகள் மற்று வேணமோ மக்களாய் = மக்களாக வேறு குழந்தைகள் தேவையா;

**76. மித்ரங்ஙள் நமுக்கெத்ர சிவ சிவ**
**விஷ்ணு பக்தன்மார் இல்லே புவனத்தில்**
**மாய காட்டும் விலாஸங்ஙள் காணும்போள்**
**ஜாய காட்டும் விலாஸங்ஙள் கோஷ்டிகள்**

மித்ரங்ஙள் = தோழர்கள் / சகாக்கள்; நமுக்கெத்ர சிவ சிவ; விஷ்ணு பக்தன் மாரில்லே புவனத்தல் = சிவசிவ/ நமக்குத் தேவையான நண்பர்கள் அனைவரும் விஷ்ணு பக்தர்களாக பூமியில் உள்ளனரே; மாய காட்டும் விலாஸங்ஙள் காணும்போள் = மாயை செய்யும் விசித்திரங்களைப் பார்க்கும்போது;

**77. புவனத்திலே பூதிகளொக்கெயும்**
**புவனம் நமுக்காயது இதுதன்னே**
**விச்வநாதன் பிதாவு நமுக்கெல்லாம்**
**விச்வதாத்ரி சராசரமாதாவும்**

புவனத்திலெ பூதிகளொக்கெயும் = உலகத்திலுள்ள அனைத்து அனுபூதிகளும்; புவனம் நமுக்காயதிதுதன்னெ = உலகம் நமக்கு போதிப்பது இதுதான். விஸ்வநாதன் பிதாவு நமுக்கெல்லாம் = நமக்கெல்லாம் பிதாவாக ஸாக்ஷாத் விஸ்வநாதனும்; விச்வதாத்ரி சராசரமாதாவும் = அனைத்து சராசரங்களுக்கும் மாதாவாக ஜகத் தாத்ரியான ஸர்வேச்வரியும்;

78. **அச்சனும் புனர் அம்மயுமுண்டல்லோ**
**ரக்ஷிச்சீடுவானுள்ள நாளொக்கெயும்**
**பிக்ஷான்னம் நல்லொரு அன்னவுமுண்டல்லோ**
**பக்ஷிச்சீடுகதன்னெ பணியுள்ளு?**

அச்சனும் புனரம்மையுமுண்டல்லோ = அப்பா அம்மாவாக உள்ளனரே; ரக்ஷிச்சீடுவானுள்ள நாளொக்கெயும் = நாம் இருக்கின்ற நாள் வரையில் நம்மை ரட்சிப்பதற்க்காக; பிக்ஷான்னம் நல்லொரன்னவு முண்டல்லோ = பிட்சை (பிக்ஷை) எடுத்துக்கிடைக்கின்ற நல்ல உணவும் இருக்கின்றதே; பக்ஷிச்சீடுக தன்னெ பணியுள்ளு = உண்பது மட்டும்தானெ நாம் செய்ய வேண்டியது;

79. **ஸக்தி கூடாதே நாமங்ஙள் எப்போழும்**
**பக்தி பூண்டு ஜபிக்கணம் நம்முடெ**
**ஸித்தகாலம் கழிவோளம் ஈவண்ணம்**
**ஸ்ரத்தயோடே வஸிக்கேணம் ஏவரும்**

ஸக்திகூடாதெ = இடைவிடாது / சோம்பலில்லாமல், நாமங்ஙளெப் போழும் = திருநாமங்களை எப்பொழுதும்; பக்திபூண்டு = பக்தியுடன்; ஜபிக்கணம் = ஜபம் செய்ய வேண்டும்; நம்முடெ ஸித்தகாலம் கழிவோளமீவண்ணம் = நமக்குக் கிடைக்கப்பட்டுள்ள வாழ்நாளில் இப்படி முடிந்த அளவு; ஸ்ரத்தயோடெ வஸிக்கேணமேவரும் = அனைவரும் பக்திசிரத்தையுடன் வாழவேண்டும்;

80. **காணாகுன்ன சராசரா ஜீவியே**
**நாணம் கைவிட்டு கூப்பி ஸ்துதிக்கணம்**
**ஹர்ஷாஸ்ரு பரிப்லுதனாயிட்டு**
**பருஷாதிகளொக்கே ஸஹிச்சுடன்**

காணாகுன்ன சராசரஜீவியெ = கண்ணால்காணமுடிகின்ற அனைத்து சராசர ஜீவன்களையும்; நாணம் கைவிட்டு = வெட்கத்தை கைவிட்டு; கூப்பிஸ்துதிக்கணம் = இருகரம் கூப்பி துதிசெய்யவேண்டும்; ஹர்ஷாஸ்ரு பரிப்ளுதனாயிட்டு = கண்களில் கண்ணீர் மல்கிக்கொண்டு (ஆனந்த பாஷ்பம்); பருஷாதிகளொக்கெ = ஏளனப்பேச்சுக்களையெல்லாம்; ஸஹிச்சுடன் = பட்டும்படாமல் அனுபவித்துவிட்டு;

**81. ஸஜ்ஜனங்ஙளேக் காணுன்ன நேரத்து**
**லஜ்ஜ கூடாதே வீணு நமிக்கணம்**
**பக்தி தன்னில் மூழ்கிச் சமஞ்ஞுடன்**
**மத்தனேப்போலே ந்ருத்தம் குதிக்கணம்**

ஸஜ்ஜனங்ஙளெக்காணுன்ன நேரத்து = ஸஜ்ஜனங்களைக் காணும்போது; லஜ்ஜகூடாதெ வீணுநமிக்கணம் = லஜ்ஜையில்லாமல் விழுந்து வணங்குதல் வேண்டும்; பக்தி தன்னில் முழுகிச் சமஞ்ஞுடன் = பக்திவெள்ளத்தில் மூழ்கித் திளைத்து; மத்தனேப்போலெ ந்ருத்தம் குதிக்கணம் = உன்மத்தனைப்போல் நாட்டியமாடி குதிக்கவேண்டும்;

**82. பாரில் இங்ஙனே சஞ்சரிச்சீடும்போள்**
**ப்ராரப்தங்ஙள் அசேஷம் ஒழிஞ்ஞீடும்**
**விதிச்சீடுன்ன கர்மம் ஒடுங்ஙும்போள்**
**பதிச்சீடுன்னு தேஹம் ஒரேடத்து**

பாரிலிங்ஙனெ = உலகத்திலிந்தப்படி; ஸஞ்சரிச்சீடும்போள் = வாழ்க்கைப் பயணத்தை நடத்தும்போது; ப்ராரப்தங்ஙளசேஷமொழிஞ்ஞீடும் = ப்ராரப்தகர்மங்கள் மிச்சமீதியில்லாமல் அனைத்தும் ஒழிந்துவிடும்; விதிச்சீடுன்ன கர்மமொடுங்ஙும்போள்= நமக்கு விதிக்கப்பட்ட கர்மங்கள் ஒடுங்கும்போது; பதிச்சீடுன்னு தேஹமொரேடத்து = தேஹம் (சரீரம்) ஓரிடத்தில் வீழ்ந்து விடுகின்றது;

**83. கொதிச்சீடுன்ன ப்ரம்மத்தேக் கண்டிட்டு**
**குதிச்சீடுன்னு ஜீவனும் அப்போதே**
**ஸக்திவேறிட்டு ஸஞ்சரிச்சீடும்போள்**
**பாத்ரமாயில்ல என்னது கொண்டேதும்**

கொதிச்சீடுன்ன = ஆசைப்பட்ட; ப்ரம்மத்தெக்கண்டிட்டு = பிரம்மத்தைக் கண்டபின்; குதிச்சீடுன்னு ஜீவனுமப்போழே = ஜீவனும் அப்போதே குதித்துக் கூத்தாடுமே; ஶக்திவேறிட்டு =உயிர் பிரிந்து;ஸஞ்சரிச்சீடும்போள் = பிரயாணம் செய்யும்பொழுது; பாத்ரமாயில்லென்னது கொண்டேதும்; (பகவானின் க்ருபைக்குப்) பாத்திரமாகவில்லையே என்று;

**84. பரிதாபம் மனஸ்ஸில் முழுகேண்டா**
**திருநாமத்தின் மாஹாத்மியம் கேட்டாலும்**
**ஜாதி பார்க்கில் ஒரு அந்தியஜனாகிலும்**
**வேதவாதி மஹீஸுரனாகிலும்**

பரிதாபம் மனஸ்ஸில் முழுகேண்டா = பரிதாபம் / சோகம் மனதில் நிறைய வேண்டாம்; திருநாமத்தின் மாஹாத்ம்யம் கேட்டாலும் = பகவானின் திருநாமங்களின் மஹிமையைக் கேளுங்கள்; ஜாதி பார்க்கில் = ஜாதியைப் பார்த்தால்; ஓரந்த்யஜனாகிலும் = ஒருவன் கீழ்மட்டத்தில் பிறந்தவனாக இருந்தாலும்கூட; வேதவாதி = வேதங்களைக் கற்ற வைதிகனானாலும்; மஹூஸுரனாகிலும் = பிராமணனாக இருந்தாலும்;

**85. நாவு கூடாதே ஜாதன்மார் ஆகிய**
**மூகரேயங்ஙொழிச்சுள்ள மானுஷர்**
**எண்ணமற்ற திருநாமங்ஙள் உள்ளதில்**
**ஒன்னுமாத்ரம் ஒரிக்கல் ஒருதினம்**

நாவுகூடாதே ஜாதன்மாராகிய = நாவில்லாமல் (பேசமுடியாமல்) பிறந்தவர்களாகிய; மூகரெயங்ஙொழிச்சுள்ள மானுஷர் =ஊமைகளைத் தவிர இதர மானுடர்கள் அனைவரும்; எண்ணமற்ற திருநாமமுள்ளதில் = எண்ணற்ற திருநாமங்களுள்ளவற்றில்; ஒன்னுமாத்ரமொரிக்கலொருதினம் = ஒன்றுமட்டுமாவது ஒரு வேளை ஒருதினம்;

**86. ஸ்வஸ்தனாயிட்டு இரிக்கும் போளெங்கிலும்**
**ஸ்வப்னத்தில் தானறியாதேயெங்கிலும்**
**மற்றொன்னாயி பரிஹஸிச்செங்கிலும்**
**மற்றொருத்தர்க்கு வேண்டியென்னாகிலும்**

ஸ்வஸ்தனாயிட்டிரிக்கும்பொழெங்கிலும் = ஸ்வஸ்தமாக ஓரிடத்தில் அமர்ந்திருக்கும்போதாவது; ஸ்வப்னத்தில் = கனவில் / சொப்பனத்தில்; தானறியாதெயெங்கிலும் = தன்னையறியாமலாகவாவது; மற்றொன்னாயி = வேறு எதையோ கருதி; பரிஹஸிச்செங்கிலும் = பரிகாசமாகவாவது / கேலியாகவாவது; மற்றொருத்தர்க்கு வேண்டியென்னாகிலும் = வேறு எவருக்காகவாவது (அல்லது மற்றவர்கள் நம்மை கவனிக்கவேண்டும் என்பதற்காக);

**87. ஏதுதிக்கில் இரிக்கிலும் தன்னுடே**
**நாவுகொண்டு இது சொல்லியென்னாகிலும்**
**அதுமல்ல ஒருநேரம் ஒருதினம்**
**செவி கொண்டிது கேட்டுவென்னாகிலும்**

ஏது திக்கிலிரிக்கிலும் = எந்த திக்கில் இருந்தாலும்; தன்னுடெ = தன்னுடைய; நாவு கொண்டிது சொல்லியென்னாகிலும் = நாவினால் இதை (திருநாமத்தை) சொன்னோமேயானால்; அதுமல்லொரு நேரமொருதினம் = அதுவுமில்லை ஒருநேரம் ஒருதினம் செவிகொண்டிது கேட்டுவென்னா கிலும் = காதினால் நாமத்தை கேட்டால்கூட;

**88. ஜன்ம ஸாபல்யம் அப்போழே வன்னுபோய்**
**ப்ரம்ம ஸாயுஜ்ஜியம் கிட்டீடும் என்னல்லோ**
**ஸ்ரீதராசார்யர் தானும் பறஞ்ஞிது**
**பாதராயணன் தானும் அருள் செய்து**

ஜன்மஸாஃபல்யமப்பொழே வன்னுபோய் = அப்போதே அந்தக்ஷணமே ஜன்மஸாஃபல்யம் வந்துவிடும்; ப்ரம்மஸாயூஜ்யம் = பிரம்மஸாக்ஷாத்காரம்; கிட்டீடுமென்னல்லோ = கிடைத்துவிடும் என்றல்லவா; ஸ்ரீதராசார்யர் தானும் பறஞ்ஞிது = ஸ்ரீதராசாரியர் அவர்கள் இதைத்தானே சொன்னார்; பாதராயணன் தானுமருள் செய்து = பாதராயணர் கூட இதைத்தான் அருளிச் செய்தார்;

**89. கீதயும் பறஞ்ஞீடுன்னதிங்ஙனே**
**வேதவும் பஹு¬மானிச்சு சொல்லுன்னு**
**ஆமோதம் பூண்டு சொல்லுவின் நாமங்ஙள்**
**ஆனந்தம் பூண்டு ப்ரம்மத்தில் சேருவான்**

கீதயும் பறஞ்ஞீடுன்னதிங்ஙனெ = பகவத்கீதையும் இவ்வாறே சொல்கின்றது; வேதவும் பஹுமானிச்சு சொல்லுன்னு = வேதங்களும் மிக உயர்வாகச் சொல்கின்றன; ஆமோதம் பூண்டு = உத்ஸாகத்துடன்; சொல்லுவின் நாமங்ஙள் = பகவானின் திருநாமங்களைச் சொல்லுங்கள்; ஆனந்தம் பூண்டு = ஆனந்த பரவசராக; ப்ரம்மத்தில் சேருவான் = பரப்ரம்மத்தில் சேருவதற்க்கு;

**90. மதியுண்டெங்கில் ஒக்கே மதியிது**
**திருநாமத்தின் மாஹாத்யமாம்இது**
**பிழயாகிலும் பிழகேடென்னாகிலும்**
**திருவுள்ளமருள்க பகவானே**

மதியுண்டெங்கிலொக்கெ மதியிது = புத்தியிருப்பின் இது மட்டுமே போதும்;திருநாமத்தின் மாஹாத்யமாமிது = இது திருநாமத்தின் மாஹாத்மியம் ஆகும்; பிழயாகிலும் = பிழையாக இருந்தாலும் பிழகேடென்னாகிலும் = பிழையற்றதாக இருந்தாலும்; திருவுள்ளமருள்க பகவானே = திருவுள்ளம் அருள வேண்டுமே பகவானே!

**91. பிழயாகிலும் பிழகேடென்னாகிலும்**
**திருவுள்ளமருள்க பகவானே.**

**ஹரி ஓம்**

பிழைகள் உடையதாக இருந்தாலும் பிழையற்றதாக இருந்தாலும் இந்தக் க்ருதியானது உனது திருவுள்ளத்தின் ப்ரீதியாக இருக்கவேண்டுமே பகவானே!



# ‘ஞானப்பான’ ஸாராம்சம்

க்ருஷ்ண க்ருஷண முகுந்தா ஜனார்த்தனா
க்ருஷ்ண கோவிந்த நாராயணா ஹரே
அச்சுதானந்த கோவிந்த மாதவா
சச்சிதானந்த நாராயணா ஹரே

நமது நரஜன்மமானது ஸஃபலமாவதற்கு நம் நாவில் எப்போதும் பகவானின் திருநாமங்கள் பிரியாமல் / அகலாமல் இருப்பதற்கு நம் குருநாதர் அருள்செய்து துணையாக இருப்பாராக. நேற்றுவரை (அதாவது முந்தைய ஜன்மா) என்ன நடக்கும் என்பது தெரியவில்லை. இனி நாளைக்கும் (அடுத்த் பிறவிகளில்) என்ன நடக்கும் என்பதோ, இந்த சரீரத்திற்கு எப்போது நாசம் சம்பவிக்கும் என்பதோ ஏதும் அறியோம்.

நாம் அன்றாடம் பார்த்துக் கொண்டேயிருக்கும் ஜனங்களை இல்லாமல் செய்பவன் பகவான். இரண்டு நான்கு தினங்களில் ஒருத்தரைப் பல்லக்கில் ஏற்றிவைத்து அரசனாக்குவதும் பகவானே. பெரிய மாளிகையின் உப்பரிகையில் உட்கார்ந்து கொண்டிருப்பவனின் (தனிகனின்) தோளில் ஒரு நொடியில் கிழிந்த துணிமூட்டையை ஏற்றி வைப்பவனும் பகவானே. ஆனால், சுற்றிலும் நடப்பதை பார்த்து ஒரு சிலரே இந்த உண்மையை அறிகின்றனர். பலரோ பார்த்தும் உண்மையைத் தெரிந்துகொள்வதில்லை.

நம் கண்களுக்குத் தெரிவது எதுவுமே சத்தியமில்லை என்னும் உண்மையை சிலர் முன்கூட்டியே தெரிந்து கொள்கின்றனர். ஆயினும் மனுஷ்யர்களில் பலவிதங்கள் உள்ளதால், மனஸாகப்பட்டது விசேஷமாக பல தரத்தில் உள்ளது என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

எல்லோர்க்கும் தெரியும் பொருட்டு சாஸ்திரங்கள் கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் என்று பலவகையாகச் சொல்கின்றன. கர்மாவுக்கு அதிகாரியாகவுள்ள ஜனங்களுக்காக பலவிதமான கர்மசாஸ்திரங்கள் உள்ளன.

ஸாங்க்ய சாஸ்த்ரங்கள், யோக சாஸ்த்ரங்கள் என்று எண்ணற்றவை இருக்கின்றன. அது கிடக்கட்டும் – சுழன்று சுழன்று கொண்டே இருக்கின்ற சம்சார சக்ரத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கின்ற / உழன்று கொண்டிருக்கின்ற நாம் அறிவதற்காக ஞானவான்களான மஹான்கள் பரமார்த்தத்தை அருளிச் செய்துள்ளனர். மிகவும் எளிதாக முக்தி அடைய எல்லோரும் செவிமடுத்துக் கேளுங்கள்.

முதலாவதாக, நம் எல்லோரையும் கட்டிப்போட்டிருப்பது கர்மம் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். பிரபஞ்சம் அனைத்தும் ஒரேயொரு ஜோதிஸ்வரூபத்திலிருந்து, தோன்றியது எதுவும் தன்னில் வந்து பற்றிக் கொள்ளாமல், வேறெதிலும் தான் சென்று பற்றாமல், இவை யாவையையும் வேறு வேறாகப் பார்க்கும் பாமர மக்களுக்கு ஒன்றேயாகக் காட்சிகொடுப்பது. ஒன்றைப்போன்று மற்றொன்று இல்லாதபடியால் ஒன்றோடொன்று பந்தமில்லாமல், ஆனால் அனைத்தும் சேர்த்து அந்த பரம்பொருள் இந்த விச்வத்தை உண்டாக்கியது என்பதை அறிந்து கொள்க.

ஒன்றில் ஒன்று அடங்கிப்போகும் (பிரளயம்) இந்த விச்வத்தில் மீண்டும் ஒன்றைக்கொண்டு சமைத்த விச்வத்தில் கர்மங்கள் மூன்று. அவை பாபகர்மம், புண்யகர்மம், இரண்டும் கலந்த கலவையுமாகும். இப்படி மூன்று விதமாக உள்ள கர்மாவினால் ஜீவன் கட்டிப்போடப்படுகின்றது. புண்யம் என்பது பொன்னாலான சங்கிலி என்றால் பாபமானது இரும்பினால் செய்யப்பட்டது. இரண்டையும் கலந்து செய்த சங்கிலி புண்யபாப மிஸ்ரம் என்பதாகும்.

பிரம்மா முதல் ஈ, எறும்புவரை அனைத்தும் இச்சங்கிலியால் பிணைக்கப்பட்டவை என்பதை அறிவீராக. புவன அந்தியப் பிரளயம் முடியும் வரை ஸ்ருஷ்டி செய்தல் என்கின்ற தனது கர்மபந்தத்தை அ[illegible]றிய பிரம்மாவிற்கும் இயலாது என்பது நிச்சயம். இப்படியே [illegible]தன்[illegible]ர்களும் ஒவ்வொரு [illegible]க்கிலும் அகப்பட்டுக் கிடக்கின்றனர்.

அல்பகர்மிகளான நாமோ ஒவ்வொரு விதமான ஜீவராசிகளாக ஆகின்றோம். நானாவிதமான ஜந்துக்களின் கர்ப்பத்தில் புகுந்தும் வெளிவந்தும், கர்மபலத்தினால் உழலுகின்றோம். நரகத்தில் கிடக்கின்ற ஜீவனானது துரிதங்களெல்லாம் அனுபவித்து, சற்றே ஒடுங்கி மனம் பக்குவமாகி, படிப்படியாக நரஜாதியில் வந்து பிறந்து, ஸத்கர்மங்கள் செய்து, மேலே போய் ஸ்வர்க்கத்தில் இருந்து ஸுகிக்கின்றனர். புண்ணியம் தீர்ந்த பிறகு, எள்ளளவுகூடப் பக்குவப்படாமல் பூமியில் மீண்டும் பிறந்து, துஷ்கர்மம் செய்து இறக்கின்றனர். இறந்தபின் அந்த துஷ்கர்மத்தின் பலனாக மீண்டும் நரகத்தில்போய் வீழ்கின்றனர். ஸுரலோகத்திலிருந்த ஜீவன் இப்படி நரகலோகத்தில் பிராமணனாக ஆகின்றது. சண்டகர்மங்கள் (பாபங்கள்) செய்தவர் சண்டாளராகவும், அசுரர்கள் சுரர்களாகவும் அமரர்கள் மரங்களாகவும் ஆகின்றனர். ஆடு யானையாக இப்படி மாற்றிப். பிறந்து / இறந்து / பிறந்து என்று தொடர்கின்றது. நரி இறந்து நரனாகவும், நாரி இறந்து பேயாகவும், துளிகூட கிருபையேயில்லாதிருந்த அரசன் இறந்து கிருமியாகவும் பிறக்கின்றனர். ஈ இறந்து பூனையாக பிறக்கின்றது. இவை அனைத்துமே ஈச்வரனின் லீலா விலாசங்கள் தான்.

இவ்வாறு கீழ்மேலாக உழன்று திரிகின்ற ஜீவர்கள் பூமியிலிருந்து தான் கர்மங்களைப் பெறுகின்றனர். எண்ணிலடங்காக் கர்மங்கள் இப்பூமியிலிருந்து தான் தோன்றுகின்றன. பிறகு இறந்த பின் பல பல அன்ய லோகங்களில் சென்று, மீண்டும் அவரவர் கர்மபலன்களை அனுபவிக்கின்றனர். கர்மங்கள் முடிந்தபின், பலகாலம் கழித்து, மீண்டும் பிறந்து கர்மாவைப் பெறுகின்றனர். தம்தம் வீடுகளிலிருந்து கொண்டு வந்த தனத்தை வேறொரு இடத்திற்குக் கொண்டு சென்று விற்று உண்பது போல் என்று சொல்கிறார்ப்போல இது உள்ளது. இப்படி கர்மாக்களுக்கு விளைபூமியாக (விளைநிலமாக) இப்பூமி உள்ளது. அதே நேரம் கர்மநாசம் வரவும் வேறெங்கும் சாத்தியமில்லை. இது திண்ணம்.

பக்தர்களுக்கும் முமுக்ஷு ஜனங்களுக்கும், விஷயாஸக்தியுள்ள ஸாதாரண ஜனங்களுக்கும் இச்சிப்பது அனைத்தையும் கொடுக்கும் விச்வமாதா இப்பூமிதான் சிவ சிவ! ஜகத்துக்கெல்லாம் நாதனாகிய விச்வ நாதனின் மூலப் ப்ரக்ருதிதான் பிரத்யக்ஷமாக விளங்குகின்ற இப்பூமி.

இப்பூமியை பாலனம் செய்வதற்காவே பல பல அவதாரங்கள் இங்கு நிகழ்கின்றன என்பதை நினைக்கும்போது விசேஷமாக பதினான்கு லோகங்களிலும் அதி உத்தமம் இப்பூவலகம் தான். இதையே வேதமும், வேதியரும், முனிவர்களும் சிலாகித்துச் சொல்கின்றனர். மேலும் லவணாம்புதி மத்தியிலுள்ள லட்சம் யோஜனை விஸ்தீர்ணமுள்ள ஜம்புத்வீபம், ஸப்தத்வீபம் ஆகியவையை விடவும் பூமி உத்தமம் என்றும் கூறுகின்றனர். ஸப்தத்வீபங்களில் மிகவும் உத்தமமானதும் பூமிதான் என்று மீண்டும் உயர்வாகச் சொல்கின்றனர். பூபத்மத்தின் கர்ணிகையாக (பிந்துஸ்தானம்) பூதரேந்திரன், ஏழு பர்வதங்களில் மேன்மையானதான மேருபர்வதம் அங்குதான் நிற்கின்றது.

பூமியில் ஒன்பது கண்டங்களுள்ளதில் உத்தமமான பாரதபூமியை ஸத்துக்களான மாமுனிவர்கள் கர்மக்ஷேத்திரம் என்று அழைக்கின்றனர். பிரம்மலோகத்தில் இருப்பவர்க்கும்கூட கர்மபீஜமானது இங்குதான் முளை விடவேண்டும். அவ்வாறே கர்மபீஜத்தை அறுத்தெறிந்து (வரட்டிக் களைந்து) ஜன்மம் புனர் இல்லாத நிலையை அடைய வருத்துவதற்க்கும் பாரதம் தான் உத்தமம். பாரதம் தவிர வேறு கண்டங்களில் கர்மநாசம் எளிதல்ல. நிச்சயமாக! பாரத பூமி அவ்வளவு மகிமை வாய்ந்தது என்பதை எல்லோரும் நினைவில் கொள்ள வேண்டும். நான்கு யுகங்களிலும் சிறந்ததான கலியுகம் முக்தி கிடைக்க சுலபமானது. க்ருஷ்ணா, க்ருஷ்ணா, முகுந்தா, ஜனார்த்தனா க்ருஷ்ண கோவிந்த ராமா என்ற திருநாம சங்கீர்த்தனம் தவிர வேறு மார்க்கம் கலியுகத்தில் ஏதுமில்லை என்பதை அறியுங்கள்.

அதையறிந்த மற்ற பதிமூன்று லோகங்களில் உள்ளவர்களும், ஆறு த்வீபங்களில் உள்ளோரும், மற்ற எட்டு கண்டங்களிலுமுள்ளவரும், மற்ற மூன்று யுகங்களில் உள்ளோரும் அங்கெல்லாம் தமக்கு முக்தி சாத்தியமில்லை என்பதறிந்து கலிகாலத்தை, பாரத கண்டத்தைத் தாழ்மையுடன் கைதொழுகின்றனர். அங்கு வந்து ஒரு புல்லாகவாவது பிறக்கும் யோக்யதையைச் சம்பாதிக்க பாக்யம் இல்லாமல் போய்விட்டதே பகவானே என்று ஏங்குகின்றனர். பரதக் கண்டம் தன்னில் பிறந்த ஒவ்வொரு மானுடர்க்கும், கலிக்கும் நமஸ்காரம் என்று மற்றவர்கள் துதிக்கின்றனர்.

எதற்காக இதையெல்லாம் சொல்வது என்றால், இப்பொழுது காலம் கலியுகம் அல்லவா? இப்பிரதேசம் பாரத பூமியல்லவா, நாமெல்லாம் மானுடர்களல்லவா, அதை மிக நன்றாக நிரூபணம் செய்து பயன்பெறுங்கள்

எல்லோரும். ஹரிநாம சங்கீர்த்தனம் இல்லாமல் போகலாமா? நரகங்கள் குறித்த பயம் இல்லாமல் போகலாமா? (நாமம் சொல்ல) நாக்கு வழங்காமல் போகலாமா? ஜன்ம நாசம் இல்லாமல் போகலாமா? கஷ்டம், கஷ்டம், ஜன்மாவை வீணடிக்கின்றோமே? எத்தனையெத்தனை ஜன்மங்களில் பிரயாசைப்பட்டு ஸுக்ருதம் காரணமாக இங்கு வந்து பிறந்தோம்?

எத்தனை ஜன்மாக்கள் மலத்தில் கிருமிகளாகக் கழித்தோம்? எத்தனை ஜன்மாக்கள் ஜலத்தில் நீந்திக் கழித்தோம்? எத்தனை ஜன்மாக்கள் மண்ணிலே ஊர்ந்து கழித்தோம்? எத்தனை ஜன்மா மரமாக நின்றோம்? எத்தனை ஜன்மா ஊர்ந்து நடந்தோம்? எத்தனை ஜன்மா மிருகங்களாகவும் பசுக்களாகவும் கழித்தோம்? இந்த மனுஷ்ய ஜன்மா கிடைப்பதற்கு முன்னர் இத்தனையுமாக கழித்தோமே நாம்? எத்தனை பிரயாசைப்பட்டு இங்கு மாதாவினுடைய கர்ப்பத்திலே விழுந்தோம்? பத்து மாதம் வயிற்றில் கடந்து போனது. பத்து பன்னிரண்டு வருடங்கள் உண்ணியாக (குழந்தையாக)ப் போய்விட்டது. பின்பு பலகாலம் தன்னைத்தானே அபிமானித்துக்கொண்டு (கர்வப்பட்டுக்கொண்டு) பிறகு தன்னையே அறியாதவாறு பலகாலம் கழித்தபின் இனி எத்தனை நாள் இருப்போம் என்பதற்கு எந்த விதமான உறுதியும் இல்லையே? நீர்க்குமிழி போன்று இருக்கின்ற இந்த சரீரத்திலே மூச்சுக்காற்று மட்டும் உணரப்படுகின்றது. நாம் இவ்வாறு அவஸ்தைப் பட்டுக் கொண்டிருக்கின்ற நேரத்தில், நாம் நினைக்காத நேரத்தில் அப்பிராண வாயுவின் சக்தி குன்றிப் போகும் என்று தான் சொல்லவேண்டும். இப்படிப்பட்ட அநித்யமான சமயத்தில் பகவானின் திருநாமத்தை எவரும் கீர்த்திப்பதில்லையே?

சிலர் பட்டம் பதவிகளைச் சொல்லி கலகம் செய்து வெட்க மில்லாமல் திரிகின்றனர். சிலரோ மதத்வேஷத்தைச் சொல்லி (வேறுபாட்டை) யோசித்து யோசித்தே மதிகெட்டு நடக்கின்றனர். வேறு சிலரோ துஷ்டப்பெண்களின் வீடுகளுக்குப் போய் குஞ்சிராமனாக குரங்கைப்போல் ஆட்டம் போடுகின்றனர். சிலர் மாட மாளிகைகளில் சேவகர்களாக வேஷம் பூண்டு நெளிகின்றனர். குடும்பத்தைப் ரட்சிப்பதற்காக காலை முதல் மாலை வரை சாந்தி பூஜைசெய்து வருகின்றனர் (உண்மையான பக்தியில்லாமல் வெறும் பணத்துக்காக பூஜை செய்வதைச் சொல்கின்றார்.) சிலரோ தன்னைப் பெற்ற தாய் தந்தையர்க்கும் கட்டிய மனைவிக்கும் சாப்பாடுகூட கொடுப்பதில்லை. வேறு சிலரோ அக்னிஸாக்ஷியாகக் கட்டின

மனைவியைக் கனவில்கூட நினைத்துப் பார்ப்பதில்லை. இவற்றையெல்லாம் சாதுக்கள் பார்த்து குறை கூறி தண்டிக்கும்போது சிலர் அவர்களைத் தனது சத்ருவைப்போல் கருதிக் கோபப்படுகின்றனர்.

வணக்கத்திற்குக்குரியவர்களைக் காணும்போது சிலர் அவர்களை நிந்தனை செய்கின்றனர். ஒரு சிலர் இந்த விச்வமே தன்னுடைய பேச்சினால்தான் நிலை நிற்கின்றது என்று கருதுகின்றனர். வேறு சிலரோ நான் பிராமணன் ஆகையால் பிரம்மாவும் நானும் ஒன்று என்று குதிக்கின்றனர். சிலர் பெரும்பணம் கிடைக்க வேண்டும் என்று அக்னிஹோத்ராதிகளைச் செய்கின்றனர். சிலர் தங்கம், நவரத்னங்கள் ஆகியவையை மனம்போன போக்கிலே விற்கின்றனர். யானைகள் மீதும் உத்தமமான குதிரைகள் மீதும் வைத்தும், கப்பல் போன்றவற்றிலும் பொருட்களை வைத்து வாணிபம் செய்தும், எத்தனை திரவியம் தேடுகின்றனர். சிவ சிவ!

கட்டுப்பாடில்லாமல் ஊதாரியாக பணத்தில் ஆசை வைத்து எத்தனை நாசத்தைத் தேடுகின்றனர்? செல்வம் எத்தனையிருப்பினும் மனம் ஒருபோதும் திருப்தியடையாது. பத்து கிடைத்தால் நூறு வேண்டும், நூறானால் ஆயிரம் வேண்டும் என்றும் ஆயிரம் பணம் கையில் கிடைத்தாலும் போதாது போதாது என்று ஆசையானது மேலும் மேலும் கொழுந்துவிட்டு எரிகினறது. என்றாலும் சத்துக்களான சாதுக்கள் சென்று யாசித்தால்கூட ஸ்வல்பமாகக் கூடத் தானம் செய்ய மாட்டார்கள் சில துஷ்டர்கள். நாம் இறக்கும்போது ஒருவருக்கும் கட்டிய வஸ்திரம்கூட எடுத்துப்போக இயலாது. எள்ளளவு கூட பச்சாதாபம் இல்லாமல் விசுவாச வஞ்சனை செய்து, செல்வத்திலுள்ள மோஹம் காரணமாக சத்தியத்தைக் கூட விட்டுவிடுகின்றனர். ஆனால் சாதுக்களோ சத்தியம் என்பது பிரம்மமே என்று அறிகின்றனர். சிலர் ஞானத்தினால் அறிய வேண்டியதை அறியாமல் பெரிய வித்வானாக நடிக்கின்றனர். இது குங்குமத்தின் மணம் / மகிமை தெரியாமலேயே கழுதை குங்குமத்தைச் சுமப்பதுபோல் இருக்கின்றது. சற்றே சிந்தித்துப் பார்த்தால் இவை யாவையும் பேராசையால்தான் ஸம்பவிக்கின்றது என்றாகின்றது – க்ருஷ்ணா க்ருஷ்ணா –

எண்ணியெண்ணியே ஆயுள் குறைந்து விடுகின்றது; ஆனால் மோஹமோ ஏறிக்கொண்டே போகின்றது. ஓணம் (பண்டிகை) வந்தது,

விஷு வந்து போனது இன்னும் திருவாதிரை வரவில்லையே? நம் ஜன்ம நட்சத்திரம் கும்பமாசத்தில் அஸ்வதி ஆயிற்றே, விருச்சிக மாதத்தில் ச்ராத்தம் உள்ளதே. அதன் பிறகு சத்யை (விருந்துச் சாப்பாடு) ஒன்றும் இல்லையே, குழந்தை பிறந்து, அது வளர்ந்து, திருமணம் செய்வித்து, அதற்குக் குழந்தை பிறந்து பார்க்கவேண்டும் என்றும், தனக்குச் சொந்தமான நிலத்தில் இனி எப்போதெல்லாம் குத்தகை வசூல் செய்ய வேண்டும் என்றிப்படி யோசித்துக் கொண்டேயிருக்கும்போது திடீர் என்று ஒருநாள் இறந்து விடுகின்றான் – சிவ சிவ – எதற்கு இத்தனை சொன்னேன் என்றால் எல்லோரும் நன்றாகச் சிந்தியுங்கள்.

நம் கர்மங்கள் எத்தனை பெரிய மூட்டை என்பதும், ஜன்மாக்கள் பலபல முடிந்துவிட்டன என்பதும், இது கலியுகம் என்றும், பாரத தேசத்தின் மகிமையும், அதில் வந்து பிறந்தது எத்தனை நாட்கள், அதில் பெரும்பகுதி வீணாகப்போனதும், ஆயுளுக்கு உத்தரவாதம் இல்லாததனால், ஆரோக்கியமாக இருப்போமா என்பதுமே நம் நிலையை என்றாலும் இன்றைக்கு நாமசங்கீர்த்தனம் செய்தால் புருஷார்த்தங்கள் உடனடியாகக் கிடைக்கப்பெறும் என்பதால் இனியும் நரகபயம் வேண்டாம். அந்தப் பயத்தை கைவிட்டுவிடலாம் என்பதும் நிரூபணமாயிருப்பதால், இனியும் காலம் கடத்தாமல் எல்லோரும் நாமசங்கீர்த்தனம் செய்து வைகுண்டத்தை யடையும் மார்க்கத்தைத் தேடுங்கள்.

நாம் சேர்ந்து பிறக்கவில்லை, சேர்ந்து இறப்பதில்லை. இடைப்பட்ட காலத்தில் சந்தித்துக் கொள்பவர்களிடையே ஏனிந்த வீண் போட்டாபோட்டிகள்? புருஷார்த்தமாகிய கைவல்யம் இருக்கும்போது வேறு அர்த்தத்திற்க்காக நாம் ஏன் வீணே ஆசைப்பட வேண்டும்? பகல் சூரியனின் பிரகாசம் இருக்கும்போது விட்டில் பூச்சியின் (மின்மினிப்பூச்சி) (கத்யோதம்) வெளிச்சத்தையா பெரிதாகக் கருதவேண்டும்?

உண்ணிக்ருஷ்ணன் மனதில் விளையாடும்போது உண்ணிகளாக (குழந்தைகள்) வேறு வேண்டுமா?

விஷ்ணு பக்தர்களைத் தோழர்களாகக் கொள்ளாமல் வேறு எத்தனை தோழர்கள் இருந்து என்ன பயன்? சிவ சிவ!

மாயையின் சேஷ்டைகளைப் பார்க்கும்போது பத்தினியின் சேஷ்டைகள் வெறும் துச்சம். இத்தனையிருப்பினும் அத்தனை போக்ய வஸ்துக்களும், இந்த புவனமும் கூட நமக்காக ஏற்பட்டதுதான். விச்வநாதன் நமக்கெல்லாம் பிதாவாகவும் விச்வதாத்ரி நமக்கு மாதாவாகவும், நம்மையெல்லாம் காத்து ரட்சிப்பதற்கு ஜகன்மாதாவும் ஜகத் பிதாவும் உள்ளனரே. அவர்களால் வழங்கப்பட்ட பிக்ஷான்னத்தை பக்தியுடன் புசிப்பது மட்டுமே நாம் செய்ய வேண்டியது. சோம்பல் படாமல் பகவானின் திருநாமங்களை எப்போதும் ஜபித்துக்கொண்டு, மீதியுள்ள காலத்தையாவது எல்லோரும் பக்தி ஸ்ரத்தையுடன் கழிக்கவேண்டும்.

கண்ணில் காண்கின்ற அனைத்து சராசர ஜீவிகளும் பகவான் என உணர்ந்து, வெட்கத்தை விட்டு கைகூப்பித் துதிக்கவேண்டும். ஹரியை நினைத்து கண்ணீர் மல்கி, நமது இன்ப துன்பங்களைப் பொறுத்துக் கொண்டு மற்றவர்களின் ஏளனப்பேச்சுகளைப் பொறுத்துக்கொண்டு வாழ வேண்டும். ஸஜ்ஜனங்களைக் காண்கின்ற நேரத்திலே வெட்கமில்லாமல் விழுந்து வணங்க வேண்டும்.

பக்தி வெள்ளத்தில் திளைத்து ஓர் உன்மத்தனைப் போல் தன்னை மறந்து துள்ளிக்குதித்து ஆடவேண்டும். இப்படி லோகத்தில் வாழ்ந்து வந்தால் (பக்தியோடுகூட ஈச்வர ஸ்மரணையுடன்) நமது பிராரப்தங்களெல்லாம் துளியும் பாக்கியில்லாமல் ஒழிந்துவிடும். நமக்கு விதிக்கப்பட்ட கர்மாக்கள் முடியும் போது இத்தேஹமானது ஓரிடத்தில் விழுந்துவிடும். நாம் மிகவும் நேசித்து, விரும்பி, ஏங்கித் தவித்த பிரம்மமானது கிடைக்கப்பெற்று, இந்த ஜீவனானது அந்த க்ஷணமே துள்ளிக்குதிக்கும், ஆனந்தக் கூத்தாடும்.

உடம்பிலிருந்து உயிர் வேறுபட்டு சஞ்சரிக்கும் தருணத்தில் பகவானின் கிருபைக்கு பாத்திரமாகவில்லையே என்று மனதில் ஏங்கித் தவிக்க வேண்டாம். பகவானின் திருநாமத்தின் மஹிமையைக் கேளுங்கள்.

வேதம் ஓதும் அந்தணனாகவோ, அல்லது நாலாம் வர்ணத்தவனாகவோ, பிறப்பால் எப்படியிருப்பினும், மானுடர்களாகப் பிறந்த அனைவருமே பகவானின் திருநாமங்களைச் சொல்லவேண்டும். பிறவியில் வாய் பேசமுடியாத நிலையில் உள்ளோருக்கு, அவர்கள் மேல்

கொண்ட கருணை காரணமாக விலக்கு அளிக்கப்பட்டுள்ளது. குலகர்வம், ஐஸ்வர்ய கர்வம், வித்யாகர்வம் ஆகிய செருக்குகளுக்கு ஆளாகாமல், அனைவருமே பகவானின் எண்ணற்ற திருநாமங்களாய் உள்ளவற்றில் ஒன்றை மட்டுமேனும் ஒருநாள் ஒரு பொழுதாகிலும், சும்மா உட்கார்ந்து கொண்டிருக்கும் போதாவது, தன்னையுமறியாமல் கனவிலாவது, எதைப் பற்றியோ பரிஹாஸமாகவாவது (கேலியாகவோ), வேறொருவருக்காக வாவது, எந்தத் திசையில் எங்கு இருந்தாலும், தனது நாவினால் நாமத்தைச் சொல்லவேண்டும். அதுவுமில்லை, ஒருநாள், ஒருநேரம் காதால் நாமத்தை கேட்டுவிட்டால்கூட அப்பொழுதே, அந்தக்ஷணமே ஜன்மஸாபல்யம் ஏற்பட்டு, பிரம்மஸாயூஜ்ஜியமே கிடைத்துவிடும் என்று தானே ஸ்ரீதராசார்யார் சொன்னார். பாதராயணர் அருளிச் செய்தார், கீதையும் அப்படித்தானே சொல்கின்றது, வேதம்கூட இதைத்தான் மிகவும் உயர்த்திச் சொல்கின்றது.

**ஆகையால் ஹே ஜனங்களே! ஆனந்தமாக பகவானின் திருநாமங்களைச் சொல்லுங்கள். அந்தப் பரபிரம்மத்தில் கலந்துவிடுங்கள். மதியிருந்தால் மட்டும் போதும் (மனமிருந்தால் மார்க்கம் உண்டு). இதுதான் ஸ்வாமியின் திருநாமத்தினுடைய மாகாத்மியம்.**

பிழையானாலும் பிழையற்றதானாலும் திருவுள்ளம் அருள்க பகவானே
பிழையானாலும் பிழையற்றதானாலும் திருவுள்ளம் அருள்க பகவானே.



